மன்ற வெளியீடு : 2.



ஓம்
திருச்சிற்றம்பலம்

# கடவுளால் முடியாத செயல்கள்

ஆக்கியோர் :

புலவர் மாமணி, சித்தாந்த வித்தகர்
முரு. பழ. இரத்தினம் செட்டியார்,
விரையாச்சிலை.



1968

விலை உரூ. 2.







வெளியீடு :

மறைமலை யடிகள் மன்றம்

புன்செய் புளியம்பட்டி ✻ கோவை மாவட்டம்.

முதற்பதிப்பு, 1968.

கிடைக்குமிடங்கள் :—

1. மறைமலை யடிகள் மன்றம்: புன்செய்ப் புளியம்பட்டி கோபிவட்டம், கோவை மாவட்டம்.
2. நூலாசிரியர், 12-B. சாலன் முகமட் சாலே பத்துப்பகாட், மலேசியா. (12-B, Jalan Mohd. Salleh, Batupahat, Malaysia)
3. சைவசித்தாந்த மகாசமாசம், 12-கிழக்கு மாடத் தெரு, மயிலாப்பூர் சென்னை-4.
4. அ. சம்பந்தம் செட்டியார், நல்வழிக்கழகம், அரிமளம், புதுக்கோட்டைப்பிரிவு திருச்சி மாவட்டம்.
5. பழநியப்பா புத்தகநிலையம், இராசாத்தெரு, கோவை.
6. மெர்க்குரி புத்தகநிலையம், கருப்பக்கவுண்டர் தெரு, கோவை.

சென்னை இரிப்பன் அச்சகம் (மதராஸ் ரிப்பன் பிரஸ்,)
புதுக்கோட்டை.

454

சிவமயம்.

... அடிகள் திருத்தாள் போற்றி!

# பதிப்புரை

இந்நிலவுலகில் உள்ள நாடுகள் பலவற்றுள் நம் இந்தியத் திருநாடு கடவுள் வழிபாட்டிலும் மெய்ப்பொருளாராய்ச்சியிலும் சமய உணர்விலும் சீரியதாய்ச் சிறந்து விளங்குகிறது. இதற்குக் காரணம் இத்தெய்வத் திருநாட்டில் தான் கல் தோன்றி மண் தோன்றாக் காலம் முதல் சான்றோர்களும், ஆன்றோர்களும், முனிவர்களும் தோன்றி மொழி, கலை, நாகரிகம், பண்பாடு ஆகியவற்றோடு சமய உணர்வையும் ஊட்டியிருக்கின்றனர். நமது சமயம் பொதுவாக 'இந்து சமயம்' என்று வழங்கப்படுகிறது. எனினும் நம் தமிழ்த் திரு நாட்டில் தோன்றித் தமிழர் சமயமாக விளங்குவது "சைவ சமயம்" எனப்படும் சிவநெறியே ஆகும். சிவநெறி, திருமால் நெறி ஆகிய இரண்டும் தமிழர் சமயமே ஆகும். திருமால் நெறி சிவநெறியினின்றும் தோன்றியதென்பதே அறிஞர்கள் முடிவு.

உலகின் கண்ணுள்ள வேறு எச் சமயத்திற்கும் இல்லாத தனிப்பெரும் கொள்கைகளைக் கொண்டு 'சைவசித்தாந்தம்" இலங்குகிறது. சைவசித்தாந்த நூல்கள் பதினான்கு ஆகும். அவை சிவஞானபோதம், சிவஞான சித்தியார், சிவப்பிரகாசம் முதலியனவாகும். இம்மெய்ந்நூல்கள் சமய உண்மைகளை நம் பகுத்தறிவிற்கு ஏற்ற வகையிலும் அறிவியல் உண்மைகளுக்கு ஏற்ற முறையிலும் மிக ஆழ்ந்து சென்று விளக்குகின்றன. நம் சித்தாந்த நூல்கள் மட்டுமே மிக்க நுண்ணறிவினோரும், பிற சமயத்தினரும் விடுக்கும் நுணுக்கமான வினாக்கட்கு அளவை நூல் முறை பிறழாது விடைகள் கூறுகின்றன. மேனாட்டறிஞர் போப்பையர் அவர்கள் "சைவசித்தாந்தம் - தென்னக மக்களின் பேரறிவின் பெருவிளைவு" என்று குறிப்பிடுகின்றார். இத்தகைய சிறப்பு மிக்க நம் 'சைவசித்தாந்த' உண்மைகளை எல்லாரும் எளிதில் உணர்ந்து பயன்பெறுதற் பொருட்டுப் புலவர் மாமணி, சித்தாந்த வித்தகர் - தமிழ்த்திரு. முரு. பழ. இரத்தினம் செட்டியார் அவர்களால், "சித்தாந்தம்" இதழி

லும், வேறு சிலவற்றிலும் எழுதப் பெற்றுள்ள ஏழு கட்டுரை களைத் தொகுத்து ஒரு நூலாக இப்பொழுது வெளியிடு கிறோம். எங்களைச் சைவசித்தாந்தத்தின் பால் மிக்க நம்பிக்கையும் ஈடுபாடும் கொள்ளச் செய்து, இறை யுணர்வை ஊட்டி, வழிபாட்டில் பேருக்கத்தை விளைவித்தவை இந்நூலின்கண் அடங்கியுள்ள கட்டுரைகளேயாகும். இக் கட்டுரைகளைப் பயில்வோர் அறியாமை நீங்கப்பெற்றுத் தெளிவடைந்து இறையுணர்வு கொள்வர் என்பது திண்ணம். கடவுள் இல்லை என்னும் கொள்கையுடையோர் பலர் இக் கட்டுரைகளைப் பயின்று கடவுளுணர்ச்சியும் சமய உணர்வும் பெற்று வழிபாடாற்றி வருகின்றனர். நாங்கள் மட்டு மல்லாது தமிழ் கூறு நல்லுலகத்தின் கண் வாழும் எல்லாரும் படித்துப் பயன்பெற வேண்டும் எனக்கருதியே இவற்றைத் தொகுத்து எங்கள் மன்றச் சார்பில் அடக்கவிலைக்கு ஒரு நூலாக வெளியிடுகிறோம். ஏற்கனவே ஆசிரியரவர்களால் எழுதப்பெற்ற "தடைகளும் விடைகளும்" என்னும் நூலை மன் றம் வெளியிட்டுள்ளது. அடுத்து இந்நூல் வெளிவருகின்றது.

இதில் அடங்கியுள்ள, "கடவுளால் முடியாத செயல்கள்", "மரம் முந்தியா? வித்து முந்தியா?" "வீடுபேற்றில் மலம் உண்டா?", "கல் ஒரு பிறவியாகுமா?", என்னும் நான்கு கட்டுரைகளும் தமிழ்க்கடல் மறைமலையடிகளாரால் திருப்பாதிரிப் புலியூரில் சிவத்திரு ஞானியாரடிகள் முன்னிலை யில் சைவசித்தாந்த உண்மைகளை உலகெலாம் பரப்புவதற் கென்றே தோற்றுவிக்கப் பெற்ற "சென்னைச் சைவசித்தாந்த மகாசமாசத்தின்" திங்கள் வெளியீடாகிய 'சித்தாந்தம்' என்னும் இதழில் சில ஆண்டுகளுக்கு முன் வெளிவந்தவை யாகும்.

"இறைவனின் இயல்புகள்" என்னும் கட்டுரை ஆசிரியர் புதுச்சேரி சைவசித்தாந்த சமாச மாநாட்டில் ஆற்றிய சொற்பொழிவின் சுருக்கமாகும். "நல்வினையும் தீவினையும்" என்னும் கட்டுரை, சமாசத்தின் வைரவிழா மலரில் வெளி வந்ததாகும். "இறைவனை வேண்டலாமா?" என்னும் கட்டுரை கோலாலம்பூர் (மலேயா) அருள் நெறித் திருக் கூட்டத்தார் வெளியிட்ட சைவப்பெரியார் திரு. கா. இராம

நாதன் செட்டியார் அவர்களின் நினைவு மலரினின்றும் எடுக்கப்பட்டதாகும். இறுதியில் மன்றத்தார் எழுப்பிய ஆறு வினாக்களும் அவற்றிற்கு ஆசிரியர் அளித்த விடைகளும் இணைக்கப்பட்டுள்ளன. நூல்வடிவம் பெற்றமைக்கேற்ப ஆசிரியர் மேற்கண்ட கட்டுரைகளில் சிற்சில மாறுதல்கள் செய்துள்ளார். முதற் கட்டுரையின் பெயரையே நூலுக்கு இட்டுள்ளோம். கட்டுரைகளைத் தொகுத்து நூலாக வெளியிட்டிருக்கிறோமாதலால், சிற்சில கருத்துக்கள் வழி மொழிதலாக அவற்றில் இடம் பெற்றுள்ளன.

சில் வாழ்நாள் பல்பிணிச் சிற்றறிவுடையோர்களாகிய எங்களது அறியாமையினைப் போக்கி ஐயங்களை நீக்கித் தெளிவித்து வரும் பேரறிஞர் - பெருந்தகை - நூலாசிரியர், தமிழ்த் திரு. புலவர் மாமணி சித்தாந்த வித்தகர் முரு. பழ. இரத்தினம் செட்டியார் அவர்களுக்கும், இந்நூற்குச் சீரியதோர் அணிந்துரை நல்கி எங்களை ஆட்கொண்ட - ஆன்றவிந்தடங்கிய கொள்கைச் சான்றோரும், சிறியோர்களது அறியாமையினைப் போக்கி மெய்யறிவு கொளுத்தி வரும் ஆசிரியப் பெருந்தகையுமான மறைத் திரு. ப. சு. மணியம் ஐயா அவர்களுக்கும் எங்கள் வேண்டுகோளுக்கிணங்கி மதிப்புரை எழுதி அளித்த "திருக்கோயில்" ஆசிரியர் திரு. ந. ரா. முருகவேள் எம். ஏ., எம். ஓ. எல். அவர்களுக்கும், இந்நூலினைச் செப்பமாய் அச்சிட்டுதவிய சென்னை இரிப்பன் (மதராஸ் ரிப்பன் பிரஸ்) அச்சகத்தினர்க்கும் எங்கள் பணிவான அன்பு வணக்கங்கள் என்றுஞான்றும் உரித்தாகுக.

பண்டை நல்வினைப் பயனால் இத்தமிழ்த்திரு நாட்டில் பிறந்த எல்லாரும் இந்நூலினை வாங்கிப் பலமுறை பயின்று தமிழர் சமயத்தின் தொன்மையையும், மெய்ம்மையையும், உணர்ந்து இறையருள் பெற்றுப் பிறவாப் பெரு வாழ்வு பெற்றுய்ய வேண்டுமென ஆடகப் பொதுவில் நாடகம் இயற்றும் தில்லையம்பலவாணர் திருவடிகளை வாழ்த்தி இறைஞ்சுகிறோம், ஓம் சிவம்!

இங்ஙனம்
**மறைமலையடிகள் மன்றத்தார்,**
பு. புளியம்பட்டி.

# முன்னுரை

தனித்த மெய்ப்பொருளாராய்ச்சி பொது மக்கள் உள்ளத்தை ஈர்ப்பது அருமை. எனினும் வாழ்க்கையில் இடையூறுகள் தோன்றும்பொழுது, மக்கள் தம்மை அறியாமலேயே மெய்ப்பொருளாராய்ச்சியில் ஈடுபடுவதுண்டு. அவர்கட்கு இந்நூற் கட்டுரைகள் உதவும் என்பது என் நம்பிக்கை.

அம்பலக்கூத்தன் திருவடித் துணைபற்றி, என் ஆற்றல் இன்மையை முற்றிலும் உணர்ந்து, அறிஞர் உலகம் என்ன சொல்லுமோ? என அஞ்சி, அஞ்சி மிக்க பணிவோடு இந்நூற் கட்டுரைகள் எழுதப்பெற்றன என்பதைத் தெரிவித்துக் கொள்ள ஆசைப்படுகிறேன். எத்தனை கரடு முரடான பகுதிகளை இவை கடந்து செல்கின்றன என்பதை மெய்கண்ட நூற் பயிற்சி உடையோர் நன்கு அறிவர். எனவே, அவர்கள் மிக்க பரிவோடு இவற்றை நோக்குவர் என எதிர்பார்க்கின்றேன், குற்றம் பொறுத்தல் அவர்கள் கடன்.

ஆணவமலத் தொடக்கின், காரணம், அதன் இருப்பின் இன்றியமையாமை, நல்வினை, தீவினைப்பயன், மயக்க நுகர்வு உயிர்களுக்குள்ள தனி இயல்பு கற்பிறவி, இத்தை விளைவித்தல் மலம், எண்ணிலி ஆகியவை பற்றி இந்நூல் செய்துள்ள முடிபுகள் தனித்த தன்மையன போலத் தோன்றக் கூடும். ஆனால் இவையாவும் சிவஞான போதப் பேருரை சிற்றுரை, சித்தாந்த மரபு கண்டன கண்டனம், சிவஞான சித்தியார், போற்றிப் பஃறொடை, ஆகிய ஐந்து நூற்களின்றும் தெளித்தெடுக்கப்பட்டவையே ஆகும். கருத்து வேற்றுமை இருத்தல் இயல்பு. எனினும் நடுநின்று ஆராய்ந்தால் ஒத்துப் போகப் பெரிதும் இடமுண்டு. எனவே கருத்து வேற்றுமை கொள்ளும் அறிஞர்கள் மீண்டும் ஒருமுறை இவ்வைந்து நூற்களையும் ஆராய்ந்து பார்க்குமாறு தாழ்மையுடன் வேண்டுகிறேன்.

"சைவ உண்மைகள் எங்கணும் பரவவேண்டும்; இறை அன்பில் யாவரும் திளைக்க வேண்டும்; சமயக் கருத்துக்களில் உள்ள குழப்பங்கள் நீங்க வேண்டும்," என்னும் நோக்கிலேயே இக்கட்டுரைகள் எழுதப்பெற்றன. புன்செய்ப் புளியம்பட்டி அன்பர்கள் சைவப்பணியில் மிக்க ஆர்வத்தோடு ஈடுபட இவை பெரிதும்உதவின என்பதைப் பின்னர் அறிந்து மகிழ்ந்தேன்.

கட்டுரைகளைத் தொகுத்து நூலாக வெளியிட முன்வந்த புன்செய்ப் புளியம்பட்டி மறைமலையடிகள் மன்றத்தினருக்கு என் நன்றி.

முரு. பழ. இரத்தினம்.

விராயாச்சிலை.
20—9—68

# மதிப்புரை

[திரு. ந. ரா. முருகவேள் எம். ஏ., எம். ஓ. எல்.,
ஆசிரியர் : 'திருக்கோயில்', சென்னை.]

'சித்தாந்த சைவப் பெருஞ் செல்வர்' திருவாளர் மு ந. பழ. இரத்தினஞ் செட்டியார் அவர்கள், எழுதிய 'கடவுளால் முடியாத செயல்கள்' என்னும் கட்டுரை நூலைப் படித்துச் சுவைத்தேன்.

இதன்கண் (1) கடவுளால் முடியாத 'செயல்கள். (2) நல்வினையும் தீவினையும், (3) இறைவனின் இயல்புகள். (4) மரம் முந்தியா? வித்து முந்தியா? (5) இறைவனை வேண்டலாமா? (6) கல் ஒரு பிறவியாகுமா? (7) வீடு பேற்றில் மலம் உண்டா? (8) வினாக்களும் விடைகளும் என்னும் கட்டுரைகள் இடம்பெற்றிருக்கின்றன.

இக்கட்டுரைகளிற் பெரும்பாலானவை, முன்பே 'சித்தாந்தம்' என்னும் சிறந்த திங்கள் இதழில் வெளிவந்தவை; அறிஞர்களின் சிந்தனையைத் தூண்டி, அவர்களிடையே ஒரு சில இனிய கருத்துப்போர்களை எழுப்பியவை! தமிழகத்திற்கே சிறப்பாக உரிய சைவசித்தாந்தம் என்னும் அரிய பெரிய மெய்ப்பொருட் கொள்கையின் நுட்பங்களை விளக்கும் முறையில், இக்கட்டுரைகள் அமைந்து விளங்குதல், பெரிதும் பாராட்டி மகிழற்பாலது.

வேகமும் பரபரப்பும் மிக்குப் பெருகிவரும் இந்நாளில், மிகவும் உயர்ந்த - சிக்கலான - நுண்ணிய மெய்ப்பொருட் கருத்துக்களை எண்ணி உணர்வதும், அத்துறையில் மிக்க ஈடுபாடு கொண்டு அதுபற்றிய நூல்களை ஆழ்ந்து ஆராய்வதும், அவ் ஆராய்ச்சி நெறியில் 'உழுதசால் வழியே உழாமல்' புதிய திருப்பு முனைகளிற் புகுந்து, தமது சிந்தனையில் தோன்

றும் கருத்துக்களைச் சிக்கறுத்துத் தெளிவுபெறச் சுவைதுளும்பு மாறு நிரந்தினிது எழுதும் திறம் பெறுவதும், அறிஞர்களுள் ஒரு சிலர்க்கே இயல்வதாகும்!

திருவாளர் முரு. பழ. இரத்தினஞ் செட்டியார் அவர்கள், சைவசித்தாந்த சாத்திரங்களில் மிக அழுந்திய பற்றும், பயிற்சியும் வாய்ந்தவராக விளங்குகின்றார்! தமிழில் முதிர்ந்து நிரம்பிய புலமை இருந்தாலன்றி, சைவசித்தாந்த நூல்களைக் கற்றுணர்தல் என்பது மிகவும் கடினமான செயலாகும். அதுதானும், அம்மெய்ப்பொருள் நூல்களின் நுணுக்கங்களில் நுழைந்து, அவைபற்றிய தடைவிடைகளுடன், தமது நுண்மாண் நுழைபுலம் தோன்ற விரிவாக எடுத்து விளக்குவது என்பது, புலமையுணர்வில் தலைமை நிலை எய்தியவர்களுக்கே இயலுவதாகும். எனின், திருமிகு செட்டியார் அவர்களின் சிறந்த புலமை நலனை, யாவரும் இனிது உணரலாம்!

மெய்ப்பொருள் நூல், பொருள்பற்றிய சிந்தனைகளில், கருத்துவேறுபாடுகள் நிகழ்வது இயல்பு. ஒருவருடைய கருத்துக்கள் அனைத்துமே, ஏனையோர்க்கு முழுதும் உடன்பாடாகும்படி அமைவது அரிது. கருத்து வேறுபாடுகட்கு இடன் இருப்பதே, தத்துவச் சிந்தனை வளர்ச்சியின் சிறப்பியல்பாகும் "எப்பொருள் யார்யார் வாய்க்கேட்பினும், அப்பொருள் மெய்ப்பொருள் காண்பது அறிவு."

எனவே, சிறந்த இனிய நல்லறிஞராகிய திரு. முரு. பழ. இரத்தினஞ் செட்டியார் அவர்களால் எழுதப்பெற்றுள்ள இந் நூல், அறிவு நெறி ஆர்வலர் அனைவரும் படித்து மகிழ்ந்து பயன் கொள்ளத்தக்கதொன்றாகும்! இதனை வெளியிட்டுதவும் கோவைப் புன்செய்ப் புளியம்பட்டி மறைமலையடிகள் மன்றத்தினரின் தொண்டினையும், செந்தமிழ்ச் சிவநெறிப் பண்பாட்டினையும், பெரிதும் போற்றிப் பாராட்டி மகிழ்கின்றேன்.

செந்தமிழ் அறிஞர் சிவநெறி அன்பர்
இரத்தினம் செட்டியார் இயற்றும்
* சிந்தனைச் செல்வத் திரட்டுஎனும் சைவ
சித்தாந்தக் கட்டுரை நூலே.

---

* "கடவுளால் முடியாத செயல்கள்" என்னும் நூலுக்கு மதிப்புரை ஆசிரியர் அளித்த சிறப்புப் பெயர்.

மைந்துயர் புன்செய்ப் புளியம்பட்டி அமைந்த
மறைமலை அடிகள் மன்றம்
அந்தமில் ஆர்வத் தழகுறப் பதித்த (து);
அதன்பெருந் தொண்டுகள் வாழ்க!

சென்னை
7—8—68

ந. ரா. முருகவேள்

ஓம்
அருட்கலை வளர்க

[கோவை அரசினர் கலைக்கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் சிவத்திரு. ப. சு. **மணியம்** அவர்கள் வழங்கிய,]

# அணிந்துரை

"கடவுளால் முடியாத செயல்கள்" என்ற தலைப்புடைய சித்தாந்தத் தெளிவூட்டும் நூலினைப் பயிலும் வாய்ப்புக் கிடைக்கப்பெற்றேன். என் மனக்கினிய செம்மனச் செல்வ மாணவர்கள் மும்மொழி நிலைகண்டுணர்ந்த அறிவுக்கடல் மறைமலையடிகள் மன்றத்தின் சார்பில் இவ்வரிய நூலினை வெளியிட்டுள்ளமை எனக்குப் பெரிதும் மகிழ்வூட்டுகின்றது. அம்மன்றத்தினர் இந்நூற்கோர் அணிந்துரை உதவுமாறு என்னை வேண்டினர்; இஃது அவர்கள் என்மீது வைத்துள்ள கழிபேர் அன்பினையே சுட்டுகின்றது. மன்றத்தினர் இலக்கண நெறிச்சென்று, இலக்கியத் துறைபடிந்து மரபுவழி நின்று சைவமும் தமிழும் தழைத்தினிதோங்க அரும்பணிபுரியுமாறு அருளச் செம்மேனி எம்மானும் சிவனெனும் பெருமானை இறைஞ்சுகின்றேன். அவனருள் மேனின்றுதான் சுரக்க.

இச்சித்தாந்தத் தெளிவுநூல் ஏழு இனிய கட்டுரைகளும் வினாவும் விடையுமாய ஒரு பகுதியும் ஆக எட்டுப்பகுதி கொண்டு இறைவன் எண்குணம் நினைவூட்டி நிற்கின்றது. முப்பொருள் சார்பாக இயற்கையானும் செயற்கையானும் தோன்றற்குரியனவும், தோன்றிக் கிடப்பனவும் ஆய; அறியாமை, ஐயம், திரிபுகளை, அளவை நூல் மரபுபிறழாது அறிவியலும் ஆம் என்ன உடன்படும்படிஅகற்றித் தெளிவூட்டி மெய்யுணர்த்தவல்ல திறத்தது இந்நூல். ஒரு புடைச் சாயாது நடுவாக நின்று கருத்துக்களை ஆய்ந்து நன்முடிவு கூறலை நூலில் பலவிடத்தும் காணலாம். "கடவுளால் முடியாத செயல்கள்" என்ற தலைப்பில் முப்பொருள் உண்மைகளும் அவற்றின் இயல்புகளும் பல கூறுகளில் நன்கினிது தெளிவுறுத்தப்படுகின்றன.

நல்வினை தீவினை என்ற தலைப்பில் மூவகை நுகர்ச்சிகள் ஆய்ந்துகாட்டும் ஆசிரியர்திறம் அவர்தம் நுண்மாண் நுழைபுலப் பெருக்கத்தைத் தெரித்து நின்று ஒளிருகின்றது. "இராசத குணத்தால் தூண்டப்பெற்றுச் செய்யும் வினை தீவினை' என்பது, எம்போன்று சித்தாந்தத் தொடக்க நிலையினர்க்கு மேலும் விளக்கித் தெளிவூட்டவேண்டியதாக உள்ளது,

> 'தானம் தவமே தருமம் பேணல்
> ஞானம் கல்வி நலனிவை தெரிதல்
> ஈனமில்லா விராசத குணம்'

என்ற இலக்கணம் போன்றனவற்றோடு மலையாமை காட்டி விளக்க மூட்டப் பெறல் வேண்டும்.

'மரம் முந்தியா? வித்து முந்தியா? என்றது வியப்பான ஒரு பெரு வினாவிற்கு ஆய்ந்து விடை நிறுவியுள்ளது. பலகாற் கூர்ந்து ஓதினும் உணரினும், சித்தாந்த அமைதியாக ஒரு முடிவினைச் சான்றுகாட்டித் தேர்ந்து கொள்கின்றோமன்றி, நம் அறிவின் ஆராய்ச்சி நிலையில் தீர்ந்து தெளிந்து துணிந்த முடிவாய்க் கட்டுரைத்துச் சொல்ல மாட்டாதவரே ஆகின்றோம்; "உயிர்கள் தொன்மையிலேயே பலவேறுவகையான இயல்புகளை உடையன; அவை அவற்றிற்கு இயல்பு எனவே முடித்தல் வேண்டும் போலும்" இவ்வினா மணிமேகலைக் காப்பியத்தும் எழுந்து ஓராற்றான் விடை பெற்றுள்ளது ஒப்பு நோக்கற்குரித்து.

"செயலின் விளைவு எங்ஙனம் இருப்பினும் செய்பவன் சாத்துவிக குண எழுச்சியால் தூண்டப் பெற்றிருந்தானானால் அவன் செய்தவினை நல்வினை என்றே கொள்ளப்படும்; எந்த ஒன்றையும் அது தரும் நுகர்வை வைத்து முடிவு செய்ய வேண்டும். ஒருவருக்கு ஒன்று நல்வினைப் பயனால் வந்ததா? தீவினைப் பயனால் வந்ததா? என்பதை அவர் அதனால் பெறும் நுகர்வை வைத்தே முடிவு செய்யவேண்டும், "இவை" பற்றி நூல் பயில்வார் சிலரும் பலரும் மயங்கல் கூடும்.

இறைவனை வேண்டலாமா? என்பதும் தொடர்ந்த இரண்டும் வினாவாய்ப்பாட்டான் தலைப்பமைந்து பயில்வார்

உணர்வைக் கிளர்வித்து ஊக்கி இயைந்த விடை ஆய்ந்து தருவனவாக அமைந்துள்ளன. கட்டுரைகள் யாவும் சிவஞான போத நூற்பாக்களின் கருத்துக்களைப் பொதுவகையாற் றிரட்டிக் குறித்துச் செல்வன்போல் காணப்படுகின்றன.

ஆசிரியர் தாம் நொசித்துணர்ந்து தெளிந்த சித்தாந்த உண்மைகளை இங்ஙனம் இனிதின் எளிமையொடு விளக்கி மக்கள் வாழ்வில் அகத்தும் புறத்தும் இயல்பாகக் கடைப் பிடிக்குமாறு உலகிற்கு வழங்குவாராக.

அருட்கலை செழிக்க !

"அன்பு இல்லம்"
பேரூர், கோவை-10
12—8—68

அன்பு
ப. சு. மணியம்

# பொருளடக்கம்



தமிழ்க் கடல் நடமாடும் பல்கலைக் கழகம், தனித்
தமிழ்த் தந்தை, மறைத்திரு மறைமலையடி
களாரின் பொன்னார் திருவடிகட்கு
இரண்டாவது **அன்புக் காணிக்கை**



ஆக்கியோர் :

புலவர் மணி, சித்தாந்தவித்தகர்

முரு. பழ. இரத்தினஞ் செட்டியார்

விரையாச்சிலை.

உ
சிவமயம்
— திருச்சிற்றம்பலம் —
திரு உலகநாதன்

# கடவுளால் முடியாத செயல்கள்.

கடவுளால் முடியாத செயல்களும் உண்டா? தலைப்பே வியப்பினை அளித்தல் கூடும். ஒரு நாள் திரு. புரிசை முருகேச முதலியார் அவர்களுடன் பேசிக் கொண்டிருந்த பொழுது, இறைவனால் முடியாத ஒரு செயலை நகைச்சுவை ததும்ப எடுத்துச் சொன்னார்கள்:—

"ஓர் அரசன் தன் ஆட்சியின்கீழ் அடங்கி நடக்காத எந்த ஒரு குடிமகனையும் உடனே தன் எல்லையை விட்டு வெளிக் கடத்திவிட முடியும்; இன்றும் அரசர்கள் நாடு கடத்தல் கட்டளைகள் பிறப்பிப்பதைப் பார்க்கிறோம். ஆனால் இறைவன் தன்கீழ் அடங்கி நடக்காத எந்த உயிரையும் தன் எல்லையை விட்டு வெளிக் கடத்த முடியாது; எல்லாம் அவன் எல்லையே; அவன் இல்லாத இடமில்லை. எங்கே போகச் சொல்வது? எங்கும் இருக்கின்ற நிறைவுத் தன்மையால் பாவம் அவனுக்கு இம் முடியாமை ஏற்படுகிறது"

முருகேச முதலியார் அவர்கள் கூறிய இம் "முடியாமை" இறைவனின் பெருமையை இன்னும் மிகுதியாக நாம் உணரும்படி செய்கின்றதே அன்றி, ஒரு சிறிதும் குறைக்கவில்லை என்பதைச் சொல்லவும் வேண்டுமோ? எனவே, நாமும் இக்கட்டுரையில் இறைவனின் பெருமையை மிகுதிப் படுத்துகின்ற இரண்டு "முடியாமைகளைச்" சைவசித்தாந்த அடிப்படை உண்மைகளுக்கேற்ப எடுத்துக்காட்டி நிறுவ விரும்புகின்றோம்:—

(அ) எல்லா உயிர்களும் உடனே வீடுபேறு எய்தும்படி இறைவனால் செய்ய முடியாது.

(ஆ) உலகில் தீயசெயல்களே நடைபெறாமல் அறவே ஒழித்து நல்ல செயல்கள் மட்டும் நடைபெறும்படி இறைவனால் செய்ய முடியாது.

இனி இம் "முடியாமைகள்" இறைவனுக்கு ஏன் ஏற்படுகின்றன? என்பதை விவரிப்போம். சைவ சித்தாந்த அடிப்படைக் கொள்கைகளையே அலசிப்பார்த்து இம் "முடியாமை" களை நிறுவ வேண்டியிருப்பதால் கட்டுரை சிறிது நீள்வதோடு அறிஞர்களிடையே கருத்து வேற்றுமையையும் எழுப்பக்கூடும். எனினும் தகுந்த சாத்திர அடிப்படைகளை மனத்திற் கொண்டு இயன்றவரை யாவர்க்கும் புரியுமாறு விளக்க முயல்கிறோம்.

உலகில் இன்று மக்களால் பின்பற்றப்பட்டு வரும் ஆத்திக மதங்களில் பல இறைவனே எல்லாவற்றையும் உண்டாக்கினான் என்னும் கொள்கை உடையவனவாய் இருக்கின்றன. "அனைத்தும் ஆண்டவன் படைப்பு" எனச் சொல்வதுதான் அவனுக்குப் பெருமையாக இருக்கும் என்றும் அவை கருதுகின்றன. சைவசித்தாந்தம் உலகை இறைவன் படைத்தான் எனக் கொண்டாலும் அவன் அதனை "மாயை" என்னும் பொருளிலிருந்தே உண்டாக்கினான் என்றும், ஆனால் அந்த 'மாயை' யை அவன் உண்டாக்கவில்லை என்றும், அஃது இறைவனைப் போல யாராலும் உண்டாக்கப்படாத 'என்றும் உள்ள பொருள்' என்றும் கூறுகிறது. அது போலவே உயிர்களையும் இறைவன் உண்டாக்கவில்லையென்றும், அவையும் அவனைப் போல யாராலும் உண்டாக்கப்படாத என்றுமுள்ள பொருட்கள் என்றும் கொள்கி

றது. "இல்லது தோன்ருது" என்னும் சற்காரிய வாத ("உள்ளதே தோன்றும் முறைமை") அடிப் படையில் உயிர்களும், உலக மூலகாரணப் பொருளா கிய மாயையும் என்றும் உள்ள பொருட்களே எனச் சைவசித்தாந்தம் கூறுவதை ஏனை ஆத்திக சமயத்தி னர் அனைவரும் ஒப்புக் கொள்வார்களென எதிர் பார்க்க முடியாது. ஏனெனில் சற்காரியவாதம் அவர் கள் எல்லாருக்கும் உடன்பாடான ஒரு கொள்கை அன்று. எனினும் கடவுள் உண்டென்று கொள்கிற அவர்கள் அனைவரும் ஏற்குமாறு இறைவன் எந்த மூல காரணப் பொருளையும் உண்டாக்கவில்லை என்னும் கருத்தை நிறுவ வழி இருக்கின்றது.

"இறைவன் ஒரு தேவையும் அற்றவன்; எந்தக் குறையும் இல்லாதவன்; பேரருள் நிறைந்தவன்; முழு அறிவும் இன்பமும் உடையவன்" என்று ஆத்திக சமயத்தினர் அனைவரும் கூறுகின்றனர். அப்படியா ஞல் அவன் இவ்வுலகையும் உயிர்களையும் படைக்க வேண்டிய தேவை என்ன? இவைகளால் அவனுக்கு ஆகப்போவது ஒன்றுமில்லை. தன்னை வழிபடுவதற் காக உயிர்களையும், அவை வாழ்வதற்காக உலகை யும் இறைவன் படைத்தான் என்ருல், அவனுக்குப் புகழ்ச்சியிலும், ஆட்சியிலும் விருப்பம் இருக்கிற தெனக் கொள்ளவேண்டியது வரும். இவ்விருப்பத் தால் அவனுக்கு உயிர்களும் உலகமும் தேவைப் படு கின்றன என்ருகி விடும். ஒரு நோக்கமும் இன்றி இவற்றைப் படைத்தான் என்ருல், நோக்கம் இன்றிப் படைத்த படைப்பில் உயிர்களுக்குத் துன்ப உணர்வு தோன்றும்படி படைக்கலாமா? அங்ஙனமாஞல் அவன் கொடியவனு? எனக் கேட்க வேண்டியது வரும். "உலகைப் படைத்தது அவன் விருப்பம்; அதனைக் கேட்க நமக்கு உரிமை இல்லை" என்று சிலர்

சொல்வதுண்டு. அவன் விருப்பம் என்றால் கல்லையும் மண்ணையும் படைத்து விட்டுச் சும்மா இருந்திருக்க லாம். அறிவுணர்ச்சி உள்ள உயிர்களைப் படைத்து அவைகளுக்கு இறப்பு, நோய், துன்பம் முதலிய வற்றை உண்டாக்குவது கொடுமையாகாதா? தனக்கு ஆற்றல் இருக்கிறதென்பதற்காக இப்படி யெல்லாம் படைத்துக் கொடுமைப்படுத்தலாமா? உயிர்களுக்குத் துன்ப நுகர்ச்சி ஏற்படா விட்டால் அவன் எப்படியாவது போகிறான் என்றிருக்கலாம். அங்ஙனம் இன்றிப் பல்வகையான துன்பங்களை உயிர்கள் நுகர்வதால், அவன் ஏன் உயிர்களை உண்டாக்கவேண்டும்? எனக் கேட்க உரிமை இருக் கிறது. "அவன் விதித்த விதிப்படி நடந்தால் நமக்கு இன்பத்தை வழங்குவான்; மாறாக நடந்தால்தான் துன்பத்தை உண்டாக்குவான்; நம்மைப் படைத்து நமக்குத் "தாமாகச் சிந்திக்கும்" அறிவையும் தந் திருக்கிறான். எனவே, அவனைக் குறைசொல்லக் கூடாது" என்று சிலர் கூறுவதுண்டு. என்னதான் விதித்தபடி நடந்தாலும், எவ்வளவுதான் தாமாகச் சிந்தித்து ஒழுங்காக நடந்தாலும் இறப்பும் முதுமை யும் வரவே செய்கின்றன. ஆடு, மாடு, கோழி முத லிய சிற்றுயிர்களுக்குத் தாமாகச் சிந்தித்து நன்மை தீமைகளைப் பகுத்தறியும் அறிவு வன்மையோ, இறைவன் என்ன விதித்தான் என்பதைத் தெரிந்து கொள்ளக் கூடிய வாய்ப்போ இல்லை. அவைகளுக்குத் துன்பம், நோய், இறப்பு முதலியவை ஏற்படக் கார ணம் என்ன? அவை உயிர்கள் அல்ல எனச் சிலர் கருதினாலும் துன்பத்தை அவை நுகர்கின்றன என் பதையும், துன்பத்தை உணரும் அறிவுணர்ச்சி அவைகளுக்கு இருக்கிறதென்பதையும் யாரும் மறுக்க முடியாது. எனவே அந்த "அப்பாவி"

உயிர்களுக்குத் துன்ப உணர்ச்சியைக் கொடுப்பது எல்லையில் இரக்கம் உள்ள இறைவனுக்கு ஏற்ற செயலாகுமா? இவ்வுலகில் நாம் எவ்வளவுக் கெவ்வளவு துன்பத்தை நுகருகின்றோமோ அவ்வளவுக்கவ்வளவு இன்பத்தை மேலுலகத்தில் அவன் நமக்கு வழங்குவான் எனக் குறித்துவ சமய அன்பர்கள் கூறுவதுண்டு. அருள் நிறைந்த இறைவன் எல்லா உலகங்களிலும் இன்பத்தை வழங்கக் கூடாதா? மேலுலகத்தில் மட்டுந்தானா அதனை வழங்க வேண்டும்? மேலுலகத்தில் இன்பத்தை வழங்குவதற்காக இவ்வுலகில் நம்மைத் துன்பமுறச் செய்வது அறமாகுமா? துன்ப நுகர்ச்சி இருந்தால் தான் இன்பத்தை உணர முடியும் என்றால், துன்ப நுகர்ச்சி இல்லாமலே இன்பத்தை உணரும் வகையில் நம்மைப் படைக்கும் ஆற்றல் இறைவனுக்கு இல்லை என்றாகிறதே? அவன் எங்ஙனம் துன்ப நுகர்ச்சி இல்லாமலே இன்பப் பொருளாக என்றும் இருக்கிறானோ அதுபோல நம்மை அவன் படைத்திருக்கக் கூடாதா? நமக்குச் சிந்திக்கும் உரிமையைத் தந்து, சோதனை செய்து, அதன்பின் மேலுலகத்தில் இன்பத்தை வழங்குகிறான் என்றால், ஆடு மாடு கோழிகளுக்குத் துன்ப உணர்ச்சியைக் கொடுத்ததற்குக் காரணம் என்ன? சோதனையின் தன்மை அவைகளுக்கு எங்ஙனம் புரியும்?

நம் நன்மைக்காகவே நம்மை அவன் சோதிக்கின்றானென்றால், செம்மை உடையவர்களாகவே நம்மை அவன் படைத்திருந்தால் சோதிக்க வேண்டிய தேவையே இல்லாமற் போகுமன்றோ? அப்படிச் செய்வதில் சுவையில்லை யென்றால் சுவை யார்க்கு? இறைவனுக்குச் சுவை வேண்டுமா? இறைவனுக்குச் சுவை வேண்டியதில்லை யென்றால், நமக்கும் சுவை

வேண்டாத வகையில் அவன் படைத்திருக்கலாமே? துன்பம் "சைத்தானால்" உண்டாகின்றதென்றால், எல்லாம் வல்ல இறைவன் தன் ஆட்சியில் சைத்தானுக்கு இடம் அளிக்கலாமா? சைத்தானின் பிடிக்குள் அகப்படாத வலிய உள்ளத்தை "ஆதாமுக்கும்" நமக்கும் அவன் ஏன் படைக்கவில்லை?

சிலர் "அவன் உலகையும் உயிர்களையும் ஏன் படைத்தான் என்று சொல்ல முடியாது; அது நம் அறிவுக்கு அப்பாற்பட்டது" எனச் சொல்லித் தப்பித்துக் கொள்ளப் பார்ப்பதுண்டு. படைத்தற்குரிய காரணம் நம் அறிவுக்கு அப்பாற்பட்டதென்றால் அவனே உலகையும் உயிர்களையும் படைத்தான் என்பது மட்டும் நமக்கு எப்படித் தெரிந்தது? அவனே படைத்தான் எனச் சொல்பவர்கள், "ஏன் படைத்தான்?" என்பதற்கும் காரணம் சொல்லித்தானே தீரவேண்டும்? வேறு காரணம் ஒன்றும் சொல்ல முடியாமலிருப்பதை உணர்ந்த சிலர் "இறைவன் திருவிளையாட்டாக (லீலையாக) "உலகையும் உயிர்களையும்" படைத்தான் என்று கூறுவதுண்டு. அவனுக்கு ஏன் விளையாட்டு? மகிழ்ச்சியைப் பெருக்கிக் கொள்ள அவனுக்கு அது தேவைப்படுகிறதா? எனவே இங்ஙனம் கூறுவன எல்லாம் "இறைவன் ஒரு தேவையும் அற்றவன்; எல்லையில் அருள் உடையவன்; எல்லாம் வல்லவன்; எந்தக் குறையும் இல்லாதவன்" எனக் கூறப்படும் இலக்கணங்களுக்கு மாறாக முடிவதைக் காணலாம். தன்னிலே ஒரு குறையும் இல்லாத முழு நிறைவுப் பொருளாகிய இறைவனுக்கு எந்தப் பொருளையும் புதிதாக உண்டாக்க வேண்டிய தேவை எதுவும் இருக்க முடியாது. ஆகவே உயிர்களையும், உலக மூல காரணப் பொருளாகிய மாயையை

யும் அவன் உண்டாக்கவில்லை என்றும், அவைகளும் அவனைப்போல யாராலும் உண்டாக்கப்படாத என்றும் உள்ள பொருட்களென்றும் கொள்வதே, கடவுள் உண்டென்று அவனுக்குப் பெருமையையும் ஏற்றமும் கூறுகின்ற ஆத்திக சமயத்தினர்க்குப் பொருந்துவதாகும். அப்படியானால் மாயையிலிருந்து இறைவன் உலகை உண்டாக்க வேண்டிய தேவை என்ன? உயிர்களுக்கு அம்மாயையிலிருந்து அவன் ஏன் உடல்களைப் படைத்தளிக்க வேண்டும்? துன்ப உணர்ச்சி உயிர்களுக்கு ஏன் உண்டாகிறது? இக் கேள்விகளுக்குரிய விடையைப் பின்னே ஆராய்வோம்.

"திருவிளையாட்டு" எனச்சொல்வது பொருந்தாதென்று சைவசமயத்தினராகிய நீங்கள் எங்ஙனம் சொல்லலாம்? மாணிக்கவாசகப் பெருமான், திருவெம்பாவையில், "காத்தும் படைத்தும் கரந்தும் விளையாடி" என அருளிச் செய்திருக்கின்றாரே?" எனக் கேட்கலாம்.

" இவ்வளவு பெரிய சுமையைச் சுமப்பது சாத்தனுக்கு ஒரு விளையாட்டு," என்றால், அவ்விடத்தில் "விளையாட்டு" என்பதற்கு ஒரு வருத்தமும் இன்றி எளிதாக அந்தச் சுமையை அவன் சுமக்கிறான் என்றுதானே பொருள்? இது போலவே மாயையினின்றும் இவ்வுலகைப் படைத்தல், காத்தல் முதலிய தொழில்களை இறைவன் ஒருவருத்தமும் இன்றி எளிதாகச் செய்கிறான் என்றே இத்திருமொழிக்குப் பொருள் கொள்ள வேண்டும். திருமுறைகளிலும் சித்தாந்த சாத்திரங்களிலும் வேறுபல சைவ நூல்களிலும் வரும் "விளையாட்டு" என்னும் சொல்லுக்கு, "உயிர்களின் பொருட்டு அவை உய்வதற்காகவோ, மகிழ்வதற்காகவோ திருவிளையாட்

டுச் செய்து" என்றும் பொருள் கொள்ளலாம். சைவசித்தாந்தம் உயிர்கள் யாராலும் உண்டாக்கப் படாத என்றுமுள்ள பொருட்கள் என்றும், தனக் கென ஒரு தேவையும் இல்லாத இறைவன் அவை உய்வதன் பொருட்டே செயல்கள் புரிகின்முன் என் றும் கொள்கிறது. எனவே ஒரு காரணமும் இன்றித் திருவிளையாட்டாக இறைவன் உயிர்களையும் உலகை யும் உண்டாக்குகிமுன் எனக் கூறுபவர்கள் திரு முறைகளையோ சித்தாந்த நூற்களையோ, வேறுசைவ நூற்களையோ தமக்கு மேற்கோளாகக் காட்ட இயலாது.

இனிச் சைவசித்தாந்தம் கொள்கின்ற முப் பொருள் உண்மையை அஃதாவது "இறை, உயிர், தளை" என்னும் முப்பொருட்களும் யாராலும் உண் டாக்கப்படாமல் என்றுமுள்ளவை என்னும் கொள் கையை ஒப்புக் கொள்ளாமல்" "இருப்பது பிரமம் ஒன்றே; வேறு பொருட்களே இல்லை" எனக் கூறும் சங்கரர் வேதாந்தம் பற்றிச் சிறிது ஆராய்வோம்.

"இருப்பது பிரமம் ஒன்றே" என்முல் வேறு பொருட்களும் காணப்படுகின்ற காரணம் என்ன? என்று கேட்டால் "அவை வெறும் தோற்றம் மட்டுமே; உண்மையில் பிரமம் ஒன்றுதான் இருக் கிறது" என வேதாந்தம் சொல்கிறது. தோற்றம் யார்க்கு? பிரமப்பொருள் ஒன்று மட்டும்தான் இருந் தால் தோற்றம் அதற்குத்தானே ஏற்பட வேண்டும்? அதற்கு ஏன் இல்லாத பொருட்களின் தோற்றம் ஏற்படுகிறது? அதன் அறிவில் ஏதாவது குற்றம் உண்டா? அறிவில் குற்றமுள்ள பொருளைப் பிரமம் எனச் சொல்ல முடியுமா? பொருட்களை அது வேண்டுமென்றே கற்பனை செய்து கொள்ளுகிற

தென்றால் முழு அறிவுப் பொருளாகிய அஃது இல்லாத பொருட்களைக் கற்பனை செய்து கொண்டு இடர்ப் படலாமா? விளையாட்டாகச் செய்து கொள்ளுகிற தென்றால் மேலே நாம் எடுத்துக் காட்டியவாறு விளையாட்டுச் செய்ய வேண்டிய தேவை அதற்கு என்ன வந்தது? மகிழ்ச்சிக் குறைவா? தன்னிலே முழு இன்பப் பொருளாக நிற்கும் அதற்கு ஏன் விளையாட்டு? கற்பனை செய்து கொள்வது அதன் இயல்பு என்றால் பிரமத்துக்கு அறியாமை இயல் பென்று கொள்ள வேண்டியது வருமே? மாயை என்னும் "அநிர்வசனப்" பொருளால் இஃது ஏற் பட்டது என்றால், வேறு பொருட்களே இல்லையென முன் சொன்னது அடிபட்டுப் போகிறதே? "மாயையைப் பொருளாகவும் சொல்ல முடியாது; பொருள் அன்று என்றும் சொல்ல முடியாது; எனவேதான் அதனை அநிர்வசனம் என்கிறோம்" என்றால் அது வெறும் குழப்பமாகாதா? அப்படியே மாயையால் ஏற்பட்டதென்று வைத்துக் கொண்டா லும் பிரமத்தை மயக்கும் ஆற்றல் மாயைக்கு இருக் கிறதென்று கொள்ள வேண்டியது வருகிறதே? எதனாலும் மயக்கப்பட முடியாத முழு அறிவுப் பொருளாகிய பிரமத்தை அஃது எங்ஙனம் மயக்க முடியும்?

"பிரமம் எதன் பிடியிலும் அகப்படவில்லை; உலகம் உயிர் யாவும் கற்பனை" என்றால் இக்கற்பனை யாருக்கு ஏற்படுகிறது? உயிர்களாகிய நமக்கு ஏற்படு கிற தென்றால் நாம் யார்? நாம் பிரமம் என்றால் நமக்கு ஏன் இந்தக் கற்பனை தோன்றிற்று? அஞ்ஞா னத்தால் (அறிவின்மை) தோன்றிற்றென்றால் பிர மத்திற்கு ஏன் அஞ்ஞானம் (அறிவின்மை) உண்டா யிற்று? உலகம் என ஒன்றிருந்தால் தானே அஃது

எங்ஙனம் தோன்றிற்றென்று சொல்ல வேண்டும்: பிரமம் ஒன்றுதான் இருக்கிறது; உலகம் இருப்பதாகச் சொல்லுவது பொய்" என்றால் "நாம் அறியாத பிரமம் இருப்பது பொய்; நாம் அறிகின்ற இவ்வுலகம் இருப்பது மெய்" என்று எதிர்ப்பக்கத்தவர் சொன்னால் அதற்கு என்ன விடை? சுருதி கூறுகிறதென்றால் உலகமே பொய் என்கின்றபோது அவ்வுலகத்தில் காணப்படும் சுருதி மட்டும் எப்படி மெய்யாகும்? "இருப்பது பிரமம் ஒன்றே" என்னும் சொற்றொடரே மாயா ஒலியிலிருந்து தானே பிறக்கிறது? அஃது எங்ஙனம் உண்மையாகும்? "பிரமம் ஏன் மாயையின் பிடியில் அகப்பட்டதெனச் சொல்ல வராது; அதற்கு விடையே இல்லை" என்றால் "இருப்பது பிரமம் ஒன்றே" என்பதைமட்டும் எப்படிச் சொல்ல முடிந்தது? பிரமஞானிகள் நுகர்ச்சியால் சொல்கிறார்கள் என்றால் முழு அறிவுப் பொருளாகிய "பிரமம்", எனத் தங்களைச் சொல்லிக் கொள்ளும் ஞானிகளுக்குப் பிரமம் ஏன் மாயையின் வயப்பட்டதென்பதற்கு விடை தெரியாமல் போகுமா? விடை தெரியவில்லையென்றால் அவர்களை முழு அறிவு பெற்றவர்கள் என்று எங்ஙனம் சொல்வது? "மெய்ஞ்ஞான நிலையில் இருப்பது பிரமம் ஒன்றே; வியவக்ார நிலையில்தான் வேறு பொருட்கள் காணப்படும்" என்றால் வியவகார நிலை என ஒரு நிலை ஏற்படக் காரணம் என்ன? அறியாமையால் வியவகார நிலை தோன்றுகின்றதென்றால் அறியாமை யாருக்கு? பிரமம் மட்டும்தான் இருக்கிறதென்றால் அறியாமை அதற்குத் தானே ஏற்பட வேண்டும்? வேதாந்திகளில் சிலர் பிரமமே உலகாகவும் உயிர்களாகவும் வடிவெடுத்துக்கொள்ளுகிறதென்று சொல்வதுண்டு. பிரமத்திற்கு வடிவெடுத்துக்கொள்ள வேண்

டிய தேவை என்ன வந்தது? அப்படி வடிவு கொள்வதால் அதற்கு ஏற்படும் பயன் என்ன? பிரம நிலையில் ஏதேனும் குறையிருந்தால் அன்றோ இங்ஙனம் வடிவம் எடுத்துக் கொண்டு தடுமாற வேண்டும்? ஒரு குறையும் இல்லாத அதற்கு ஏன் இந்தத் தொல்லை? மறைகள் "பிரமப் பொருள் ஒன்றுதான் இருக்கிறது" எனக் கூறுவதால், அத்திருமொழியை ஏற்றுக் கொள்ள நாம் கடமைப்பட்டிருக்கிறோம் என்றால், மறைமொழிகட்கு வேறுவகையான விளக்கங்களையும் பெரியோர்கள் செய்திருக்கிறார்களே? அவற்றை ஏன் கொள்ளக் கூடாது? "விவாதங்களால் இதனை விளக்க முடியாது; நுகர்ச்சியால் தான் அறிய வேண்டும்", என்றால் பிரமப் பொருளுக்கு நுகர்ச்சி வேண்டுவதில்லையே? நுகர்ச்சி பெறவேண்டிய பொருள் வேறொன்று இருக்க வேண்டும் என்றாகிறதே? எனவே எத்தனை விதமாக அமைதி கூறிப் பார்த்தாலும் சங்கரர் வேதாந்தம் அடிப்படையிலேயே நிற்க முடியாமல் தடுமாறுவதைக் காணலாம்.

எவ்வளவோ அரிய உவமைகளையும், ஞானநூற் கருத்துகளையும் சங்கரர்தம் பிரம சூத்திர உரையில் எடுத்துக்காட்டியிருக்கிறார். ஆனால் அடிப்படையில் உறுதியான பிடி இல்லாததால் பொருந்தும் முறையில் அவர்தம் கொள்கையை நிலைநாட்ட முடியவில்லை. "சிவானந்த லகரி", "பஜகோவிந்தம்" முதலிய அன்பு நூற்களில் சங்கரர் இறை உண்மையையும் உயிர் உண்மையையும் ஏற்றுக் கொண்டவராகவே காணப்படுகிறார். ஆனால் அவரின் பிரம சூத்திர உரைக்கேற்றவாறே அவர் செய்த இவ்வன்பு நூற்களுக்கும் பொருள் கொள்வது வழக்கமாக இருக்கிறது. இவ்வன்பு நூற்களில் சங்கரர் காட்டும் உறைப்பும் நேர்மையும் பிரமசூத்திர உரையில்

காணப்படவில்லை. பிரமசூத்திர உரை அறிவை மருட்டும் உவமைகளை அடுக்கிக் கொண்டே செல்கிறது. நேரிய முறையில் அளவை நூன்மரபை அது பின்பற்றவில்லை. ஏமாற்றவே அது முயல்கிறது; வேறு பொருட்களே இல்லையென்று அது சொல்வதால் தான் இத்தனை முரண்பாடுகளும் உண்டாகின்றன. "பிரமம் வேறு; உயிர்களே பிறவிக்குள்ளாகின்றன" என்று அது கொண்டிருந்தால் முரண்பாடுகள் தோன்ற இடமில்லை. ஆனால் "உயிர்கள் உண்டு; மாயை உண்டு" எனக் கொண்டு அவற்றை இறைவன் உண்டாக்கினான் எனச் சொன்னாலும் முன் எடுத்துக் காட்டியது போலப் பல குழப்பங்கள் ஏற்படுகின்றன. ஆகவே இறைவனும் உயிர்களும் மாயையும் உண்டு என்றும், ஆனால் உயிர்களையோ மாயையையோ இறைவன் புதிதாக உண்டாக்கவில்லையென்றும், அவையும் அவனைப் போலவே யாராலும் உண்டாக்கப்படாத என்றும் உள்ள பொருட்கள் என்றும் கொள்வதே ஆத்திகப் பெருமக்களுக்கு ஏற்றதாகும்.

இனிக் கடவுளே இல்லையெனக் கூறும் நாத்திக சமயத்தினரையும் ஒரு சிறிது கவனித்துவிட்டு மேற் செல்வோம்.

"காணப்படுகின்ற இவ்வுலகம் எப்படி உண்டாயிற்று? என்று நாத்திக சமயத்தினரைக் கேட்டால் "இவ்வுலகம் இயற்கையாய் என்றும் உள்ளது; இதனை யாரும் உண்டாக்கியதில்லை" என்று கூறுகின்றனர். ஆனால் இவ்வுலகத்தில் உள்ள அறிவற்ற பொருட்கள் எல்லாம் பகுக்கப்படக் கூடியனவாய் இருக்கின்றன என்றும், இவற்றைப் பிரித்துப் பகுத்துக் கொண்டே சென்றால் முடிவில் இவை யாவும் ஓர் அறிவற்ற ஆற்றலாக மாறுகின்றன என்றும்,

மாபெரும் அறிவியல் அறிஞராகிய "ஆல்பர்ட்டு ஐன்சுடின்" (Albert Einstein) முடிவு கண்டிருக்கிறார். இம்முடிபை இன்றைய அறிவியல் அறிஞர்கள் யாரும் மறுப்பதாகத் தெரியவில்லை. அணு ஆற்றலை வெளிப்படுத்தும் வகையால் ஏனை அறிவியலறிஞர் களும் இக்கருத்தை உறுதிப் படுத்தியே வருகின்றனர். ஞாயிறு, திங்கள், விண்மீன் முதலியவை களும் அறிவற்ற பொருட்களே என்றும், யாவும் துவக்கத்தில் ஒரே ஆற்றல் மயமாக நின்றவை என்றும் "ஐன்சுடின்" கூறிய கருத்து அறிவியல் நூற் களில் இப்பொழுது நன்கு வேரூன்றி விட்டதால், கடவுள் உண்மையை அதன் வழி நின்றே நிறுவுவது எளிதாக இருக்கிறது. ஏனெனில் அறிவியல் நூல் வளர்ச்சிக்கு அடிப்படையாய் அமைந்த கீழ்க்கண்ட ஒரு விதியை அறிவியல் உலகம் நீண்ட காலத்திற்கு முன்பே ஒப்புக் கொண்டு கடைப் பிடித்து வருகிறது:-

"அறிவற்ற பொருள் தன் நிலையினின்றும் மாறுதல் அடைய வேண்டுமானால் அதற்குக் காரணம் அந்தப் பொருளிலேயே இருக்க முடியாது; அதனின் வேறாய ஒரு பொருளே அந்த மாறுதலைச் செய்ய வேண்டும்; எடுத்துக் காட்டாகத் தண்ணீர் ஆவியாக மாறுகிறது; அது தானாகவே ஆவியாக மாறாது;- அதனை ஆவியாக்கும் சூடு அதனின் வேறாகவே இருக்க வேண்டும்."

இந்த விதியின்படிதான் இயற்கைப் பொருட்களில் மாற்றம் காணப்படும் பொழுதெல்லாம் அம்மாறுதலுக்குக் காரணம் வேறொரு பொருளாக இருக்க வேண்டும் எனத் துணிந்து, ஆராய்ச்சிகள் செய்து, புதிய, புதிய பொருட்களின் இருப்பை அறிவியல் உலகம் கண்டு பிடித்திருக்கிறது; கண்டு பிடித்தும் வருகிறது. அதன் நுகர்ச்சியில் இந்த விதியென்றும்

பிழைபட்டதில்லை யாதலால், இதனை முடிந்த ஒரு முடிபாக அஃது ஏற்றுக் கொண்டிருக்கிறது. இதே விதியின்படி மேற்குறிப்பிட்ட அறிவற்ற ஆற்றலை இவ்வுலகாக மாற்றும் பொருள் அதனின் வேறாகவே இருக்க வேண்டும். அது தானாகவே உலகாக மாறியிருக்க முடியாது. அறிவற்ற பொருட்கள் எல்லாம் - ஞாயிறு, திங்கள், விண்மீன்கள் முதலிய யாவும் அறிவற்ற ஓர் ஆற்றலாக நின்ற நிலையில் அந்த ஆற்றலை இவ்வுலகாக மாற்றிய பொருள் யாதாக இருக்க முடியும்? எல்லா அறிவற்ற பொருட்களும் ஓர் ஆற்றலாக நிற்கும் பொழுது, அவற்றுள் ஒன்று அதனை உலகாக மாற்றியது எனச் சொல்ல வராது. அடுத்தபடியாக இருப்பவை உயிர்களே. உயிர்களும் அறிவற்ற பொருட்களினின்றும் தோன்றியவைகளே என்னும் உலகாயதக் கொள்கைப்படி வைத்துக் கொண்டால் அவைகளும் மேற்குறிப்பிட்ட அறிவற்ற ஆற்றலாகவே நிற்குமாதலால், அவை இவ்வுலகை ஆக்கி இருக்குமெனக் கூற இயலாது. சைவ சித்தாந்தம் கூறுவது போல அவை அறிவற்ற பொருட்களினின்றும், வேறுபட்ட அறிவுடைப் பொருள்கள் என வைத்துக் கொண்டு ஆராய்ந்தாலும் அவை அந்த ஆற்றலை வியக்கத்தக்க இவ்வுலகாக மாற்றியிருக்கும் எனச் சொல்வதற்கில்லை. உலக அமைப்பின் நுட்பங்களையே இன்னும் தெரிந்து கொள்ள இயலாமல் தடுமாறும் உயிர்கள் உலகத்தையே படைத்திருக்குமென யாரும் சொல்ல முடியாதன்றோ? ஆகவே மூன்றாவதாக உள்ள ஒரு பொருளே இந்த அறிவற்ற ஆற்றலை உலகாக மாற்றியிருக்க வேண்டும் என்பது உறுதியாகிறது. அறிவுடைப் பொருள்களாகிய உயிர்களையும், அறிவற்ற பொருளாகிய ஆற்றலையும் இயைபுபடுத்தி உலகாக மாற்றியிருக்

கும் இயல்பை நோக்கும் பொழுது அந்த மூன்றுவது பொருள் அறிவுடைப் பொருளாகிய உயிரினும் மேம் பட்ட அறிவுடையதாயும், அறிவற்ற ஆற்றலினும் பார்க்க ஆற்றல் மிக்கதாயும் இருத்தல் வேண்டும் என்பதும் தெளிவாகிறது.

அறிவியல் உலகம் தான் கண்டு பிடிக்கும் எல்லா வற்றையும் நேரே கண்ணுல் பார்த்து முடிவுக்கு வருவதில்லை. உலகம் சுற்றுவதை நேரே யாரும் பார்க்க முடியாது. எந்த அறிவியல் அறிஞரும் பார்த்ததில்லை. எந்தக் கருவி கொண்டும் அதனை நேரே பார்க்க வராது. அப்படியிருந்தும் உலகம் சுற்றுகிறதென்று ஐயந்திரிபற எப்படி அறிவியல் உல கம் முடிவுக்கு வந்தது? தக்க ஏதுக்களால் அது சுற் றத்தான் வேண்டும் என முடிவு செய்திருக்கிறது. ஏதுக்களால் செய்யப்பட்ட முடிவுகள் அறிவியல் உலகில் நிறைய உண்டென்பதும், கருவிகளால் நேரே பார்த்துக் கண்ட முடிவுகளுக்கு ஒப்பவே ஏதுக்களால் கண்ட முடிவுகளையும் அஃது ஏற்றுக் கொண்டிருக்கிறதென்பதும் யாவருமறிந்த உண்மை களாகும். ஆகவே, தக்க ஏதுவோடு அறிவியல் உண்மையின்படியே மூன்றுவது ஒரு பொருள் இருந்தே தீரவேண்டும் எனக் கொள்ளும் முடிவை அறிவியல் நூல் மரபுக்கு முரணனதெனச் சொல்ல முடியாது. அறிவியல் நூல் முடிவுகளையும், அதன் மரபுகளையும் எவ்வித மறுப்புமின்றி நாத்திகக் கொள்கையுடைவர்கள் ஏற்பவர்களாதலால், அந்நூல் மரபின்படியே மூன்றுவது ஒரு பொருள் இருந்தே ஆக வேண்டும் எனக் காணும் முடிவை அவர்கள் மறுப்பதற்கில்லை.

உலகைப் படைத்தவர் கடவுள் என்றால், கடவுளைப் படைத்தவர் யார்? என நாத்திக சமயத்தி

னர் கேட்பதுண்டு. ஆனால் அவர்களே, "உலகைப்
படைத்தவர் யாருமில்லை; அஃது என்றும் உள்ளது"
எனக் கூறுகின்றனர். அவர்கள் கூற்றுப்படியே—
ஆனால், அவர்களால் அடிப்படையாகக் கொள்ளப்
படும் அறிவியல் நூல் துணை கொண்டு ஒரு சிறிய
திருத்தம் செய்து - அஃதாவது இவ்வுலகைப் படைத்
தவர் யாருமில்லை என்று கூறாமல், இவ்வுலக
மூலகாரணப் பொருளாகிய அறிவற்ற ஆற்றலை
யாரும் உண்டாக்கியதில்லை என்றும், அஃது என்றும்
நிலையாக உள்ள பொருள் என்றும், அதனை உலகாக
மாற்றும் பொருள் அறிவியல் நூல் உண்மை
யின் படியே அதனின் வேறாக இருக்க வேண்டு
மாதலால், கடவுளாகிய அந்தப் பொருளும் யாராலும்
உண்டாக்கப்படாத என்றுமுள்ள பொருள் என்றும்
நாம் கூறுவதை, நடுநின்று செய்யும் ஆராய்ச்சியின்
முடிவை ஏற்கும் பெருந்தன்மை தங்களுக்கு உண்
டெனக் கூறும் நாத்திகக் கொள்கையுடையாரும்
ஒப்புக்கொள்வதே பொருத்தமாகும்.

## மூலப்பொருள்

ஏதேனும் ஒருபொருள் பிறபொருட் சேர்க்கை
இன்றிப் பகுக்கப்பட முடியாத தனிப் பொருளாய்
இருக்குமானால் அது மூலப்பொருள் என்றும், அதனை
யாரும் புதிதாகப் படைக்க வேண்டுவதில்லை என்றும்,
அஃது நிலையாக என்றும் இருக்கும் என்றும் சைவ
சித்தாந்தம் முடிவுகண்டிருக்கிறது. இம்முடிவை
நாத்திகக் கொள்கையுடையவர்களும் ஏற்பவர்களே
என்பதை "உலகத்திற்கு மூலகாரணமாக விளங்கு
வது இயற்கை; அதனை யாரும் படைக்கவில்லை"
என்னும் அவர்கள் கூற்றே தெளிவாக்குகிறது.
எனவே, இறைவன் பகுக்கப்பட முடியாத மூலப்

பொருள்; அவனை யாரும் உண்டாக்கவில்லை; அவன் என்றும் உள்ளவன்; அதுபோல உலகமூலகாரணப் பொருளாகிய அறிவற்ற ஆற்றலும் பகுக்கப்பட முடியாத பொருளாதலால் அதனை யாரும் உண்டாக்க வில்லை; அஃது என்றும் உள்ளது; ஆனால், அறிவற்ற அந்த ஆற்றல்-தானே வியக்கத்தக்க இவ்வுலகமாக மாறியிருக்க முடியாது. ஆகவே பேரறிவுடைய இறைவனே அவ்வாற்றலினின்றும் இவ்வுலகைப் படைத்திருக்கின்றான் எனச் சைவ சித்தாந்த வழி நின்று கூறுவதை அவர்கள் எங்ஙனம் மறுக்க முடியும்?

உயிர்கள் நின்றுலவும் உடல்கள் கூட்டுப் பொருட்களால் ஆகியிருப்பதை நாம் காண்பதால் அவை படைக்கப்பட்டனவையே ஆகும். எனவே, மூலப் பொருட்கள்போல் அவை என்றும் உள்ளவை எனக் கூறமுடியாது. அவ்வுடல்களில் அமைந்திருக்கும் கண், காது, மனம், புத்தி முதலிய கருவிகளோ மிக வியக்கத்தக்கவையாய் இருக்கின்றன. ஆனால், உயிர் இல்லாவிட்டால் அக்கருவிகட்கு இயக்கம் இல்லை. ஆகவே அக்கருவிகட்கு அறிவு இல்லை என்றும், அக் கருவிகளை இயக்கும் உயிர்க்கே அறிவு உண்டுஎன்றும் கொள்வதில் தவறிருக்க முடியாது. அறிவற்ற இக் கருவிகளும் உடல்களும் அறிவற்ற மாயையிலிருந்தே உண்டாக்கப் பட்டிருக்க வேண்டும். அறிவுடைப் பொருளாகிய உயிர், இக்கருவிகளைப் படைத்துக் கொள்ளும் ஆற்றல் பெற்றதாக இல்லை. அறிவற்ற ஆற்றல் தானே அறிவினைத் தரக்கூடிய இக்கருவிகளைப் படைத்திருக்கும் எனச் சொல்வதும் பொருத்தமாக இல்லை. எனவே, அறிவற்ற ஆற்றலை உலகாக மாற்றி, அவ்வறிவற்ற ஆற்றலினின்றும்

வியக்கத்தக்க இக்கருவிகளைப் பேரறிவும் பேராற்றலும் வாய்ந்த ஒரு பொருளே உயிர்களுக்குப் படைத்தளித்திருக்க வேண்டும் எனக் கொள்வதைக் "குருட்டு நம்பிக்கை" எனக் கூறமுடியுமா? இதனால் பகுத்தறிவுக் கொள்கையினரும் இறைவன் உண்டு என்னும் கொள்கையை மறுப்பதற்கில்லை என்பது இனிது விளங்கும்.

கடவுள் உண்டென்னும் கருத்தை எல்லா மக்களும் புரிந்துகொள்ளும் வகையில் எளிதாக நிலைநாட்ட ஒரு வழி உண்டு. உலகில் உயிரினங்கள் அனைத்தும் பிறந்து, வளர்ந்து, அழிவது கண்கூடு. வளர்ச்சியும் அழிவும் எங்கணும் காணப்படுகின்றன. இவ்விருவகை நிகழ்ச்சிகளும் இயற்கையில் என்றும் உள்ளவை என்றும், இவற்றை நடத்துவிக்க இறைன் ஒருவன் இருக்கவேண்டிய தேவை இல்லையென்றும் வைத்துக் கொள்வோம். வளர்விக்கும் ஆற்றல் அழிப்பிக்கும் ஆற்றலுக்கு நேர் முரணானதாகும். இயற்கையினிடத்தே வளர்விக்கும் தன்மை கூடுதலான வலியுடன் அமைந்திருந்தால் அஃது அழிப்பிக்கும் தன்மையைச் செயல்படவிடாமல் நிறுத்திவிடும்; இதுபோலவே அழிப்பிக்கும் தன்மை கூடுதலான வலியுடன் அமைந்திருந்தால் அது வளர்விக்கும் தன்மையைச் செயல்படவிடாமல் நிறுத்திவிடும். இருவகைத் தன்மைகளும் இயற்கையினிடத்தே ஒத்த வலியுடன் இருந்தால் இருவகைச் செயல்களுமே நடைபெறுமல் போகும். அறிவற்ற பொருட்குத் தன் தன்மைகளை அப்படியே வெளிப்படுத்தத் தெரியுமே அன்றி, விரும்பியவாறு கட்டுப்படுத்தி வெளிப்படுத்தத் தெரியாது. அறிவுடைய பொருளுக்குத்தான் தன் இயல்புகளை விரும்பியவாறு கட்டுப்படுத்திச் செயல்படுத்தத் தெரியும். இயற்கை

அறிவற்ற பொருளாக இருந்தால் அது தன் இரு வகைத் தன்மைகளையும் அப்படியேதான் வெளிப்படுத்தும். அப்படி வெளிப்படுத்தினால் மேலே கூறியவாறு வளர்விக்கும் செயல், அழிப்பிக்கும் செயல் ஆகிய இரண்டனுள் ஏதேனும் ஒரு செயல் தான் நிகழமுடியும்; அல்லது இருவகைச் செயல்களுமே நிகழாமற்போகும். ஆனால், உலகில் இருவகைச் செயல்களும் எப்பொழுதும் நடந்து கொண்டே இருக்கக் காண்கின்றோம். ஆகவே, "இயற்கை அறிவுடைய பொருளாக இருக்க வேண்டும்; அல்லது அதனை அறிவுடைய பொருள் ஒன்று இயக்குவிக்க வேண்டும்" என்றே முடிவு செய்ய வேண்டியதிருக்கிறது. இயற்கையை அறிவுடைப் பொருளாகக் கொண்டாலும் சரி; அதனை அறிவுடைப் பொருள் ஒன்று இயக்குவிக்கிறதாகக் கொண்டாலும் சரி; அது பேரறிவுப் பொருள் ஒன்றின் இருப்பினை ஒப்புக் கொண்டதாகவே முடியும். இப்பேரறிவுப் பொருளே" கடவுள்" என்று சொல்லப்படும். இங்ஙனங் கடவுள் உண்மையை எளிதில் நிலைநாட்டலாம். இயற்கையை அறிவுடைய பொருளாக நாத்திகர் கூறுவதில்லை; அதனை அறிவற்ற பொருளாகவே அவர்கள் கொள்கின்றனர். இதனால்தான் அதினின்றும் உண்டாகிய கல், மண், நீர், நெருப்பு, காற்று முதலியவை அறிவில்லாமல் இருக்கின்றன. இயற்கை அறிவற்ற பொருள் என்பதில் ஆத்திகர், நாத்திகர் ஆகிய யாவரும் ஒருமித்த கருத்துடையவர்களாகவே இருக்கின்றனர். அப்படியானால் அது வளர்வித்தல், அழிப்பித்தல் ஆகிய இரு வகைச் செயல்களையும், செய்ய வழி இல்லை. எனவே அறிவுடைய பொருள் ஒன்றே இவ்விருவகைச் செயல்களையும் இயற்கையினிடத்தே தோற்றுவிக்க

வேண்டும் என்றும், அஃதே கடவுள் என்றும் கொள்வதே பொருத்தமாகும். உலகத்துப் பொருட்கள் அனைத்தும் அழிவதால், இவற்றைத் தோற்றுவிக்கும் அப்பொருள் எல்லையற்ற அறிவுடையதாயும் என்றும் அழியாத இயல்புடையதாயும் இருக்கவேண்டும். அஃதும் அழிவதென்றால் அதனைத் தோற்றுவிக்க மற்றொருபொருள் வேண்டும். இப்படிப் பார்த்தால் முடிவில் இவற்றை எல்லாம் தோற்றுவிக்கும் அழிவில்லாத ஒரு பொருள் இருந்தே ஆகவேண்டும் என்பது தெளிவு. அழிவில்லாத பொருளுக்குத் தோற்றமும் இருக்கமுடியாது. தோற்றமும் அழிவும் இல்லாத பொருள் என்றும் உள்ள பொருளே என்பதைச் சொல்ல வேண்டியதில்லை. இத்தகைய பொருளைக் "கடவுள்" என்றும், அஃது யாராலும் உண்டாக்கப்படாத என்றும் உள்ள பொருள் என்றும் கூறுவதை நேர்மையுள்ள அறிவியல் உலகம் மறுப்பதற்கில்லை.

உலக மூல காரணப் பொருளாகிய இயற்கையை "மாயை" என்று சைவ சித்தாந்தம் கூறுகிறது. ஆனால், "ஐன்சுடின்" கூறிய அறிவற்ற ஆற்றலைத் தான் சைவசித்தாந்தம் "மாயை" எனக் குறிப்பிடுகிறதென்று கொள்ளக்கூடாது. சித்தாந்த அறிஞர்களிடையே இப்பொழுது ஒரு மயக்கம் காணப்படுகிறது. அறிவியல் நூற் கருத்திற்கேற்பவே சித்தாந்த முடிவுகள் இருக்கின்றன என்று சொன்னால், மேல் நாட்டினர்க்கும் அறிவியலார்க்கும் கவர்ச்சியாக இருக்கும் என்னும் நினைப்பில் "சார்லசு தார்வினின்" "உள்ளது சிறத்தல்" போன்ற கொள்கைகளெல்லாம் சித்தாந்தத்திற்கு உடன்பாடெனக் காட்டும் வகையில் விளக்கங்கள் எழுத முற்படுகின்றனர். சில கருத்துக்கள் ஒரோ வழி ஒத்திருக்கக் கூடும்;

ஆனால், அறிவியல் முடிவுகளுக்கு அரண் செய்யாத சித்தாந்தக் கருத்துக்களை வலிந்து சரிசெய்து ஒத்திருப்பது போல மக்கள் கருதும்படி எழுதுவது நேர்மையாகாது. இதனால் சித்தாந்தத்திற்கும் பெருமை இல்லை; அறிவியலுக்கும் பெருமை இல்லை. அந்த அந்த நூல் முடிவுகளை அப்படியே எழுதி, இரண்டும் ஒத்து நிற்கிற இடங்கள் இருக்குமானால் அவற்றை மட்டும் எடுத்துக் காட்டுவதே நேர்மையாகும்.

சித்தாந்தம் உலக மூல காரணப் பொருளாகிய மாயையைச் "சுத்தமாயை", அசுத்தமாயை" என இரண்டாகக் கொண்டு, அவற்றுள் "அசுத்த மாயை" யின் காரியம் "பிரகிருதிமாயை" எனச் சொல்கிறது. அறிவியல் அறிஞர்கள் கூறும் அறிவற்ற ஆற்றல் பிரகிருதி மாயையைச் சார்ந்ததென்றே நாம் நினைக்க வேண்டியதிருக்கிறது. இன்னும் இதுபற்றிய அதிகமான விளக்கங்களை அறிவியல் உலகம் கூறினால் தான் நாம் உறுதியாக ஒரு முடிவுக்கு வரமுடியும். இங்கு "இறைவன் இல்லை" எனக் கூறும் நாத்திக சமயத்தினர் அறிவியல் நூற்களை மட்டுமே ஏற்பவர்களாதலால், அவர்கள் ஏற்கும் நூல் வழி சென்று கடவுள் உண்மையை நிறுவுவதற்காகவே, "அறிவற்ற ஆற்றல்," அளவோடு நின்று ஆராயவேண்டியதாயிற்றென்க.

## உலகப் படைப்பு.

இதுகாறும் இறைவனும் உலக மூலகாரணப் பொருளாகிய மாயையும் என்றும் உள்ள பொருட்கள் என்பதை நிறுவினோம். இனி, "மாயையிலிருந்து இறைவன் உலகைப் படைக்க வேண்டிய தேவை என்ன? உயிர்களுக்கு மாயையிலிருந்து

உடல்களை அவன் ஏன் உண்டாக்குகிறான்? உயிர்களுக்கு ஏன் துன்ப உணர்ச்சி உண்டாகிறது?" என்னும் கேள்விகளுக்குரிய விடையை ஆராய்வோம்.

அறிவற்ற பொருட்களின் சேர்க்கையால் உயிர் உண்டாகுமா? என்பதை ஆராய்ந்த அறிஞர், "சான் டிண்டால்" (Prof. John Tyndall) "Life does not appear without the operation of antecedent life" - அஃதாவது, 'ஓர் உயிர் பிறிதோருயிரின் துணை இன்றித் தோன்றாது,' என முடிவு கூறியுள்ளார். இம்முடிவை அறிவியல் உலகம் இன்னும் மறுக்கத் துணியவில்லை. "உயிர் எங்ஙனம் உண்டாகியிருக்கும் என்பது தெரியவில்லை" என்று தான் அது சொல்கிறதே அன்றி, அறிவற்ற பொருளிலிருந்து அஃது உண்டாகியிருக்கும் எனச் சொல்லவில்லை. அங்ஙனமிருந்தும் சிலர், "உயிர் அறிவற்ற பொருளிலிருந்து உண்டாயிற்று" என அறிவியல் உலகம் கூறுவதாக எழுதுகின்றனர். உலகாயதக் கொள்கையினர் கூற்றை அறிவியல் அறிஞர்கள் கூற்றாகச் சொல்வது தவறாகும், அறிவியல் அறிஞர்களின் முடிவை எவ்வித மறுப்புமின்றி உலகாயதக் கொள்கையினர் ஏற்றுக் கொள்வார்கள்; ஆனால், உலகாயதக் கொள்கையினர் கூற்றை அறிவியல் அறிஞர்கள் ஆராய்ந்து பார்க்காமல் ஏற்பதில்லை.

அறிவியல் நூற்கள், "மலைகள் வளர்வது; கனியங்கள் (உலோகங்கள்) முதிர்வது" போன்ற அறிவில்லாப் பொருள்களின் வளர்ச்சியைக் கெமிய (இரசாயன) வளர்ச்சி என்றும் (Chemical growth), உயிரின வளர்ச்சியைக் (Biological growth) கெமிய வளர்ச்சியினின்றும் முற்றிலும் மாறுபட்ட உயிர் வளர்ச்சி என்றும் வேறு பிரித்தே தெளிவாகக் குறிப்பிட்டு வருகின்றன.

உயிர்களின் வளர்ச்சிபற்றி அறிவியல் நூற்கள் விவரிக்கும் முறையிலிருந்தே அவை அறிவில்லாப் பொருளினின்றும் வேறுபட்டவை என்பது புலனு கிறது. இருப்பினும் இன்னும் ஆராய வேண்டும் என்னும் கருத்தில், "உயிர்கள் எங்ஙனம் துவக்கத் தில் தோன்றியிருக்கும் என்பது தெரியவில்லை," என அறிவியல் உலகம் கூறுகின்றது.

மிக அண்மைக் காலத்தே அறிவியல் அறிஞர் சிலர் சிற்றுயிர்கள் (வைரஸ்கள்) சிலவற்றைச் செயற்கையில் தோற்றுவித்துள்ளனரெனச் செய்தித் தாட்கள் கூறுகின்றன. முழு விவரங்கள் இன்னும் வெளிவரவில்லை. பல்லாண்டுகளுக்கு முன் ஓர் ஆங் கில ஆசிரியர், "அறிவியல் உலகம் உயிரை உண் டாக்கினுலும், அஃது உயிர் புகுதற்குரிய சூழ்நிலை அமைப்பை உண்டாக்கியதாகுமே அன்றி உயிரை உண்டாக்கியதாகாது; ஏனெனில், உயிர் புகுவதை அறிவியல் கருவி கொண்டு எவ்வாற்ருனும் காண வராது," என்று கூறியுள்ளார். இயற்கையை அறி வுடைப் பொருள் ஒன்றே இயக்குவிக்க வேண்டு மெனக் கண்டுள்ள முடிவு அசைக்க முடியாததாகும். எனவே அறிவியல் உலகம் எங்ஙனம் ஆராய்ந்து முடிவு கூறினுலும், இறைவன் உண்டென்பதை அது மறுப்பதற்கில்லை. "இறைவன் உண்டு, மாயை உண்டு' என்பதை ஒப்புக் கொண்டதுமே, உயிர் களும் யாராலும் உண்டாக்கப்படாத என்றும் உள்ள பொருட்கள் என்பதைத்தானே ஒப்புக் கொள்ள வேண்டி வரும்.

இறைவன் இவ்வுலகை மாயையினின்றும் படைக்க வேண்டிய தேவை என்ன? அவனே தேவை யற்றவன்; ஆகவே, அவனுக்கு இவ்வுலகம் வேண்டுவ

தில்லை; மாயையோ அறிவற்ற உயிரில்லாத பொருள்; அதற்கும் இவ்வுலகம் தேவையில்லை. உலகாற் பயன் கொள்ளும் உயிர்கள் இருப்பதை நாம் காண்கிறோம். ஒரு தேவையும் அற்ற இறைவன் இவ்வுயிர்களைப் புதிதாக உண்டாக்க வேண்டிய தேவை எதுவும் இருப்பதற்கில்லை. எனவே, உயிர்களும் யாராலும் உண்டாக்கப்படாமல் என்றும் உள்ளவையாகவே இருக்க வேண்டும்; அவை பயன் கொள்ளும் பொருட்டே மாயையினின்றும் உலகை இறைவன் படைத்திருக்க வேண்டும். இப்படித்தான் இறை இருப்பை ஒப்புக்கொண்டவர்கள் முடிவுக்கு வர முடியும்; வேறு வழி இல்லை.

## உயிர் அறிவுக்கு மறைப்பு:

உயிர்கள் உலகால் அடையும் பயன் என்ன? உலக வாழ்க்கை உயிர்களுக்கு இன்ப, துன்ப நுகர்ச்சிகளை ஊட்டி, அறிவு விளக்கமுறச் செய்கிறது. வாழ்க்கையில் நுகர்ச்சி மிக மிக, அறிவு விளக்கம் மிகுதியாவதைக் காணலாம். உயிர்கள் உடல் பெறுவதற்கு முன்பே அறிவு விளக்கம் பெற்றவையாக இருந்தால், வாழ்க்கையின் வழி படிப்படியே அறிவு விளக்கம் பெறத் தேவை இல்லை. எனவே உடல் பெறுவதற்கு முன் அவை அறிவு விளக்கம் இன்றியே கிடந்திருக்க வேண்டும். அறியாமை உயிர்களின் இயல்பாக இருந்தால் அவை எக்காலத்தும் அறிவு விளக்கம் பெற இயலாது. ஏனெனின் ஒரு பொருளின் இயல்பை எக்காலத்தும் மாற்ற முடியாது. உலகால் உயிர்கள் அறிவு விளக்கம் பெறுவது கண்கூடாதலால், அறியாமை உயிர்களின் இயல்பாக இருக்க முடியாதென்பதும் தெளி

வாகிறது. அறியாமை அவற்றின் இயல்பன்று என்றால், அவை இயல்பாகவே அறிவுடையவை என்றாகிறது. அங்ஙனமானால், அவை ஏன் உலக வாழ்வின் வாயிலாகப் படிப்படியே அறிவு விளக்கம் பெறவேண்டும்? இதனை ஆழ்ந்து சிந்திக்கும்போது உயிர்களின் அறிவை ஏதோ ஒரு பொருள் மறைத் திருக்க வேண்டும் என்பதும், உலக வாழ்வின் வாயி லாக அப்பொருளால் ஏற்பட்ட மறைப்பு, சிறிது சிறி தாக நீங்குகின்றதென்றும், இதனாலேயே அவை படிப்படியே அறிவு விளக்கம்பெற வேண்டியதாகிற தென்றும் நாம் முடிவு செய்ய வேண்டியதிருக்கிறது. நுகர்ச்சியால் உயிர் அறிவு வலிமை பெறுகிறது. ஆனால், நுகர்ச்சி பெற்ற பின்னரும் உயிர் வழுக்கி விழக் காண்கின்றோம். பன்முறை நுகர்ச்சி பெற்ற பின்னரே உயிர் தெளிந்து முன்னேறுகிறது. எனவே நுகர்ச்சியால் வலிமை பெறும் உயிரைப் பன்முறை வழுக்கி விழச் செய்யும் ஒரு தடை இருக்கவே வேண் டும் என்பது புலனாகிறது.

உயிர்களின் அறிவை மறைக்கின்ற பொருள் யாதாக இருக்கலாம்? இறைவன் அம்மறைப்பைச் செய்ய வேண்டிய தேவை இல்லை; அருளாளனாகிய அவன் அதைச் செய்திருக்கவும் மாட்டான். உயிர்கள் உலகால் அறிவு விளக்கம் பெறுவதால், உலக காரணப் பொருளாகிய மாயை அம்மறைப்பைச் செய் திருக்குமெனக் கூற இடமில்லை. அறிவுடைய ஒரு பொருள் உயிர்களின் அறிவை மறைத்திருந்தால் அறிவற்ற மாயையினின்றும் உண்டாகும் உலகால் அவை அறிவுவிளக்கம் பெறமுடியாது. ஆகவே, அறிவற்ற வேறொரு பொருளாலேயே உயிர்களின் அறிவு மறைக்கப்பட்டிருக்க வேண்டும். அறிவற்ற பொருளுக்கு ஒன்றை மறைக்க வேண்டும் என்னும்

எண்ணம் உண்டாக இடமில்லை. இதனால் அவ்வறிவற்ற பொருளின் இயற்கைத் தன்மையே இருள் போன்ற மறைப்பினை உடையதாக இருத்தல் வேண்டும் என்றும் அது முழு நிறைவாக யாண்டும் இருந்தமையால் உயிர்கள் அதனைப்பற்றித் தொன்மையே மறைப்புக்குள்ளாகியிருக்க வேண்டும் என்றும் கொள்ள வேண்டியதிருக்கிறது.

## ஆணவமலம்

உயிர்களின் அறிவை மறைக்கின்ற அவ்வறிவில்லாப் பொருளை யார் உண்டாக்கியிருக்கக் கூடும்? மாயை அறிவில்லாதது; ஆதலால், அதற்கு எப்பொருளையும் தானே உண்டாக்கத் தெரியாது; தம் அறிவை மறைப்பதற்காகத் தாமே ஒரு பொருளை உயிர்களே உண்டு பண்ணிக் கொள்ளும் என்பதும் பொருத்தமில்லை; அருளாளனாகிய இறைவனும் இப்பொருளை உண்டாக்கி இருக்க மாட்டான். எனவே, உயிர்களின் அறிவை மறைக்கின்ற இவ் அறிவில்லாப் பொருளும் யாராலும் உண்டாக்கப்படாத என்றும் உள்ள ஒரு பொருளாகவே இருக்க வேண்டும் என்பது தெளிவாகிறது. இப்பொருளையே, "ஆணவ மலம்" எனச் சைவ சித்தாந்தம் கூறுகிறது.

இயல்பிலேயே அறிவுள்ள உயிர்கள் தொடக்கமில் காலத்தே ஏற்பட்ட ஆணவமல மறைப்பால் அறிவிழந்து கிடப்பது பெரியதொரு துன்பமாகும். இத்துன்பத்தை நீக்க வேண்டுமானால் அவை ஆணவமல மறைப்பினின்றும் விடுபட வேண்டும். எனவே, தொன்மையாக உள்ள உயிர்கள் தொன்மையிலேயே பற்றிய ஆணவமல மறைப்பினின்றும் விடுபட்டு அறிவுவிளக்கம் பெறவேண்டும்

என்பதற்காக, அவ்வுயிர்களின் பொருட்டுத் தனக்கென ஒரு தேவையும் அற்ற இறைவன் அருளே காரணமாக மாயையினின்றும் இவ்வுலகை உண்டாக்கியிருக்கின்றான் என்பது இவ்வாராய்ச்சியால் புலனாகிறது.

"மாயையிலிருந்து இறைவன் உலகைப் படைக்க வேண்டிய தேவை என்ன? உயிர்களுக்கு மாயையிலிருந்து அவன் ஏன் உடல்களைப் படைத்தளிக்க வேண்டும்? துன்ப உணர்ச்சி உயிர்களுக்கு ஏன் உண்டாகிறது?" என்னும் கேள்விகள் மூன்றிற்கும் சைவ சித்தாந்தம் என்ன விடை கூறுகிறது?

"தனக்கென ஒரு தேவையும் இல்லாதிருந்தும், தான் பேரறிவும், பேரருளும் உடையவனாக இருப்பதால், உயிர்கள் தொன்மையே ஆணவமலத்தைப் பற்றி அறிவிழந்து கிடக்கும் நிலைகண்டு இரங்கி, அருள் ஒன்றே காரணமாக, உயிர்களை அம்மலப் பிடிப்பினின்றும் விடுவித்தற்பொருட்டு, மாயையிலிருந்து உலகை இறைவன் படைத்திருக்கிறான்," என்பது முதற்கேள்விக்குரிய விடையாகும்.

"உயிர்கள் அறிவுடைப் பொருட்கள்; அறிவுடைப் பொருட்கள் நுகர்வாலேயே உண்மையைத் தெரிந்துகொள்ளல் வேண்டும்; நுகர்வு பெறுதற்கு அவை செயலாற்றல் வேண்டும்; செயலாற்றுவதற்காகவே உயிர்களுக்கு உடல்களை மாயையிலிருந்து இறைவன் படைத்தளித்திருக்கிறான்" என்பது இரண்டாவது கேள்விக்குரிய விடையாகும்.

"செயலுக்கேற்றவாறு இன்ப, துன்பங்களை ஊட்டினால்தான் உயிர்களுக்கு அறிவுவிளக்கம் உண்

டாகும்; இறப்பு, நோய் ஆகிய துன்பங்கள் நமக்கு வெறுப்பளிக்கின்றன என்பது உண்மையே. ஆனால் கசப்பான மருந்தாக இருந்தாலும் நோய்நீக்கத்திற்கு உண்டுதானே ஆகவேண்டும்? உயிர்கள் ஆணவமல விடுதலை பெறுவதற்கு, இத்துன்ப நுகர்வும் இன்றி யமையாததாக இருக்கிறது. ஆடு, மாடு, கோழிகளும் துன்ப உணர்வால் அறிவுவிளக்கம் பெற்று, மேற்பிற விக்குச் செல்கின்றன. சிறுகச் சிறுக ஓரறிவுயிர் முதல் ஆறறிவுயிர் ஈறாக எல்லா உயிர்களுமே, இன்ப துன்ப நுகர்ச்சிகளால் அறிவுவிளக்கம் பெற்று, ஆணவமலப் பிடிப்பினின்றும் நீங்கி, இறுதியில் இறைவன் அடியை அடைந்து மாறாத பேரின் பத்தை நுகர்கின்றன. ஆகவே யாராலும் படைக்கப் படாத உயிர்களுக்குள்ள இயல்பால் துன்ப உணர்ச்சி யும் ஆணவமல நீக்கத்திற்குத் தேவைப் படுகிறது," என்பது மூன்றாவது கேள்விக்குரிய விடையாகும்.

இறைவனே உயிர்களை உண்டாக்கினான் என்றால்தான், "அவன் ஏன் அவற்றைச் செம்மை யுடையனவாக உண்டாக்கவில்லை? அவற்றை அவன் ஏன் துன்ப உணர்வை ஊட்டிச் சோதனை செய்ய வேண்டும்?" என்பன போன்ற கேள்விகள் எழும். உயிர்கள் என்றும் உள்ளவை என்றால் அவற்றின் இயல்பில் காணப்படும் குறைகளுக்கு இறைவன் பொறுப்பாளியாக மாட்டான். அவை தாமே தம் எளிய இயல்பால் பற்றிக்கொண்ட ஆணவமலப் பிடிப்பினின்றும் விடுதலை பெறவும் அவற்றிற்குப் பேரின்பம் வழங்கவுமே இறைவன் அருள் காரண மாகச் செயலாற்றுகிறான் என்றால், இக்கேள்வி களுக்கு இடமில்லை. உணர்ச்சிவயப்படாமல் ஆழ்ந்து சிந்தித்துப் பார்த்தால் இதனால் அவன் ஆற்றலுக்கோ அருளுக்கோ எவ்வித இழுக்கும் நேரவில்லை என்பது

புலனாகும். ஆகவே, கடவுள், மாயை, உயிர்கள், ஆணவ மலம் ஆகிய பொருட்கள் என்றும் உள்ளவை என்றும், உயிர்களுக்குத் தொன்மையே ஏற்பட்ட ஆணவமலக் கட்டு நீக்கத்தின் பொருட்டே இறைவன் ஐந்தொழில் ஆற்றுகிறான் என்றும் அறிந்துகொள்ள வேண்டும். இதுகாறும் கூறியவாற்றால் எனைச் சமயத்தினரும், வேதாந்திகளும், நாத்திகரும் ஏற்கும் வண்ணம் அளவை நூன்முறை பிறழாமல் தகுந்த ஏதுக்களோடு, சைவசித்தாந்த உண்மைகள் நிறுவப் பட்டமை காணலாம். இனி, ஆணவமலம் பற்றிய சில ஐயங்களை, "வினா—விடை" முறையில் ஆராய்வோம்.

## ஆணவமலம் பற்றிய ஐயந்தெளிவுகள்

1. உயிர்கள் ஏன் ஆணவமல மறைப்புக் குள்ளாக வேண்டும்? செம்பிற் களிம்புபோல் ஆணவ மலம் உயிரை மறைத்ததென்று இதற்கு விடை சொல்லுவது காரண, காரிய முறை பிறழாது ஆராயும் சைவசித்தாந்தத்திற்கு ஏற்றதன்று. உயிர் ஆணவமல மறைப்புக்குள்ளானமைக்கு நிறையக் காரணங்களிருக்கின்றன. இறைவனும் அறிவுடைப் பொருள்; உயிரும் அறிவுடைப் பொருள்; ஆனால், ஆணவமலமோ இறைவன் அறிவை மறைக்கவில்லை; உயிரின் அறிவைமட்டுந்தான் மறைத்து நிற்கிறது; காரணம் என்ன? இறைவன், தானே அறியும் தன்மை வாய்ந்தவன்; நுகர்ச்சி இன்றியே முழுதும் உணரும் இயல்புடையவன்; இயக்கும் பொருட்களில் அழுந்திப் போகாமல் தாக்கற நிற்கும் ஆற்றல் படைத்தவன்; எனவே, அவன் ஆணவமல மறைப்புக்குள்ளாக

வில்லை; உயிரோ, துணையின்றி அறிய முடியாதது; பற்றிய பொருளில் அழுந்திப்போகும் தன்மை வாய்ந்தது; நுகர்ச்சியின்றி உணரமுடியாத அறிவினை யுடையது; இத்தன்மைகளால் உயிர் மிகவும் எளிமை யான அறிவு, விருப்பம், செயல்களை உடையதென் பது நன்கு விளங்கும். என்றுமுள்ளதாயும், நிறை வாயும், இருள்போன்ற மறைப்பினை இயற்கையில் உடையதாயும் இருக்கின்ற ஆணவமலத்தை உயிர் கள் தம் எளிய இயலால் பற்றி மறைப்புக்குள் ளாயின என்றறிதல் வேண்டும். இறைவன் உயிர் களை உண்டாக்கவில்லையாதலால், அவற்றின் அறிவு, விருப்பம், செயல்கள் என்றும் இயல்பிலே உள்ளவை என்பதும், அவற்றை இறைவன் உண்டாக்கவில்லை என்பதும் தாமே போதரும். யாராலும் படைக்கப் படாமல் என்றும் உள்ள உயிர்களின் அறிவு, விருப்பம், செயல்கள் இயல்பிலே எளிமையாயிருப் பதற்கு இறைவன் பொறுப்பாளியாக மாட்டான் என்பதைக் கூறவேண்டுவதில்லை. ஒரு பொரு ளொன்று இருந்தால் அதற்கே உரிய இயல்புகளும் இருக்கவே செய்யும்; உயிர் அறிவுடைப் பொருள்; ஆகவே அதற்கே உரிய அறிவு விருப்பம், செயல்கள் இருக்கவே செய்யும்; உயிர் என்றும் உள்ளதென்னும் போது, அதற்கே உரிய அறிவு, விருப்பம், செயல் களும் என்றும் உள்ளவையாகவே இருக்கும் என்பதை மறக்கக்கூடாது. இவ்வறிவு, விருப்பம், செயல்கள் எளிமையானவையாக இருப்பதாலேயே மலத்தொடக்குக்குள்ளாக வேண்டியநிலை ஏற்படு கிறது.

2. இறைவன் என்றும் இருப்பவனாதலால் எல்லாம்வல்ல அவன், தன் வல்லமையால் உயிர் களின் எளிய இயல்பை மாற்றி அவை தொன்மையே

ஆணவமலத்தால் மறைப்புறுதவாறு செய்திருக்கக் கூடாதா? ஒரு பொருளின் இயல்பை மாற்றுவ தென்பது அப்பொருளையே இல்லாமற் செய்வதாகும். அஃதாவது ஒரு பொருளின் இயல்பு சிறிது மாறினு லும் அப்புறம் அவ்விடத்தில் அந்தப் பொருள் இல்லை; வேறொருபொருள் இருக்கிறதென்றே கொள்ளவேண்டும். இதனை அமெரிக்க நாட்டு மெய்ப் பொருள் நூற் புலவரான "உவில்லியம் சேம்சு" (Prof William James) பின்வருமாறு மிக நன்றாகச் சொல்லியிருக்கிறார் :-

"If any part whatever in an individual were to vanish or alter, it would no longer be that indlividual at all"

[" தனித் தன்மை வாய்ந்த ஓர் உயிரின் ஏதேனும் ஒரு கூறு அழிந்தாலும் அல்லது மாறினலும் அப்புறம் அஃது அந்த உயிராக இருக்கமாட்டாது"]

"உவில்லியம் சேம்சு" கூறும் ஆழ்ந்த இக்கருத்து, சைவ சித்தாந்தத்திற்கு உயிர் போன்றதாகும். உயிர்கள் தொன்மையாக உள்ளவை; எனவே அவை அழியமாட்டா; ஒரு பொருளை அழித்தால் அன்றி அதன் இயல்பை மாற்ற முடியாதாதலால், அழியாத் தன்மை வாய்ந்த உயிர்களினியல்பை மாற்ற முடியா தென்பது தெளிவு. ஆராய்வதற்காக, எல்லாம் வல்ல இறைவன் தன் வல்லமையால் உயிர்களின் இயல்பை மாற்றுகின்றான் என்று வைத்துக் கொள்வோம். உயிர்களின் நிலை என்னவாகும்? ஓர் உயிரின் ஏதே னும் ஒரு கூறு சிறிது மாறினலும், அப்புறம் அஃது அந்த உயிரன்று என்பதை நினைத்துப் பார்க்க வேண்டும். இறைவன் உயிர்களின் இயல்பை மாற்றுவதென்பது அந்த உயிர்களை இல்லாமற்

ஒழித்துவிட்டுப் புதிய உயிர்களை அவ்விடத்தில் தோற்றுவிப்பது என்றாகும். புதிய உயிர்களை உண் டாக்கிப் பார்க்க வேண்டும் என்னும் விருப்போ, தேவையோ இறைவனுக்கு இருக்க முடியாது. இருக்கிற உயிர்களுக்கு இரங்கித் துணை செய்யப் போய் அவைகளை இல்லாமற் போகும்படி தீர்த்துக் கட்டுவது அறிவுடைமையும் அன்று; அருளும் அன்று. இறைவன் எல்லாம் வல்லவனாக மட்டும் இருந்தால் நினைத்தபடி என்ன வேண்டுமானாலும் செய்யலாம். அவன் எல்லையில் அருளும் முற்றறிவும் உடையவனாக இருத்தலால் ஏழை உயிர்களின் இயல் புக்கு ஏற்றவாறே தன் ஆற்றலைப் பயன்படுத்த வேண்டியவனாகிறான். இறைவன் தன்னளவில் எல் லாம் வல்லவனே. ஆனால், உயிர் அளவில் அவன் "எல்லாம் வல்லவன்" என்பதற்குப் பொருள் என்ன? உயிர்கள் என்ன ஆனாலும் சரி என்று நினைத்தபடி யெல்லாம் செய்பவன் என்பது பொருந்தாது. எனவே, அவைகளுக்கு இரங்கி, அவற்றின் இயல்பு களுக்கு ஏற்றவாறு எந்த வகையான உதவிகளைச் செய்தால் அவை ஆணவமலக் கட்டினின்று விடுபடுமோ, அந்த வகையான உதவிகள் எல்லா வற்றையும் குறைவறச் செய்து முடிக்கும் வல்லமை உடையவன் என்று கொள்வதே பொருத்தமாகும். செய்ய வேண்டுவன யாவற்றையும் செய்து முடித் தலே எல்லாம் வல்லமையாகுமன்றிச் செய்ய வேண் டாத செயல்களை — அஃதாவது இருக்கிற உயிர்களை அழித்துவிட்டுப் புதிய உயிர்களை உண்டாக்குவது போன்ற செயல்களைச் செய்வது,, "எல்லாம் வல்லமை" ஆகாது. எனவே, உயிர்கள் தம் எளிய இயல்பால் தொன்மையிலேயே ஆணவமல மறைப்புக்கு உள்ளா வதை இறைவன் தன் வல்லமையால் மாற்றலாம்

தானே எனக் கேட்பதில் பொருள் இல்லாமற் போகிறது. உயிர்களின் இயல்பைத் தன் வல்லமையால் இறைவன் மாற்றினால், அவன் தன் வல்லமையை நிலை நாட்டியவனாக வேண்டுமானால் கொள்ளப்படுவானே அன்றி, என்றும் உள்ள உயிர்களுக்கு நலம் செய்தவனாகக் கொள்ளப்பட மாட்டான்; உயிர்களுக்கு நலம் செய்வதுதான் இறைவன் கருத்தே அன்றித் தன் வல்லமையை நிலை நாட்டுவது அவன் கருத்தன்று; அஃது அவனுக்குத் தேவையும் அன்று. எனவே, என்றும் உள்ள உயிர்களின் இயல்புக்கேற்றவாறே அவன் செயலாற்றுகிறான் என அறிதல் வேண்டும்.

3. உயிர்களின் எளிய இயல்பை மாற்ற முடியாதென்றால் அவை எங்ஙனம் வீடுபேற்றில் ஆணவமல மறைப்பினின்றும் விடுபட முடியும்? உயிர்களின் இயல்புகள் வீடுபேற்றிலும் அப்படியே தாம் இருக்கின்றன; துணைகொண்டு அறியும் அவற்றின் அறிவு அங்கும் இறைவனின் துணைகொண்டுதான் அறிகிறது; பற்றிய பொருளில் அழுந்திப் போகும் அவற்றின் அறிவு எங்ஙனம் தொன்மையே ஆணவமலத்தைப் பற்றி அதனுள் அழுந்தியதோ, அதேபோல் தான் வீடுபேற்றிலும் இறைவனைப்பற்றி அவனுள் அழுந்துகிறது. எனவே, இயல்புகள் மாறவில்லை. இறைவனைப்பற்றி நிற்கும் சார்ச்சிச் சிறப்பால் அவை ஆணவமல மறைப்பினின்றும் விடுபடுகின்றன.

4. தொன்மையிலேயே இறைவன் உயிர்களுடன் ஒன்றாகக் கலந்துதான் இருக்கிறான்; அப்பொழுது ஆணவமலம் உயிர் அறிவை மறைத்திருக்கும் பொழுது வீடுபேற்றில்மட்டும் எங்ஙனம் மறைக்காமல் இருக்கும்?

தொன்மையிலேயே இறைவன் உயிர்களுடன் ஒன்றாகக் கலந்துதான் நிற்கிறான்; அவனுடன் நிற்பி னும் உயிர்கள் அவனைப் பற்றாமல் ஆணவமலத்தைப் பற்றியமையால், பற்றிய பொருளில் அழுந்தி அதன் வண்ணமாகும் இயல்புப்படி அவை ஆணவமல மறைப்புக்குள்ளாயின. வீடுபேற்றில் இறைவனைப் பற்றி அவன் வண்ணமாவதால் அம்மறைப் பினின்றும் விடுபடுகின்றன. ஆணவமலத்திற்கு இறைவனைக் கட்டுப்படுத்தும் ஆற்றல் இல்லை. எனவே, அவன் வண்ணமாக நிற்கும் உயிர்களையும் அது கட்டுப்படுத்த முடியாமல் போகிறது.

5. தொன்மையிலேயே உயிர்கள் ஏன் இறை வனைப் பற்றவில்லை? உயிர்கள் தம் எளிய இயல்பால் அப்பொழுது இறைவனைப் பற்றும் உணர்வு பெற வில்லை; நுகர்ச்சியாலேயே உணர்வுபெறும் எளிய இயல்பு வாய்ந்த உயிர்களின் அறிவு தொன்மை யிலேயே அந்த உணர்வு பெறுததில் வியப்பொன்று மில்லை. நுகர்ச்சி இல்லாத நிலையில் உயிர்களின் எளிய அறிவிற்கு இறைவனைப் பற்றுதல் அருமையாகவும் ஆணவமலத்தைப் பற்றுதல் எளிமையாகவும் இருக் கும் என்பதைச் சொல்ல வேண்டுவதில்லை. அதனால் தான் உயிர்களின் இயல்புக்கேற்றவாறு அவை பற்று தற்கு எளிதாக இருக்கும் மாயா கருவிகளை இறைவன் முதலில் படைத்தளித்து நுகர்ச்சி அறிவு பெறச் செய்கிறான். நுகர்ச்சி அறிவு ஏற ஏற, அவை பற்றும் பொருட்களைத் தேர்ந்தெடுத்துக் கொள்கின்றன. நுகர்ச்சியின் முதிர்ச்சியில் அவைகளுக்கு இறைவனைப் பற்றும் வேட்கை மீதூர்கிறது. அவ்வேட்கையை அறிந்த இறைவன் திருவருளே கண்ணாகக் கொண்டு அவை தன்னை அறிந்து பற்றும்படி செய்கிறான்.

6. இறைவன் தொன்மையிலேயே தன்னைப் பற்றும்படியான உணர்வை உயிர்களுக்கு அளிக்க முடியாதா?

நுகர்ச்சியாலேயே உணர்வு பெறும் தன்மை வாய்ந்த உயிர்களுக்கு நுகர்ச்சியின் மூலம்தான் உணர்வு வரச் செய்யலாம். வலிந்து உணர்வு வரச் செய்யவேண்டுமென்றால், உயிர்களின் அறிவு, விருப்பம், செயல்களை மாற்றியாக வேண்டும். அங்ஙனம் செய்தால் அவை அழிந்து போகும் என்பதை மேலே விளக்கியிருக்கிறோம். உயிர்களின் இயல்பை அறிந்தே இறைவன் துணை செய்ய வேண்டியதிருக்கிறது.

7. உயிர்கள் அறிவுடைப் பொருள்கள் என்று கூறப்படும் பொழுது, அவை நுகர்ச்சியால் உணர்வு பெறும் என்பது எங்ஙனம் பொருந்தும்?

உயிர்கள் அறிவுடைப் பொருள்களாக இருப்பதாலேயே நுகர்ச்சியால் உணர்வு பெறுகின்றன. அறிவு இருந்தால்தான் நுகர்ந்தறியும் உணர்வு பெறலாம். கல், மண் முதலியவற்றிற்கு அறிவில்லாமையால், அவை எந்த நுகர்ச்சியறிவும் பெறுவதில்லை. தனக்கு நிலை பேறான இன்பத்தையளிப்பது எந்தப் பொருள் என்பதை உயிர் பலபொருட்களையும் பற்றிப்பற்றிப் பழக்கத்தாலேயே தெளியவேண்டியிருக்கிறது. இறைவன் ஒருவனே நுகர்ச்சியின்றி எதனையும் உணர வல்லவன்.

8. உயிர்களின் துன்பங்களுக்குப் பழக்கமின்மை காரணமா? ஆணவமலம் காரணமா?

உயிர்கள் தமக்கு நிலைபேறான இன்பம் அளிக்கும் பொருளை நுகர்ச்சியாலேயே தெளிய வேண்டியதிருப்பதால், நுகர்ச்சியின்மை அவை இன்பப்பேற்றை நுகர முடியாமைக்குக் காரணமாகுமே யன்றித்

துன்பத்தை நுகருவதற்கு அது காரணமாகாது. துன்பங்களுக்கெல்லாம் ஆணவமலமே காரண மாகும். அறிவுடைப் பொருளாகிய உயிர் அறியாமை எய்தியது ஆணவமலத்தால் ஏற்பட்ட முதல் துன்ப மாகும். உணர்வின்றிக் கிடத்தலால் அது துன்ப மாகாதே? எனக் கேட்கலாம். மயக்கமுற்றுக் கிடப்பவன் எவ்வித உணர்வுமின்றித்தான் இருக் கிறான்; இருந்தாலும் நாம் ஏன் அவனுக்கு உதவி செய்ய விரைந்து செல்கிறோம்? உணர்வின்மையும் ஒரு துன்பமே யாதலால்தான் நாம் விரைந்து சென்று மயக்கம் தெளிவித்து உணர்வு வரச் செய் கிறோம். ஆகவே, உயிர்கள் ஆணவமலத்தால் உணர் விழந்தது துன்பமேயாகும். உயிர் அறிவுடைப் பொருளாதலால், இன்ப வேட்கை அதற் கென்றும் உண்டு. மலமறைப்பால் உணர்வின்றிக் கிடந்தாலும் அதன் உள்விருப்பை இறைவன் அறியவே செய்வான். துன்பம் மிகுதிப்படும்போது உணர்வற்றுக் கிடக்கும் "மூர்ச்சை" நிலையை உயிர் விரும்புவதற்குக் காரணம் இன்பத்திலுள்ள அதன் வேட்கையே என அறிதல் வேண்டும். இன்பமும் துன்பமும் அற்ற ஒருநிலை அறிவுடைப் பொருளுக்குத் துன்ப நிலையாகவே கொள்ளப்படும். இறை வன் தன்னைப் பற்றும் உணர்வு பெறவில்லையே என்ப தற்காக உயிர்களுக்குத் துன்ப நுகர்ச்சிகளை ஊட்ட வில்லை. உணர்விழந்து கிடக்கும் உயிர்களின் நிலைகண்டு இரங்கி, அவை உணர்வு பெறுமாறு, பற்று தற்கு எளிதாயுள்ள மாயா கருவிகளைப் படைத்தளிக் கிறான். அக்கருவிகளின் துணை கொண்டு உயிர்கள் சிறுகச் சிறுக உணர்வுபெற்று முன்னேறுகின்றன. ஆனால், அப்பொழுதும் ஆணவமல மறைப்பின் காரணமாகத் தவறுகள் செய்து துன்பமுறுகின்றன.

அத்துன்ப நுகர்ச்சிகள் மேன்மேலும் அவற்றின் உணர்வை எழுப்பி மலக்கட்டினின்றும் அவைவிடு படுமாறு உதவுவதால், இறைவனைக் குறை சொல்ல வதற்கு இடமில்லை. எனவே துன்பத்திற்கெல்லாம் ஆணவமலப் பற்றேகாரணமாகும். ஆணவமலப் பிடிப்பினின்றும் விடுபடுவதற்காகவே, ஆணவமலச் சார்பால் செய்யும் தீவினைகளுக்குத் துன்பம் நுகரு மாறு இறைவன் செய்கின்றான். வீடுபேற்றில் உயிர் நுகரும் பேரின்பத்திற்கு ஈடாக எந்த இன்பமும் இல்லையென்பதையும் நாம் நினைவுகூர வேண்டும்.

9. இறைவனால் ஆணவமலக் கட்டினின்றும் உயிர்களை உடனே விடுவிக்க முடியாதா?

உயிர்களின் எளிய இயல்பை மாற்றி அவை களுக்குப் புதிய அறிவு, விருப்பம், செயல்கள் உண்டாகுமாறு செய்தால்தான் உடனே ஆணவமல மறைப்பினின்றும் விடுவிக்கலாம். அங்ஙனம் செய் தால் அவற்றின் நிலை என்னாகும் என்பதை முன்னே விவரித்திருக்கிறோம். இயல்பை மாற்றாமலே செய்ய முடியாதோ? எனக் கேட்கலாம். உயிர்கள் தம் எளிய இயல்பாலேயே ஆணவமலத்தைப்பற்றி நிற்கின்றன. பழக்கத்தின் மூலம் உணர்வு பெறுவது அவ்வெளிய இயல்புகளுள் ஒன்று. எனவே பழக்கம் ஏற்படுமாறு செய்துதான் ஆணவமலப் பற்றை ஒழிக்கலாம். உடனே ஒழிக்க வேண்டுமென்றால், இயல்பை மாற்றியே தீரவேண்டும்.

10. "உயிர்களுக்குத் தனித்து நிற்கும் உரிமை இல்லை; இறைவன் உணர்த்தினால்தான் அவை உணரும்; அவனே அறிவிக்கின்றான்; அவனே அறி கின்றான்" என்றெல்லாம் சைவசித்தாந்தம் கூறு கிறதே? அங்ஙனமானால் இறைவன் என்ன வேண்டு

மானலும் செய்யலாம்தானே? ஈண்டு உயிர்களின் இயல்புகளுக் கேற்றவாறுதான் இறைவன் துணை செய்கின்றான் எனக் கூறுவது எங்ஙனம் பொருந்தும்?

இறைவனை இன்றி உயிர்கள் அமையா என்பதும், அவனை இன்றி அவை இயங்கா. என்பதும் உண்மை. அறிவற்றபொருள், அறிவுள்ளபொருள் எல்லாமே இறைவன் துணையின்றி இயங்கமாட்டா. இதனாலேயே 'அவனன்றி ஓரணுவும் அசையாது' எனக் கூறுகிறோம். ஆனால் அவன் எங்ஙனம் ஒவ்வோரணுவையும் அசைக்கின்றான் என்பதை நாம் நன்கு விளங்கிக்கொள்ள வேண்டும். அந்தந்தப் பொருள்களின் இயல்புக் கேற்றவாறே அவன் அசைக்கின்றான். உயிர்கள் அறிவுடைப் பொருள் கள். அவற்றின் அறிவு, விருப்பம், செயல்கள் தொழிற்பட வேண்டுமாயின் இறைவன் அவ்வுயிர் களோடு ஒன்றாயும், வேறாயும், உடனாயும் நின்று உதவ வேண்டும். இல்லையேல் அவை தொழிற்பட மாட்டா. ஒன்றாகவும், வேறாகவும் நின்று உதவு வதைக் "காட்டல் உதவி" அல்லது அறிவிக்கும் வுதவி" என்றும், உடனாக நின்று உதவுவதைக் "காணும் உதவி" அல்லது "அறியும் உதவி" என்றும் கூறுகிறோம். இவ்விருவகை உதவிகளையும் இறைவன் செய்யாவிட்டால் உயிர்கள் ஒன்றையும் அறிய முடியாதாதலால், "அவனே அறிவிக்கின்றான்; அறிகின்றான்" என்று சொல்கின்றோம். இவ் உதவிகளை இறைவன் செய்கின்றான் என்பதற்குப் பொருள், உயிர்களுக்குச் சொந்தமான அறிவு, விருப்பம், செயல்களை ஒழித்துவிட்டு, அவ்விடத்தில் தன்னுடைய அறிவு, விருப்பம், செயல்களை நிலை நாட்டுகிறான் என்பதன்று. அப்படிச் செய்ய வேண் டிய தேவை அவனுக்கு எதுவுமில்லை. உயிர்கள்,

அறிவுடையனவாதலால், அவை ஒவ்வொன்றிற்கும் தனித்தனியான அறிவு, விருப்பம், செயல்கள் உண்டு. இறைவன் இவற்றிற்கு முழுப் பாதுகாப்பளிக்கின்றான் என்பதை நாம் மறந்துவிடக் கூடாது. தன்னையின்றி உயிர்கள் இயங்கமாட்டா என்பதற்காக அவைகளுக்குத் துணை செய்கின்றானே அன்றி, அவற்றின் அறிவு, விருப்பம், செயல்களை அழித்துவிடுவதற்காக அன்று. எனவே ஒவ்வோர் உயிரோடும் அவ்வுயிரேயாய் நின்று இறைவன் இருவகை உதவிகளையும் செய்து வருகின்றான். இதனால்தான் எல்லா உயிர்களும் ஒன்றுபோல் அறியாமல் ஒவ்வொன்றும் அதனதன் இயல்புக்கும் நுகர்ச்சிக்கும் தக்கவாறு அறிகிறது. இறைவனே அறிந்தும், அறிவித்தும் நல்வினை, தீவினையாகிய வினைப் பயன்கள் இறைவனைச் சாராமல் உயிர்களைச் சார்கின்றமைக்கு என்ன காரணம் என்பதைச் சிந்தித்தால் இதன் நுட்பம் விளங்கும். சிவஞான முனிவர் இதனைப் பின்வருமாறு மிகத் தெளிவாக விளக்குகிறார்:-

"பெத்தத்தில் அவனிவனாய் நின்று விடயித்தலின் விடயங்கள் அவனுக்கன்றி இவனுக்காயின" (சிவஞானபோதச் சிற்றுரை நூற்பா 11-முதல் அதிகரணவுரை).

"அவனிவனாய் நின்று விடயித்தல்" என்பது இறைவன் உயிராக நின்று அறிவதாகும். இறைவன் உயிராக நின்று அறிவதாலேயே, நல்வினை, தீவினையாகிய வினைப்பயன்கள் இறைவனைச் சாராது உயிரைச் சார்கின்றன. நன்மை தருவதற்கு ஏதுவாக உயிர்களின் அறிவு, விருப்பம், செயல்கள் நிகழும் காலத்தும் இறைவனுடைய அறிவு, விருப்பம், செயல்கள் உடன் நிகழும். தீமை தருவதற்கு ஏதுவாக அவை

நிகழும்போதும் இறைவனின் உதவி உடன் நிகழும். நன்மை, தீமை இரண்டிற்கும் இறைவனின் உதவி நிகழலாமோ? என்றால், உயிர்களின் அறிவு. விருப்பம், செயல்கள் இயங்குவதற்காகவே அவன் உதவுகின்றானே அன்றி அவற்றின் இயல்புகளை மாற்றுவதற்காக அன்று. உயிர்கள் ஆணவமல மறைப்பினுக்குத் தக்கவாறு ஒன்றை விரும்பியும், ஒன்றை வெறுத்தும்நிற்குமாதலால், இறைவன் அவற்றின் போக்கின்படியே இயங்கச் செய்கிறான். நன்மை தருவதற்கு ஏதுவாக நிகழும் செயல்களுக்கு மட்டுமே இறைவன் உதவுவதென்றால், உயிர்களின் அறிவு, விருப்பம் செயல்களைத் தடுத்து நிறுத்தித் தன்னுடைய அறிவு, விருப்பம் செயல்களை இயங்கச் செய்ய வேண்டும்; அல்லது, அவற்றின் அறிவு, விருப்பம், செயல்களை மாற்றியமைக்க வேண்டும். இறைவனுடைய அறிவு, விருப்பம், செயல்கள் மட்டும் இயங்குவதால் உயிர்கள் ஒரு பயனும் அடையமாட்டா; அவ்வியக்கம் இறைவனுக்கு வேண்டாத செயலாகும். உயிர்களின் அறிவு, விருப்பம், செயல்களை மாற்றினாலோ அவை அழிந்து போகுமென்பதை முன்னர் விளக்கியிருக்கிறோம். ஆகவே, இறைவன் உயிர்கள் இயற்றும் நல்வினை, தீவினை இரண்டிற்கும் துணை நின்று, அவ்வினைகளின் பயனாக வரும் இன்ப துன்ப நுகர்ச்சிகளை ஊட்டி உணர்வு வரச் செய்கிறான். இறைவனின் அருளாற்றல் மறைப்பாற்றலாக நின்று மலங்களை முதிர்விக்கிறதெனக் கூறப்படுவதின் நுட்பம் இதுவேயாகும். நுகர்ச்சியின் மூலம் உணர்வு பெறுதல் அறிவுடைப் பொருட்களான உயிர்களுக்கு இயல்பாதலால், இன்ப துன்ப நுகர்ச்சிகளை ஊட்டி அவைகட்கு உணர்வு வரச் செய்தலே ஏற்ற உதவியாகும். ஆகவே "அவனே அறிவிக்கின்றான்; அறி

கின்றான்" எனக் கூறுவது உயிர்களின் இயல்புகளுக் கேற்றவாறே இறைவன் உணர்த்துகின்றான் என்பதற்கு முரணன்று என்பது இனிது விளங்கும்.

11. ஆணவமலம் என்னும் பொருளையே இல்லாமற் செய்துவிட்டால் இவ்வளவு தொல்லைகளும் ஒழிந்து போகுமல்லவா? இறைவன் தன் வல்லமையால் ஏன் அங்ஙனம் செய்யக்கூடாது?

ஆணவமலம் யாராலும் உண்டாக்கப்படாத தொடக்கமில் பொருள் என்பதை முன்னர் நிறுவியிருக்கிறோம். என்றும் உள்ள ஒரு பொருள் என்றும் அழியாமல் இருக்கக்கூடிய தன்மை வாய்ந்தது. எனவே, அதனை ஏன் இல்லாமற் செய்யக்கூடாது? எனக் கேட்பது அதனை என்றும் உள்ளதென முன்னர் ஒப்புக்கொண்டதை மறுப்பதாகிறது.

12. என்றுமுள்ள பொருள் அழியாது என்பது சரியே; ஆனால் இறைவனின் "எல்லாம் வல்லமை" அடிபட்டுத்தானே போகிறது?

உயிர்களிடத்தில் அறியாமை காணப்படுவதாலும், அவ்வறியாமை படிப்படியே நீங்குவதாலும் அவற்றின் அறிவை மறைக்கின்ற ஒரு பொருள் தொன்மையிலேயே இருக்க வேண்டுமென மேலே எடுத்துக் காட்டினோம். ஒரு பொருளின் தனித்த இருப்புக்கும், இயல்புக்கும் ஏன் என்னும் வினா எழாது. எந்தப் பொருளும் தன்னளவில் இருப்பது இயற்கை; அது பிற பொருளுடன் தொடர்பு படும் பொழுதோ, அதன் நிலையில் மாறுதல் காணப்படும் பொழுதோ "ஏன்?" என்னும் கேள்வி எழும். ஆகவே மலம் யாராலும் உண்டாக்கப்படாமல் தன் அளவில் என்றுமே இருப்பதை "ஏன்?" என்று கேட்க முடி

யாது. "இருக்கிறதா?" என்று மட்டும்தான் ஆராய லாம். ஆனால், "அஃது உயிர்களின் அறிவை மறைக் கிறது" என்னும்பொழுது "ஏன்?" என்னும் வினாப் பிறக்கிறது. நிறைவாயும், இருள் போன்ற தன்மை யினை இயற்கையில் உடையதாயும் மலம் இருத்த லால், எளிய இயல்பினையுடைய உயிர்கள் அதனைப் பற்றி மறைப்புக்குள்ளாகின்றன என்று விடை காண்கிறோம். அறிவற்ற பொருளாகிய உடலின் துணையால், அறிவுள்ள பொருளாகிய உயிர் விளக்கம் பெறுவதையும், அவ்வுடலில் ஏதேனும் ஊறு நிகழ்ந் தால், அறிவு தடுமாறுவதையும் நாம் நேரில் பார்ப்ப தால், அறிவற்ற பொருள் அறிவுடைப் பொருளுக்குத் துணையாகவும் இருக்கக்கூடும்; தடையாகவும் இருக் கக் கூடும் என்பது புலனாகிறது. எனவே அறிவற்ற பொருளாகிய மலம் அறிவுள்ள பொருளாகிய உயிரின் அறிவை மறைக்கும் எனக் கொள்வதில் தவ றில்லை. இத்தகைய மலம் என்றும் உள்ளதென்றும், உயிர்கள் அதனைத் தொடக்கமில் காலத்தே பற்றி மறைப்புக்குள்ளாயின என்றும் முடிவு கண்டதற்குப் பிறகே, இறைவன் தன் வல்லமையால் அதனை ஏன் இல்லாமற் செய்யக்கூடாது? என்று கேட்க இட முண்டு. ஒரு பொருள் யாராலும் உண்டாக்கப்படா மல் என்றும் இருந்தால், அதனை ஒழித்தல் என்னும் நிகழ்ச்சி அதற்குப் பின்னர்தானே நிகழ முடியும்? என்றும் உள்ள பொருள் அழியாது என்னும் இலக் கணத்திற்கு முரணாக இருந்தாலும், இறைவனின் "எல்லாம் வல்லமை" பற்றி ஆராய்வதற்காக அவன் மலம் என்னும் பொருளே இல்லாமல் அழித்து விடுகிறான் என்று வைத்துக் கொள்வோம்; நிலைமை என்னாகும்? பொருளைப் போலவே பொருளினிடத் துள்ள பற்றும் அறிவினைக் கட்டுப்படுத்தும் தன்மை

யுடையது. உயிர்கள் அறிவுடைப் பொருட்களாதலால், அவற்றின் அறிவினிடத்தே பதிந்த மலப்பற்றே மலமிருந்தால் செய்யக்கூடிய அத்தனை கேட்டையும் செய்ய வல்லதாகும். வேம்பு தின்ற புழுவினை உய்விக்கக் கருதி, அவ்வேம்பினை ஒழித்துக் கரும்புத் தோட்டத்தினுள் விடுப்பினும், அது கரும்பினைப் பற்றிப் பயன்கொள்ள அறியாது வேம்பின் நினைவால் ஏங்கி வாளாகிடக்கும். இதுபோலவே மலத்தினை இல்லாமற் செய்து விட்டாலும் உயிர்கள் அம்மலத்தின் மீது வைத்த பற்றால் அதனையே நோக்கி வாளாகிடக்குமேயல்லாமல் வேறொன்றினைப் பற்றிப் பயன்கொள்ள மாட்டா. ஆணவமலம் இருப்பதால் உயிர்கள் கட்டுறவில்லை; வீடுபேற்றிலும் ஆணவமலம் இருக்கத்தான் செய்கிறது. ஆண்டு அவை கட்டுறுமைக்குக் காரணம் என்ன? மலத்தின் மீது அவை வைத்திருந்த பற்றைவிட்டு, இறைவன் மீது பற்றுகொண்டமையே காரணம் ஆகும். ஆகவே மலத்தை இல்லாமற் செய்வதால் தொடக்கமில் காலத்தே அதனைப் பற்றிய உயிர்களுக்குப் பயன் விளையாது. அம்மலத்தின்மீதுள்ள விருப்பினை நீக்கியாக வேண்டும். அவ்விருப்பினை நீக்குவதற்காகவே இறைவன் மாயா கருவிகளைப் படைத்தளித்து உயிர்களின் அறிவு, விருப்பம், செயல்களைத் தொழிற்படச் செய்து, நுகர்ச்சி உணர்வை எழுப்புகிறான். உயிர்கள் நுகர்ச்சி அறிவின் வாயிலாகவே ஒன்றிலுள்ள பற்றை நீக்கி மற்றொன்றைப் பற்றும் இயல்பு வாய்ந்தவை. உயிர்களின் இயல்புகள் மாற்றப்பட முடியாதவை என்பதை முன்னர் விளக்கியிருக்கிறோம். எனவே அவற்றின் இயல்புகளுக்கு ஏற்றவாறு, செய்ய வேண்டிய உதவிகள் அனைத்தையும் இறைவன் குறைவறச் செய்கிறான். செய்ய வேண்டியதைச் செய்து முடிப்

பந்துதான் வல்லமையே அன்றிச் செய்ய வேண்டாத தைச் செய்வது வல்லமை அன்று. இதனால் இறைவ னின் "எல்லாம் வல்லமை" க்கு எவ்வித இழுக்கும் நேரவில்லை என்பதை அறியலாம்.

தொடக்கமில் காலத்தே மலம் இருந்ததால் தானே உயிர் அதன் மீது பற்றுக்கொள்ள வாய்ப் புண்டாகியிருக்கிறது? அப்பொழுதே அதனை இல் லாமற் செய்திருந்தால் அதன் மீது பற்றுக் கொள்ள இடமில்லாமற் போயிருக்கும் அன்றோ? என்று கேட்கலாம். "தொடக்க மில் காலம்" என்பதற்குப் பொருள் "என்றும்" என்பதாகும். எனவே "அப் பொழுதே அதனை இல்லாமற் செய்திருந்தால்" எனக் கேட்பது "ஏதோ ஒரு காலத்திற்கு முன்" என்றே பொருள் தரும். ஆகவே இக்கேள்வி பிழையுடையதா கும். எனினும் எல்லாரும் எளிதில் புரிந்து கொள்ள இன்னொரு வகையாக இக்கேள்விக்கு விடையளிக்க லாம். ஆணவமலத்தை இறைவன் உண்டாக்கவில்லை; ஆனால், அதன் இருப்பால்தான் உயிர்களுக்கு உதவி செய்ய வேண்டிய நிலை இறைவனுக்கு ஏற்படுகிறது. மலத்தடை இல்லையேல் அவைகளுக்குத் துன்பம் ஏற் பட இடமில்லை. எனவே இறைவன் உதவிசெய்ய வேண்டிய தேவையும் இல்லை. நிலை என்னாகும்? மலம் இல்லையேல் உயிர்கள் துன்பத்தை நுகர மாட்டா என் பது உண்மையே. ஆனால், அவை இன்பத்தையும் நுகர மாட்டா என அறிதல் வேண்டும். அவை ஒரு பயனும் எய்தாமல் வாளா கிடக்கும்; அவ்வளவுதான். நுகர்ச்சி அறிவு பெற்றால்தான் அவை இறைவனைப்பற்றி இன் பம் எய்த இயலும். அவற்றின் இயல்புப்படி அவை நுகர்ச்சி பெற வேண்டுமானால் முதலில் அவற்றை சார்த்து மயக்கக்கூடிய "மலம்" என்னும் பொருளை உண்டாக்க வேண்டியது வரும். அப்படிச்

செய்தால்தான் அவை மயக்கத்தால் பொருட்களைப் பற்றிப்பற்றி நுகர்ச்சி அறிவு பெறும். நுகர்ச்சி அறிவு மிகுவதற்கு ஒரு தடை இன்றியமையாததாகும். உயிர்களுக்கு அறிவு இருந்தால் மட்டும் பயனில்லை; அவைகளுக்கு நுகர்ச்சி மிகுந்தால்தான் இறைவனைப்பற்றிப் பேரின்பம் எய்த இயலும். எனவே மலம் போன்ற ஒரு தடையை இறைவனே புதிதாக உண்டாக்க வேண்டிய நிலை ஏற்படும். இருக்கிற மலத்தை ஒழித்து விட்டுப் புதிதாக ஏன் ஒரு தடையை உண்டாக்க வேண்டும்? துன்பத்தைத்தரும் மலத்தை இறைவன் உண்டாக்கியிருக்க மாட்டான்; ஆனால், அதன் இயற்கை இருப்பு இறுதியில் உயிர்க்கு நன்மையே தருவதால் அதனை அவன் ஒழிக்காமல் விட்டு வைத்திருக்கிறான். இப்படி விளங்கிக் கொண்டோமானால், "இறைவன் ஏன் மலத்தை இல்லாமற் செய்யவில்லை?" என்னும் கேள்வியை எழுப்ப மாட்டோம். இங்கு, "Evil is necessary for the wider good of the souls." "தீமையும் உயிர்களின் நன்மை குறித்து வேண்டப் படக்கூடியதே" என்னும் உவில்யம் செம்சு அவர்களின் மொழி நினைவுகூரத்தக்கது.

13. ஆணவமல இருப்பு இறைவனுக்கு ஓர் அறை கூவலாகாதா? ஆணவமலம் இறைவனை ஒரு சிறிதும் பற்றுவதில்லை. அவன் நிறைவை அது தடை செய்வதும் இல்லை. உயிர்கள் தம் எளிய இயல்பால் ஆணவமல மறைப்பிற்குள்ளாகின்றனவே அன்றி இறைவனின் வல்லமைக் குறைவால் அன்று. இறுதியில் அவை இறைவனைச் சார்ந்தபோது மலம் அவற்றைக் கட்டுறுத்துவதில்லை. ஆகவே, ஆணவமல இருப்பு இறைவனுக்கு எவ்வாற்றானும் ஓர் அறைகூவலாகாது. 'உவில்லியம் சேம்சு "(William James) கூறும் பின்வரும் மொழிகள் ஈண்டுச் சிந்திக்கத்தக்கவையாகும்:-

''God is not necessarily responsible for the existence of evil. He is responsible only if it is not finally over come'' "தீமையின் இருப்புக்கு இறைவன் பொறுப்பாளியாக வேண்டிய தேவை இல்லை; அதனை இறுதியில் வெல்லமுடியாமற் போனால்தான் அவன் பொறுப்பாளியாக வேண்டியது வரும்."

மேலும் இறைவனின் அருள்வெளிப் பரப்பினுள் நல்ல பொருள், கெட்ட பொருள், அறிவுடைப் பொருள், அறிவில்லாப் பொருள் ஆகிய எல்லாப் பொருட்கும் இடனுண்டெனக் கூறுவது அவனுக்குச் சிறப்பே அன்றி இழுக்கன்று.

14. ஆணவமலக் கட்டு என்றுமுளதென்றால், வீடு பேற்றில் அது நீங்கும் எனக் கூறுவது என்றுமுள்ள தன்மைக்கு மாறாகாதா?

சைவசித்தாந்தத்தில் "நீக்கம்" "ஒடுக்கம்" எனச் சொல்வதற்கு நாம் கொள்ளவேண்டிய பொருள் முற்றிலும் வேறாகும். "வசித்திடவருவியாபியான" உயிர் வீடுபேற்றில் இறைவனைச் சார்ந்து முழுநிறைவு எய்துகிறது. நிறைவான் ஒரு பொருட்கு நீக்கம் சொல்லவராது. அப்படியிருந்தும் வீடுபேற்றில் உயிர் ஆணவமலத்தை விட்டு நீங்குகிறதென்று சொல்கிறோம். இதன் பொருள் என்ன? நீக்கம் என்பது பொருள் நீக்கம் அன்று. சிவஞானபோதம் 8 ஆம் நூற்பா 4-ஆம் அதிகரண உரையில் "வியாபகப் பொருட்கு ஒருவுதலாவது உணர்ச்சி விசேடமேயாம்" என்று சிவஞான. முனிவர் முழுநிறைவான பொருட்குரிய "நீக்கத்தை" நன்கு விளக்கம் செய்துள்ளார். வீடுபேற்றில் உயிர் ஆணவமலத்தின்கண் உள்ள விருப்பினை நீக்கி இறைவனை உணர்ந்து நிற்கும் உணர்ச்சியையே "நீக்கம்" என்று சொல்கிறோம்.

என்றுமுள்ள பொருள் அழியாது; தன் இயல்பு களினின்றும் மாறுபடாது; ஆணவமலம் வீடுபேற் றில் அழியவும் இல்லை; மறைத்தலைச் செய்யும் தன் இயல்பினின்று மாறவும் இல்லை. ஆனால் வீடுபேற்றில் உயிர்கள் இறைவனை உணர்ந்து நிற்கும் உணர்ச்சி யால் மலத்தால் ஒரு சிறிதும் பாதிக்கப்படாமல் இருக்கின்றன. இந்த நிலையையே "நீக்கம்" எனக் குறிக்கின்றோம்.

ஆணவமலம் வீடுபேற்றில் வலிகெட்டு ஒடுங்கு கிறதென்றும் நாம் சொல்வதுண்டு. மலத்திற்குரிய மறைக்கும் தன்மை எஞ்ஞான்றும் கெடுவதில்லை. ஒரு விதையை வறுத்துவிட்டால் முளைக்கும் அதன் ஆற்றல் கெட்டுப் போகிறது; ஆனால் விதை யாகிய பொருள் இருக்கிறது; அதுபோல, "ஆணவ மலம் வீடுபேற்றில் ஆற்றல்கெட்டுப் பொருள்மட்டு மாக நிற்கிறது" எனச் சிலர் சொல்வதுண்டு. குணம் கெட்டுக் குணிநிற்கும் என்னும் கொள்கையைச் சைவசித்தாந்தம் ஏற்பதில்லை. வறுத்தவிதையில் "முளை" அழிந்துபோவதால், முளைக்கும் ஆற்றலும் இல்லாமற் போகிறது. "முளை" என்னும் பொருள் நுண்ணிய நிலையில் விதையிடத்துண்டு என்பதை நோக்காமல், முளை நிற்கும் விதையைப் பொருளாக மயங்கக்கொண்டு கூறும் இந்த எடுத்துக் காட்டுப் பொருந்தாது. ஆகவே ஆணவமலம் வலிகெடுவ தென்பது அப்பொருளை இல்லாமற் போவதென்றே பொருள்படும். என்றும் உள்ள பொருள் அழியாதா தலால் அதன் வலியும் கெடுமாறில்லை. வீடுபேற்றி லும் ஆணவமலம் தன்னளவில் எப்பொழுதும்போல் ஆற்றல் குன்றாமல் மறைத்தல் தொழிலைச் செய்து கொண்டுதான் இருக்கிறது. ஆனால் வீடுபேறடைந்த உயிர்களிடம் அதன் ஆற்றல் பலிக்காமற் போவதால்

அவ்வுயிர்களை நோக்க அது வலிகெட்டு ஒடுங்குகிற தென்று கூறுகிறோம். "ஒடுக்கம்" என்பது உண்மையில் ஒடுக்கம் அன்று; வீடுபேறடைந்த உயிர்களை நோக்க "ஒடுக்கம்" என அறிதல் வேண்டும். "நீங்குதல்" என்பதற்கும், "வலிகெட்டு ஒடுங்குதல்" என்பதற்கும் இங்ஙனம்பொருள் விளக்கம் செய்து கொண்டோமானால் வீட்டுநிலை பற்றிய குழப்பங்கள் யாவும் ஒழிந்து போகும்.

உயிர்களுக்கு அறிவு, விருப்பம் செயல்கள் என்றும் உண்டாதலால் ஒன்றைப் பற்றலும், ஒன்றை விடுதலும் அவைகளுக்குள்ள இயல்பேயாகும். ஆணவமலப்பற்றை விடுத்து இறைவனைப் பற்றி நிற்றல் அவற்றின் என்றுமுள்ள தன்மைக்கு மாறானதன்று." பற்றும் தொழில் உயிருக்கு என்றுமுண்டென்பதைச் சிவஞானமுனிவர், "அநாதியே மலத்தைப் பற்றுதல் உயிரின் வினையாய் 'எனச் சிவஞான போதம் நான்காம் நூற்பா இரண்டாம் அதிகரண உரையில் குறிப்பிடுகின்றார். தொடக்கமில் காலத்தே, உயிர் மலத்தைப் பற்றிய தென்பதால், "அதற்கு முன் அது தூயதாக இருந்ததா?" என்னும் கேள்விக்கு இடமில்லாமல் போகிறது. உயிரும் மலமும் "தொடக்கமில் பொருளாதலால்," இப்பற்றுதலாகிய செயலும் உடனிகழ்ச்சியாகத் தொடக்கமில்லாக் காலத்தே உண்டென்று அறிதல் வேண்டும். என்றும் உள்ளதாய் அமைந்தபற்றும் தொழிலுக்கு மாறின்றியே உயிர் வீடுபேற்றிலும் ஒன்றைப் பற்றி நிற்கிறது. ஆனால் பற்றப்படும் பொருளில் வேறுபாடு இருக்கிறதே? அஃது என்றும் நின்றநிலைக்கு மாறாகாதா?" எனக் கேட்கலாம். பொருட்களின் இயல்புகள் தாம் மாறமாட்டா; ஆனால் அதற்காக அவை என்றும் நின்ற நிலையிலேயே

நிற்பதில்லை; என்றுமுள்ள காரண நிலையில் நின்ற மாயை செயல் (காரிய) நிலைக்கு வருகிறது.

மாயாகருவிகளைப் பற்றாமல் நின்ற உயிர் பின்னர் அவற்றைப் பற்றி உணர்வு (சகல) நிலைக்கு வருகிறது. எனவே நிலைமாற்றம் என்றுமுள்ள தன்மைக்கு மாறாகாது. ஆனால் அம்மாற்றம் ஏற்படுவதற்குத் தக்க ஏது வேண்டும். காரண நிலையில் நின்ற மாயையை உயிர்களின் பொருட்டு இறைவன் செயல் நிலைக்குக் கொண்டுவருகிறான். அதுபோல உணர்விழந்து கிடந்த உயிர்களுக்கு இறைவன் மாயா கருவிகளைப் படைத்தளித்து உணர்வூட்டுவதால் அவை மலப்பற்றை நீக்கி வீடுபேற்றில் அவனைப் பற்றி நிற்கின்றன. "ஆனால் காரிய நிலையில் நின்ற மாயை மீண்டும் என்றும் நின்றதுபோல் காரண நிலையை எய்துகிறது. அங்ஙனமே தூயநிலையாகிய வீடுபேற்றில் இறைவனைப் பற்றிநின்ற உயிர் என்றும் நின்றதுபோல் மீளவும் மலத்தைப் பற்றுமோ?"என ஐயுறலாம். காரிய நிலையில் நின்ற மாயை தானே காரணநிலைக்குச் செல்லாது; இறைவனே அதனை அந்நிலைக்குக் கொண்டுசெல்கிறான்; வீடுபேற்றில் நிற்கும் உயிர்களை இறைவன் அங்ஙனம் உணர்வற்றமுன்னை நிலைக்குச் செல்லுமாறு செய்யமாட்டானாதலால் அதற்கு இடமில்லை. மாயை அறிவற்ற பொருள் ஆதலால் அது காரணநிலைக்குச் செல்வதற்கு இறைவன் துணை வேண்டியதிருக்கிறது. அறிவுடைப் பொருளாகிய உயிர் தானே என்றும் நின்ற நிலைக்குச் செல்லலாமல்லவா? இறைவன் உயிர்களின் அறிவு, விருப்பம், செயல்களின் போக்கின்படி தானே துணைநிற்கின்றான்? என்று வினவலாம். அறிவுடைப் பொருளாகிய உயிர் அங்ஙனம் செல்வதற்கும் ஒரு

காரணம் வேண்டுமன்றே? வீட்டுநிலையினும் பார்க்கத் தொடக்கமில் காலத்தே நின்ற உணர்வற்றநிலை இனிமை பயப்பதாக இருந்தால் உயிர் மீண்டும் அங்ஙனம் செல்லும் எனக் கூறலாம். "தானென அவனென," வேறின்றிநின்று மாருத பேரின்பத்தை நுகரும் அது மீண்டும் "உணர்வின்றிக் கிடக்கும் நிலை" யை விரும்பாதாதலால் அங்ஙனம் அது செல்லும் எனக் கூறுவதற்கு எவ்வாற்ருனும் இடமில்லை என்க.

இதுவரை கூறியவாற்ருல் ஆணவமலம் பற்றிய ஐயங்கள் அனைத்தும் நீங்கியிருக்கலாம். இனி இக் கட்டுரையின் துவக்கத்தில் எடுத்துக் கொண்ட "முடியாமை" களை நிறுவுவது மிக எளிதாகும்.

முடியாமை: 1. எல்லா உயிர்களும் உடனே வீடு பேறு எய்தும்படி இறைவனுல் செய்ய முடியாது; ஏன்?

மேலே வினு ஒன்பது (9) க்குள்ள விடையில் ஆணவமலக் கட்டினின்றும் உயிர்களை உடனே விடுவிக்க முடியாதென்பதற்குரிய காரணங்களைக் கூறியிருக்கிருேம். எனவே உயிர்களுக்கு இறைவன் படிமுறையால்தான் வீடுபேறு அளிக்கலாமே அன்றி உடனடியாக வீடுபேறு அளிக்க முடியாதென்பது நன்கு விளங்கும். ஒவ்வோர் உயிருக்கும் அதற்கே உரித்தான தனி இயல்புகள் உண்டு; இவ்வியல்பு வேறுபாட்டாலேயே அவை பலவாக இருக்கின்றன. இறைவன் ஒவ்வோருயிர்க்கும் அதனதன் இயல்புக் கேற்றவாறே நுகர்ச்சி உணர்வை ஊட்ட வேண்டிய திருக்கிறது. எனவே எல்லா உயிர்களுக்கும் எங்ஙனம் அவன் உடனடியாக வீடுபேற்றை அளிக்க முடியும்? ஒவ்வோர் உயிரும் இறுதியில் வீடுபேறடையவே

செய்யும். ஆனால் ஒவ்வொன்றும் அதனதன் இயல்புக் கேற்றவாறு தான் படிப்படியே நுகர்ச்சி அறிவு பெற்று வீடுபேறடையும். இதனால் எல்லா உயிர்களுக்கும் உடனடியாக இறைவன் வீடுபேறளிக்க முடியாது என்பது தெளிவு. இம்முடியாமையால் இறைவனின் வல்லமைக்கு எவ்வித இழுக்குமில்லை. எளிய உயிர்களின் நிலைகண்டு இரங்கிச் செய்ய வேண்டிய உதவிகளைக் குறைவின்றிச் செய்யும் பேராற்றலும் அருளோடு கலந்த பேரறிவுடைமையுமே இம்முடியாமையால் புலனாகின்றன.

முடியாமை 2: உலகில் தீய செயல்களே நடை பெறாமல் அறவே ஒழித்து நல்லசெயல்கள் மட்டும் நடைபெறும்படி இறைவனால் செய்யமுடியாது. ஏன்?

மேலே வினா பத்து (10) க்குள்ள விடையில் இறைவன் நல்வினை, தீவினை இரண்டிற்குமே துணை நின்றாக வேண்டியிருக்கிறதென்பதை விளக்கியிருக்கிறோம். ஆணவமலக் கட்டு இருக்கும்வரை உயிர்கள் நல்வினை, தீவினை இரண்டையும் செய்தே தீரும். நல்வினையின் பயனாக வரும் இன்பம் போலவே, தீவினையின் பயனாக வரும் துன்பமும் ஆணவமல விடுதலைக்குத் துணை செய்கிறது. ஆணவமல மறைப்புக்குள்ளான உயிர்களைத் தீமைகள் செய்யவொட்டாமல் தடுத்து நிறுத்தினால் அவற்றின் அறிவு, விருப்பம், செயல்கள் தொழிற்பட முடியாமற் போய்விடும்; தொழிற்படா விட்டால் அவை நுகர்ச்சி அறிவுபெற வழியில்லை. நுகர்ச்சி இல்லையேல் அவை மலக் கட்டினின்றும் விடுதலை பெற இயலாது. எனவே, உயிர்களின் அறிவு, இச்சை, செயல்கள் தொழிற்படுவதற்காகத் தீயசெயல்கள் நிகழ்வதற்கும் இறைவன் துணை செய்ய வேண்டியதிருக்கிறது. உலகில் தீமை பெருகி

நிற்பதை இறைவன் ஏன் ஒழிக்கக்கூடாது? என்று பலர் கேட்பதுண்டு. அங்ஙனம் செய்து விட்டால் கல், மண் போல உயிர்கள் இயக்கமின்றிக் கிடக்க நேரிடும். எனவே உயிர்களின் அறிவு, விருப்பம், செயல்கள் இயங்குவதற்காகத் தீய செயல்கள் நிகழ் வதற்கும் இறைவன் உடன் நிற்க வேண்டியவனாகின் ருன். இதனால் நற்செயல்கள் மட்டுமே நடைபெறும் படி இறைவன் செய்வதற்கில்லை. இம்முடியாமையால் உயிர்களின் நிலை அறிந்து துணைசெய்யும் இறை வனின் எல்லையற்ற அருள்நிலை இனிது புலனாவதைக் காணலாம்.

"இறை, உயிர், தளை" ஆகிய முப்பொருட்கள் பற்றிய அரிய நுட்பங்களை எல்லாம் சைவசித்தாந்தம் ஒன்றே உலகிற்கு நன்கு எடுத்துக் காட்டும் நிலையில் இருக்கிறதென்பதை இதுகாறும் செய்த ஆராய்ச்சி யால் இனிது தெளியலாம்.



## 2. நல்வினையும் தீவினையும்

"இருவினை இன்பத் துன்பம்" எனச் சிவஞான சித்தியார் கூறுமாற்றால் நல்வினைக்குப் பயனாக இன்பத்தையும், தீவினைக்குப் பயனாகத் துன்பத்தையும் உயிர்கள் நுகரும் என்பது பெறப்படும்.

பயன்தரும் முறையால் வினைகள் மூவகையாகும். செய்த பிறவியிலேயே பயன் தருபவை, "திருட்ட வினைகள்" என்றும், செய்த பிறவியிலும், பின்வரும் பிறவிகளிலும் பயன் தருபவை "திருட்டா திருட்ட வினைகள்" என்றும், செய்த பிறவியில் பயன் எதுவும் தராமல் பின்வரும் பிறவிகளில் பயன் தருபவை "அதிருட்ட வினைகள்" என்றும் கூறப்படும்.

உலகில் நல்வினை செய்வோரில் பலர் துன்பம் எய்துவதையும், தீவினை செய்வோரில் பலர் இன்பம் அடைவதையும் காண்கிறோம். நல்வினை செய்வோர் இன்பமும், தீவினை செய்வோர் துன்பமும் எய்த வேண்டுவதே முறை. எனவே நல்வினையாளர் துன்பம் எய்துதற்கும், தீவினையாளர் இன்பம் எய்துதற்கும் அவர்கள் இப்பிறவியில் செய்கின்ற வினைகள் காரணமாக இருக்க முடியாது. எனவே இப்பிறவியில் அவர்கள் செய்கின்ற வினைகள் பின்வரும் பிறவிகளில் பயன்தரக் கூடிய அதிருட்ட வினைகளாக நிற்க முற்பிறவிகளில் செய்த நல்வினை, தீவினைகள் இப்பொழுது பயனுக்கு வந்திருக்கின்றன என்று கொள்ள வேண்டும். இதனால் இப்பிறவியில் நல்வினையைச் செய்தும், சென்ற பிறவிகளில் செய்துள்ள தீவினையின் பயனால் துன்பத்தையும், அதுபோலத் தீவினையைச் செய்தும்

நிற்பதை இறைவன் ஏன் ஒழிக்கக்கூடாது? என்று பலர் கேட்பதுண்டு. அங்ஙனம் செய்து விட்டால் கல், மண் போல உயிர்கள் இயக்கமின்றிக் கிடக்க நேரிடும். எனவே உயிர்களின் அறிவு, விருப்பம், செயல்கள் இயங்குவதற்காகத் தீய செயல்கள் நிகழ் வதற்கும் இறைவன் உடன் நிற்க வேண்டியவனாகின் ருன். இதனால் நற்செயல்கள் மட்டுமே நடைபெறும் படி இறைவன் செய்வதற்கில்லை. இம்முடியாமையால் உயிர்களின் நிலை அறிந்து துணைசெய்யும் இறை வனின் எல்லையற்ற அருள்நிலை இனிது புலனாவதைக் காணலாம்.

" இறை, உயிர், தளை " ஆகிய முப்பொருட்கள் பற்றிய அரிய நுட்பங்களை எல்லாம் சைவசித்தாந்தம் ஒன்றே உலகிற்கு நன்கு எடுத்துக் காட்டும் நிலையில் இருக்கிறதென்பதை இதுகாறும் செய்த ஆராய்ச்சி யால் இனிது தெளியலாம்.



# 2. நல்வினையும் தீவினையும்

"இருவினை இன்பத் துன்பம்" எனச் சிவஞான சித்தியார் கூறுமாற்றால் நல்வினைக்குப் பயனாக இன்பத்தையும், தீவினைக்குப் பயனாகத் துன்பத்தையும் உயிர்கள் நுகரும் என்பது பெறப்படும்.

பயன் தரும் முறையால் வினைகள் மூவகையாகும். செய்த பிறவியிலேயே பயன் தருபவை, "திருட்ட வினைகள்" என்றும், செய்த பிறவியிலும், பின்வரும் பிறவிகளிலும் பயன் தருபவை "திருட்டா திருட்ட வினைகள்" என்றும், செய்த பிறவியில் பயன் எதுவும் தராமல் பின்வரும் பிறவிகளில் பயன் தருபவை "அதிருட்ட வினைகள்" என்றும் கூறப்படும்.

உலகில் நல்வினை செய்வோரில் பலர் துன்பம் எய்துவதையும், தீவினை செய்வோரில் பலர் இன்பம் அடைவதையும் காண்கிறோம். நல்வினை செய்வோர் இன்பமும், தீவினை செய்வோர் துன்பமும் எய்த வேண்டுவதே முறை. எனவே நல்வினையாளர் துன்பம் எய்துதற்கும், தீவினையாளர் இன்பம் எய்துதற்கும் அவர்கள் இப்பிறவியில் செய்கின்ற வினைகள் காரணமாக இருக்க முடியாது. எனவே இப்பிறவியில் அவர்கள் செய்கின்ற வினைகள் பின்வரும் பிறவிகளில் பயன்தரக் கூடிய அதிருட்ட வினைகளாக நிற்க முற்பிறவிகளில் செய்த நல்வினை, தீவினைகள் இப்பொழுது பயனுக்கு வந்திருக்கின்றன என்று கொள்ள வேண்டும். இதனால் இப்பிறவியில் நல்வினையைச் செய்தும், சென்ற பிறவிகளில் செய்துள்ள தீவினையின் பயனால் துன்பத்தையும், அதுபோலத் தீவினையைச் செய்தும்

முன்னை நல்வினைப் பயனால் இன்பத்தையும் அவர்கள் நுகர்கின்றனர்.

தீயவர்பலர் முன்னை நல்வினைப் பயனால் இன்பம் எய்துகின்றனர் என்று கண்டோம். ஆனால் நல்வினைப் பயனால் அவர்களுக்குக் கிடைக்கும் இன்பம் எத்தகையதாக இருக்க வேண்டும்? தீயவர் ஒருவர்க்குக் கற்பிற் சிறந்த மனைவி வாய்த்திருக்கலாம். அவளால் அவர் எய்தும் இன்பம் நல்வினைப் பயனால் வந்ததென்று கொள்வதில் தடையில்லை. அழகிற் சிறந்த பிறன் மனைவியிடத்து மிக்கதோர் இன்பம் அவர் எய்தினால் அது முன்னை நல்வினைப் பயனால் கிடைத்த பேறு என்று சொல்லலாமா? பிறர் பொருளைக் கவர்ந்தும், சூதாடியும், கள் குடித்தும், வரைவின் மகளிரிடத்துச் சென்றும், பிறரை அடக்கியும், அச்சுறுத்தியும், செல்வச் செருக்கால் வரம்பின்றி அதிகாரம் செய்தும் தீயவர் பலர் "இன்பம்" எய்துகின்றனர். இத்தகைய "இன்பங்களெல்லாம்' முன்னை நல்வினைப் பயனால் கிடைத்தவை என்று சொல்வது பொருத்தமாக இருக்குமா? சிந்திக்க வேண்டும்.

இன்ப நுகர்ச்சி, துன்ப நுகர்ச்சி என நுகர்ச்சியை இருவகையாகவே நாம் பெரிதும் கொள்கிறோம். ஆனால், உண்மையில் அது மூவகைப்படும். இன்ப, துன்ப நுகர்ச்சி போல மயக்க நுகர்ச்சி என ஒன்று உண்டு. இதனைப் பலர் இன்பம் என்று தவறாகக் கொள்கின்றனர். மயங்கிய நிலையில் இன்பம் போலத் தோன்றும் மயக்க நுகர்ச்சி ஒரு தனி நுகர்ச்சியாகும். இன்பம், துன்பம், மயக்கம் என்னும் மூவகை நுகர்ச்சிகளையும் "சுகம், துக்கம், மோகம்" என மெய்யறிவு நூல்கள் கூறுகின்றன. சிவஞான

போதச் சிற்றுரை நான்காம் நூற்பா முதல் அதிகரணத்தில், "அதுவது வாய்ப் பரிணமித்துச் சுக, துக்க மோக ரூபமாய்த் தன்மாட்டு வந்த புத்தி தத்துவத்தின் பரிணாமங்களைக் கலாதிகளோடு கூடி நின்று இது சுகம், இது துக்கம், இது மோகம் என்றறிந்தும் யான் சுகித்தேன், யான் துக்கித்தேன், யான் மோகித்தேன் என்றறிந்தும்" எனச் சிவஞான முனிவர் கூறுவதிலிருந்து இன்ப நுகர்வு, துன்ப நுகர்வு என்பது போல் மயக்க நுகர்வு என ஒன்றுண்டு என்பது தெளிவாகப் புலனாகும்.

உலகியலில் நாம் நுகரும் இன்பம் என்பது யாது? இதனைச் சிவஞான போதப் பேருரை ஆறாம் நூற்பா இரண்டாம் அதிகரணத்தில், "உயிரின் வேறாகிய மூலப் பகுதியின் கண்ணதாகிய சாத்துவிக குணம் உயிரின் மாட்டு மேற்பட்டு விளங்குதலே உலக இன்பம்," "அதுவதுவாய் அழுந்தி நின்றறிதலே நுகர்வு" என மிக அருமையாகச் சிவஞான முனிவர் விளக்கியுள்ளார். சாத்துவிக குணம் மேம்பட்ட நிலையில் உயிர் அதில் அழுந்தி நின்று நுகர்வது இன்பமென்றும், இராசத குணம் மேம்பட்ட நிலையில் அதில் அழுந்தி நின்று நுகர்வது துன்பமென்றும், தமோ குணம் மேம்பட்ட நிலையில் அதில் அழுந்தி நின்று நுகர்வது மயக்கம் என்றும் அறிதல் வேண்டும். இதனைச் சிவஞான போதப் பேருரை ஒன்பதாம் நூற்பா, இரண்டாம் அதிகரணத்தில் "சத்துவ குண விருத்தியாகிய பிரகாச ரூபம் சாந்த ரூபம் சுகரூபகமாகத்தான், இராசத குண விருத்தியாகிய பிரவிருத்தி ரூபம் கோர ரூபம் துக்க ரூபமாகத்தான், தமோகுண விருத்தியாகிய நியமன ரூபம் மூட ரூபம் மோக ரூபமாகத்தான் அளவிட்டறியப்படும்" எனச் சிவஞான முனிவர் கூறுமாற்றால் நன்கு அறிந்து கொள்ளலாம்.

நல்வினை என்பது யாது? ஒரே வினை சிலருக்கு நலத்தையும், சிலர்க்குக் கேட்டையும் விளைவிக்கலாம். எனவே விளைவை வைத்து நல்வினை, தீவினைகளைத் தீர்மானிக்க முடியாது. சாத்துவிக குணம் மேம்பட்டு நிற்க, அதில் அழுந்துதல் இன்பம் எனக் கண்டோம். ஆகவே சாத்துவிக குண எழுச்சியோடு எந்த வினையைச் செய்தாலும் அது நல்வினையேயாகும். செயலின் விளைவு எங்ஙனம் இருப்பினும், செய்பவன் சாத்துவிக குண எழுச்சியால் தூண்டப் பெற்றிருந்தானால், அவன் செய்தவினை நல்வினை என்றே கொள்ளப்படும்.

இராசத குணத்தாலோ, தமோ குணத்தாலோ தூண்டப் பெற்றுச் செய்யும் வினைகள் தீவினைகளாகும். இதனாலேயே வினையை நல்வினை, தீவினை என இருபகுப்புக்குள் அடக்கி, இவ்வினைகளால் வரும் நுகர்வை மட்டும் இன்பம், துன்பம், மயக்கம் என் மூவகையாக மெய்யறிவுநூற்கள் கூறலாயின. எனினும் மயக்க நுகர்வின் பின்விளைவு துன்பமேயாதல் ஒருதலையாதலின், இன்பம், துன்பம் என நுகர்வை இரண்டாகக் கூறுவதும் பொருந்துவதாயிற்று.

அரிய நூற்பொருளை அறிவது இன்பம். அதற்காகச் செய்யப்படும் முயற்சி உடலுக்கும் உள்ளத்திற்கும் துன்பத்தை விளைவிக்கக் கூடும். இத்துன்பம் உழைப்பால் வந்ததேயன்றித் தீவினையின் பயனாக வந்ததன்று. இத்துன்பத்தை நூற்பொருளை அறியும் இன்பத்தோடு கலந்து நுகரும்பொழுதும் துன்பம் என்று உணர்ந்தே புறக்கணிக்கின்றோம். ஆனால் மயக்க நுகர்வு இப்படிப்பட்டதன்று. நுகரும்போது துன்ப உணர்ச்சியே இன்றி இன்பம் போலவே அது நமக்குத் தோன்றும். இதனாலேயே இம்மயக்க நுகர்ச்சி தனி நுகர்வாகக் கொள்ளப்பட்டுள்ளது.

மயக்க நுகர்வின் பின்விளைவு துன்பமேயாதலால் நல்வினைக்குப் பயனாக உயிர் அதனை நுகர்கிற தென்பது பொருந்தாதாக முடியும். எனவே தீவினைக்குப் பயனாகவே உயிர் மயக்கம், துன்பம் ஆகிய இருவகை நுகர்வுகளையும் அடைகிறதென்பது தெளிவு.

தீவினைக்குப் பயனாக உயிர் துன்பத்தை மட்டும் தானே நுகரவேண்டும்? மயக்க நுகர்வையும் அது பெறுதற்குக் காரணம் என்ன?

சிலவினைகள் செய்தபொழுதே பயன் தருகின்றன; சிலவினைகள் காலம் கழித்துப் பயன் தருகின்றன; வேறு சில பிற்பிறவிகளில் பயன் தருகின்றன. இவ்வாறு வேறுபடுத்திப் பயன் தருவதற்குத் தக்க காரணங்கள் இருக்கவேண்டும்.

வினை அறிவற்றது; இன்ன செயலுக்கு இன்ன பயனைத் தரவேண்டும் என்னும் முறை அதற்குத் தெரியக் காரணம் இல்லை. சமண, பௌத்தர்கள் வினைகள் தாமே பயனைத் தரும் என்று கூறுவர். இவ்வுலகில் கொலை செய்தவன் சில சமயம் உயர்ந்த நிலையிலும், குற்றமற்றவன் கொடுஞ்சிறையிலும் இருக்கக் காண்கிறோம். இத்தகைய முறை பிறழ்வுக்கு முன்னை வினைப் பயனே காரணம் என்று சொல்கிறோம். முற்பிறவியில் செய்த ஒரு நன்மைக்கோ, தீமைக்கோ முற்பிறவியிலேயே பயனை வழங்க ஆற்றல் இல்லாமற் போன வினை இப்பிறவியில் தானே வந்து எங்ஙனம் பயனை வழங்கும்? ஆகவே, வினைகள் தாமே பயனை வழங்கும் என்பதுபொருந்தாது.

சிவஞான போதம் இரண்டாம் நூற்பா, இரண்டாம் அதிகரண எடுத்துக் காட்டு வெண்பாவில்,

"அவ்வினையைப் பேராமல் ஊட்டும் பிரானின் நுகராரேல், ஆர்தாம் அறிந் தணைப்பார் ஆங்கு" என மெய்கண்டார் கூறுவதிலிருந்து, வினைப் பயனை இப்படி இப்படி ஊட்டவேண்டும் என்பதை இறைவனே அறிந்து உயிர்களுக்கு ஊட்டுகிறானே யல்லாமல் வினை தானே அறிந்து பயனைத் தருவதில்லை என்பது புலனாகும்.

இறைவன் வினைப்பயன்களை உடனுக்குடன் ஊட்டாமல் பல்வேறு காலங்களில் பல்வேறு வகையாக ஊட்டக் காரணம் என்ன ?

ஆணவமலத் தொடக்கால் கேவலத்துள் அழுந்திக் கிடந்த உயிர்களுக்கு இறைவன் பிறப்பை நல்குகிறான். பிறப்புக் கிடைத்ததும் அவற்றின் அறிவு, விருப்பம், செயல்கள் இயங்கத் துவங்குகின்றன. இவ்வியக்கத்தையே முயற்சி என்று கூறுகிறோம். உயிர்களின் முயற்சி பல்வேறு வகையாகப் பெருகப் பெருக, இன்ப துன்ப மயக்க நுகர்வுகளும் பெருகும். நுகர்வு ஏற ஏற உயிர்களின் அறிவு, விருப்பம் செயல்கள் ஆணவமலக் கட்டிலிருந்து மெல்ல மெல்ல விடுதலை அடையும். உயிர்களை உய்விக்க இறைவன் மேற்கொள்ளும் முறை இதுவே யாகும்.

உயிர்களின் முயற்சிக்கு உடனுக்குடன் பயனை நல்கினால் அவை சில சமயம் முயலும திறத்தை இழக்கக் கூடும். தீவினைக்குப் பயனாகத் துன்பத்தை உடனே ஊட்டினால் அவை அச்சத்தால் முயற்சி குன்றும்; நல்வினைக்குப் பயனாக உடனே இன்பத்தை ஊட்டினாலும் அவை தெவிட்டலால் முயற்சி குன்றும்; மயக்க நுகர்வையே தொடர்ந்து ஊட்டினாலும் மலத் தடிப்பினால் அவை முயற்சி குன்றும். சில சமயம் முயற்சி செய்வதிலேயே அயர்வு தட்டிக் கேவல

நிலையை நாடுவதும் உண்டு. ஒவ்வோருயிரும் அதனதன் தனி இயல்புகளுக்கேற்றபடியும், அதனைப் பற்றியுள்ள ஆணவமலத் தொடக்கின் அளவுக்கேற்றபடியும், பல்வேறு வகையாக விருப்பு, வெறுப்புக்களை மேற்கொள்ளும், இவற்றிற்கேற்ப உயிர்களின் முயற்சியைப் பெருக்கினால்தான் அவை விடுதலை அடைய முடியும். எனவே இறைவன் உயிர்களின் முயற்சி அவிந்து போகாதவாறு அவற்றின் தன்மைகளுக் கேற்றபடியும், ஆணவமலப் பிடிப்பின் அளவுக் கேற்றபடியும் எப்படி ஊட்டினால் மலப்பிடிப்பில் அசைவுண்டாகும் என்பதை அறிந்து பல்வேறு வகையாகப் பல்வேறு காலங்களில் வினைப்பயன்களை ஊட்டுகிறான்.

முயற்சி பெருகுவதற்காகவே நல்வினை, தீவினைப் பயன்களை மாறி மாறி ஊட்டுகிறான். ஆணவமல நெகிழ்ச்சிக்காகவே நாம் இப்பிறவியில் நல்வினையைச் செய்யும்போது முன்னைத் தீவினைப் பயனை ஊட்டுகிறான்; ஒரு பிறவியில் செய்த வினைப்பயன் மறுபிறவியில் வருவதால் உயிர்களின் முயற்சி பல்வேறு மாறுதலை அடைகிறது. இதனால் மலக்கட்டில் தளர்ச்சி ஏற்படுபடுகிறது. எனவே எந்தச் சமயத்தில் எந்தப் பயனை ஊட்டினால், உயிர்களுக்கு நேரடியாகவோ, மறைமுகமாகவோ நலன் ஏற்படும் என்பதை அறிந்து இறைவன் செயலாற்றுகிறான். ஆனால் பயன் தருவதற்குக் காலம், இடம் வாய்ப்பு முதலியவை மாறுதல் அடையுமே அல்லாமல் நல்வினைக்குப் பயனாக இன்பமும் தீவினைக்குப் பயனாகமயக்கமும் துன்பமும் வரும் என்னும் முறை மாறுதல் அடைவதில்லை.

ஆணவமலச் சார்பால் உயிர்கள் தீவினைகளைச் செய்யவே பெரிதும் விரும்பும். ஓடுகின்ற பரியை அதன் போக்கில் விட்டுப் பிடிப்பதுபோல, இறைவன்

உயிர்கள் தீவினை செய்யும்போது முதலில் துன்ப நுகர்வை ஊட்டாமல் மயக்க நுகர்வை ஊட்டி மேன் மேலும் முயற்சிசெய்யும் ஆர்வத்தை உண்டாக்கு கிறான். இதனால் ஆணவமல முதிர்ச்சி உண்டா கிறது. அடுத்துத் துன்ப நுகர்வை ஊட்டியதும் மலக்கட்டுத் தானாகவே தளர்ந்து போகிறது. உடலில் உண்டாகிய கொப்புளத்தை மருத்துவன் முதலில் பழுக்கவைத்துப் பின்னர்க் கீறிக் குணப் படுத்துவதுபோல இறைவன் இதனைச் செய்கிறான். இதனாலேயே தீவினைக்குப் பயனாக முதலில் மயக்க நுகர்வையும் அடுத்துத் துன்ப நுகர்வையும் ஊட்டுகிறான்.

பிறனின் விழைதல், வரைவின் மகளிரிடத்துச் செல்லல், கள் குடித்தல் முதலியவைகளால் பெறப் படுவது மயக்க நுகர்வே அன்றி இன்ப நுகர்வு அன்று என்பது முன் கூறியவாற்றால் நன்கு விளங் கும். எனவே தீவினைக்குப் பயனாகவே இந்நுகர்வு கள் உயிர்களுக்குக் கிடைக்கின்றன என்பதைச் சொல்ல வேண்டியதில்லை. முன்னைப் பிறவிகளில் மயக்கநுகர்வை விரும்பித் தீவினை முயற்சியை மிகுதி யும் செய்துள்ள உயிர்களுக்கு இந்நுகர்வுகள் இப் பிறவியில் தடையின்றி எளிதில் கிடைக்கக்கூடும். இவற்றின் தொடர்ச்சியாக இப்பிறவியிலோ பிற் பிறவிகளிலோ துன்ப நுகர்வு நிகழும்.

பிறனில் விழைதல் முதலியவற்றால் பெறுவது மயக்க நுகர்வே யாதலால், முன்னைத் தீவினைப் பய னாகவே அந்நுகர்வு கிடைக்கிறதெனச் சொல்லும் போது யாரும் மறுப்பதில்லை. ஆனால் செல்வ முடைமை பற்றிச் சொல்லும்போதுதான் மெய்யறிவு நூற் பயிற்சி மிக்கவர்கள்கூட அது முன்னை நல்

வினைப் பயனால்தான் வருகிறதென மயங்கிக் கூறுகின்றனர்.

பிறனில் விழைதல் முதலியவைபோலச் செல்வப் பெருக்கமும் மிகுதியும் மயக்க நுகர்வைப் பயப்பிக்கின்றதே அன்றி இன்ப நுகர்வைப் பயப்பிக்கவில்லை. செல்வப் பெருக்கத்தால் மனமயக்கமும், பெருவேட்கையுமே விளைகின்றன. மிகமிகச் சிலர்க்கே செல்வம் அற உணர்ச்சியைத் தோற்றுவிக்கிறது. அற உணர்ச்சியைத் தோற்றுவிக்கும் செல்வம் முன்னை நல்வினைப் பயனால் வந்ததென்பதில் ஐயமில்லை. ஆனால் பிறர்க்கு ஈயாத குணத்தையோ, களியாட்டு விருப்பையோ, செருக்கையோ, பெருவேட்கையையோ விளைவிக்கும் செல்வம் ஒருவர்க்கு முன்னைத் தீவினை முயற்சியின் பயனாலேயே எளிதில் கிடைக்கிறதென்னும் உண்மையை நாம் தெளிவாக உணர்ந்துகொள்ள வேண்டும்.

செல்வம் திரட்டுவதற்கு முற்பிறப்பில் மிகுதியும் நன்முயற்சியைச் செய்திருந்தால், அம்முயற்சிக்குப் பயனாக இப்பிறவியில் கிடைக்கும் செல்வம் இன்ப நுகர்ச்சியைப் பயப்பிக்கும்; முற்பிறவியில் செல்வம் திரட்டுவதற்கு மிகுதியும் தீய முயற்சியைச் செய்திருந்தால் அம்முயற்சிக்குப் பயனாக இப்பிறவியில் கிடைக்கும் செல்வம் மயக்க நுகர்ச்சியையோ, துன்ப நுகர்ச்சியையோ பயப்பிக்கும். செய்கின்ற முயற்சிக்குப் பயன் உண்டு; இதனாலேயே தீய முயற்சி செய்வோர்க்கும் நிறையச் செல்வம் கிட்டுகிறது. ஆனால் தீய முயற்சிக்குப் பயனாக வரும் நுகர்ச்சி மயக்கமாகவோ, துன்பமாகவோ இருக்கும்; நன் முயற்சிக்குப் பயனாக வரும் நுகர்ச்சி இன்பமாக இருக்கும்.

இலக்கியங்களும், அற நூற்களும் ஈத்துவக்கும் இன்பத்தைத் தருகின்ற செல்வத்தையே பாராட்டி

யுள்ளன. வம்புக்கும், ஆரவாரத்துக்கும், சூதுக்கும் களியாட்டத்துக்கும் பயன்படும் செல்வத்தை அவை பாராட்டவில்லை. அது தீவினைப் பயனாக வந்ததாதலால், எக்காலத்தும் பாராட்டப்படக் கூடியதன்றென்பதும் தெளிவு.

தீய வழிகளில் நினைத்த, நினைத்தபடி சிலர்க்குப் பெரும்பொருள் எளிதில் சேரக் காண்கிறோம். தீய உள்ளம் படைத்தபலர் பிறவியிலேயே பெருஞ் செல்வராக இருக்கவும் காண்கிறோம். தீய செய்கைகளுக்கு அவர்கள் பின்னே துன்பத்தை நுகர்வர் என்றும், ஆனால் இப்போது அவர்களிடம் பொருள் இருப்பதற்கோ, சேர்வதற்கோ முன்னை நல்வினைப் பயனே காரணம் என்றும் நம்மிற் பலர் தவறாக எண்ணிக் கொண்டிருக்கிறோம். தீய செய்கைகளுக்கு அவர்கள் பின்னே துன்பத்தை நுகர்வர் என்பது சரியே. ஆனால் இப்போது அவர்களிடம் செல்வம் சேர்ந்திருப்பதற்கு முன்னை நல்வினைப் பயனே காரணம் என்பது முழுப் பிழையாகும். இப்பொழுது அவர்களிடம் சேர்கின்ற செல்வம் அவர்களுக்கு மயக்க நுகர்வைத் தருகிறதா? இன்பத்தைத் தருகிறதா? என்பதை ஆராய்ந்து பார்க்க வேண்டும்.

இன்பம் என்பது நாம் முன்னே கூறியவாறு சாத்துவிக குணம் மேம்பட்ட நிலையில் தோன்றக் கூடிய ஒன்று என்பதை நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும். இந்த இலக்கணத்தை மறவாமல் உள்ளத்தில் வைத்துக்கொண்டு பார்த்தால் உலகிலுள்ள மக்களிற் பெரும்பாலோர் செல்வத்தால் மயக்க நுகர்வைப் பெறுகின்றனரேயன்றி இன்ப நுகர்வைப் பெறவில்லை என்பது தெளிவாகப் புலனாகும். இன்ப நுகர்வே நல்வினைப் பயனாக வரும். எனவே மயக்க

நுகர்வைப் பயப்பிக்கும் செல்வம் முன்னைத் தீவினை முயற்சியின் பயனாகவே கிடைக்கின்றது என்பது தானே போதரும்.

ஒருவர் நல்வினைகளையும் செய்யலாம்; தீவினைகளையும் செய்யலாம். அவர்க்கு நன் மனைவியோ, நன் மகனோ கிடைத்தால் அதனை நல்வினைப் பயன் என்று சொல்லலாம். உடல்நலம், மன அமைதி, உண்மையான புகழ், மன மயக்கத்தைத் தராத அறவுணர்வை எழுப்பும் செல்வம் முதலியவைகளும் நல்வினைப் பயனால் கிடைக்கின்றன என்பதிற் பிழையில்லை. நோய், வறுமை, கவலை முதலியவைகளும், மனமயக்கத்தைத் தரும் செல்வமும், களியாட்டயர்வதற்குரிய வாய்ப்பும் முன்னைத் தீவினை முயற்சியின் பயனாகவே கிடைக்கின்றன என அறிந்து கொள்ள வேண்டும். வணிக நோக்குடனோ, அதிகாரம் முதலியவை கருதியோ ஈகை என்னும் பெயரால் பணத்தை வாரி இறைப்போர் பலர் உண்டு. இங்ஙனம் செய்வதும், மயக்க நுகர்வைப் பயப்பிக்குமே அன்றி இன்ப நுகர்வைப் பயப்பிக்காது. மன இரக்கத்தால் வழங்குவோரே உண்மையான ஈத்துவக்கும் இன்பத்தைப் பெறுவர். இவர்க்கே முன்னை நல்வினைப் பயனால் செல்வம் கிடைத்துள்ளதெனக் கொள்ளவேண்டும்.

எந்த ஒன்று நமக்கு இன்பத்தைத் தருகிறதோ, அது நல்வினைப் பயனால் வந்ததென்றும், எந்த ஒன்று நமக்கு மயக்கத்தையோ, துன்பத்தையோ தருகிறதோ அது தீவினைப்பயனால் வந்ததென்றும் கொள்வதே பொருத்தமாகும்.

முன்னை நல்வினைப் பயனால் கிடைத்த செல்வத்தை உயிர்கள் தீயவழியில் பயன்படுத்தக்கூடும் என்றும், அதற்காக அச்செல்வம் தீவினைப் பயனால்

வந்ததெனக் கூறுவது பொருந்தாதென்றும் சிலர் கருதுகின்றனர். நல்வினையாளருக்கு முன்னைத் தீவினைப் பயன் வருவதுபோலத் தீவினையாளருக்கு முன்னை நல்வினைப் பயன் வரவே செய்யும். ஆனால் ஒருவருக்கு ஒன்று நல்வினைப் பயனால் வந்ததா? தீவினைப் பயனால் வந்ததா? என்பதை அவர் அதனால் பெறும் நுகர்வை வைத்தே முடிவு செய்யவேண்டும்.

செல்வம் எந்த வழியில் ஒருவருக்கு வருகிறது? அல்லது எந்த வழியில் அது பயன்படுத்தப்படுகிறது? என்பது இங்கே கேள்வி அன்று. நல்வினைக்குப் பயனாக இன்பமும், தீவினைக்குப் பயனாக மயக்கமும், துன்பமும் வரும் என்பது மறுக்கமுடியாத, மாறாதசாத்திரவிதியாகும். எனவே செல்வம் எப்படி வருகிறது? எப்படிப் பயன்படுத்தப்படுகிறது? என்பதை நோக்க வேண்டுவதில்லை. அச்செல்வத்தால் உயிர் எவ்வகை நுகர்வைப் பெறுகிறது? என்பதையே நோக்க வேண்டும். இன்ப நுகர்வாக இருந்தால் நல்வினைப்பயன் என்றும், மயக்க நுகர்வாகவோ துன்ப நுகர்வாகவோ இருந்தால் அது தீவினைப் பயன் என்றும் கொள்ளவேண்டும். ஒருவரே செல்வத்தை அறப்பணிக்கு ஈந்து இன்பத்தையும் பெறலாம்; வரைவின் மகளிரிடத்தே கொடுத்து மயக்கத்தையும் பெறலாம்; இன்ப நுகர்வைத் தந்த செல்வப் பகுதி நல்வினைப்பயனால் வந்ததென்றும், மயக்க நுகர்வைத் தந்தசெல்வப் பகுதி தீவினைப் பயனால் வந்ததென்றும் தீர்மானிக்க வேண்டும். "நல்வினைப் பயனால் வந்த செல்வத்தையே அவர் வரைவின் மகளிரிடத்தே கொடுக்கிறார் என ஏன் சொல்லக்கூடாது?" எனக்கேட்கலாம். தீயவழியில் அச்செல்வத்தை அவர்பயன்படுத்துகிறார் என்பதற்காக அது தீவினைப் பயனால் வந்ததென்று நாம் தீர்மானிக்க





வில்லை. நல்வினைக்குப் பயனாகச் சாத்திர விதிப்படி இன்பம் அன்றோ வரவேண்டும்? வரைவின் மகளி ரிடத்தே அவர் பெறும் நுகர்வு மயக்கமேயன்றி இன்பம் அன்று; எனவே மயக்க நுகர்வைத் தரும் அச்செல்வம் தீவினைப் பயனால் வந்ததென்று தீர் மானிக்கிறோம். செல்வத்தை மட்டுமன்று; எந்த ஒன்றையும் அது தரும் நுகர்வை வைத்தே முடிவு செய்யவேண்டும்.

"நாம் தேடிவைத்த செல்வத்தைப் பொருளகத் தில் (Bank) போட்டு வைத்திருந்தால் அச்செல்வம் தீரும்வரை நாம் விடும் காசோலைக்குப் (செக்) பொருளகத்தார் பணம் தரக் கடமைப்பட்டுள்ளனர்; தீய செயலுக்காகப் பணம் கேட்கிறீர்கள்; தர முடியாது" என்று பொருளகத்தார் சொல்வதில்லை. இதுபோலவே ஒருவர் முற்பிறப்பில் நல்வினைகளைச் செய்து வைத்திருந்தால், இப்பிறப்பில் அவர் தீய செயலுக்காகச் செல்வத்தைச் செலவழித்தாலும் முன்னை நல்வினைப் பயன் இருக்கும் வரை செல்வம் அவர்க்குக் கிடைத்துக்கொண்டே இருக்கும்; எனவே செல்வமுடைமை முன்னை நல்வினைப் பயனே ஆகும்" என்று சிலர் கூறுவதுண்டு. "நல்ல வழியில் திரட்டிய பொருளாக இருந்தால் நல்ல வழியில்தான் செல வாகும்; தீய வழியில் திரட்டிய பொருளாக இருப் பதால்தான் அது வந்த வழியே செலவாகிறது" என்று உலகியலில் மக்கள் கூறுவதை நினைத்துப் பார்க்க வேண்டும். முற்பிறப்பில் "பொருளகத்தில்" போட்டு வைத்திருப்பது "முயற்சி" என்னும் பொருளே ஆகும். அது "நன் முயற்சிப்" பொருளாக இருந்தால் இப்பிறப்பில் இன்ப நுகர்ச்சிக்குப் பயன்படும். "தீய முயற்சிப்" பொருளாக இருந்தால் மயக்க

நுகர்ச்சிக்குப் பயன்படும். செல்வம் எவ்வழியில் செலவிடப் படுகிறதென்பதை வைத்து நாம் முடிவு செய்யாமல் மெய்ந்நூல் விதிப்படி, பெறப்படும் நுகர்ச்சியை வைத்தே முடிவு செய்கின்றோம். எனினும் "காசோலை" எடுத்துக்காட்டைச் சொல்பவர்கள் உணர்ந்துகொள்ள வேண்டும் என்பதற்காகச் "செல்வம் வந்த வழியே செலவாகும்" என்னும் உலகியல் வழக்கைச் சிந்தித்துப் பார்க்கும்படி கூறுகிறோம். "வந்தவழி" என்பது முன்னைத் தீய முயற்சியைக் குறித்து நிற்கும். எனவே மயக்க நுகர்ச்சியைப் பயப்பிக்கும் செல்வம் முன்னைத் தீவினையின் பயனாக வருமே அன்றி நல்வினையின் பயனாக வராதென்பது தெளிவு.

துன்ப நுகர்ச்சியே ஒருவர்க்கு நன்னெறியில் ஈடுபாட்டை உண்டாக்கலாம்; துன்ப நுகர்ச்சியைப் பொருட்படுத்தாது சென்று அவர் பெருநிலையை அடையலாம். ஆனால் அவருக்கு அந்நுகர்ச்சி நிகழ்ந்தமைக்குக் காரணம் தீவினைப் பயனேயாகும். நல்லவர்க்குத் தீவினைப் பயனை ஊட்டி எஞ்சிநிற்கும் ஆணவமலத் தொடக்கை இறைவன் நெகிழ்விக்கின்றான் என அறிதல் வேண்டும். சாத்துவிக இன்ப நிலையிலும் ஒருசெருக்குத் தோன்றும். இச்செருக்கு இராசத, தமோகுணச் செருக்கினின்றும் வேறுபட்டதாகும். எனினும் இச்செருக்கும் கட்டினை உண்டாக்குமாதலால் நல்வினையையும் பொன்விலங்கென மெய்யறிவு நூற்கள் கூறுகின்றன. பல் காலம் இன்ப, துன்ப மயக்க நுகர்ச்சிகளைப் பெறுவதன் காரணமாக உயிரின் மலக்கட்டுப், பெரிதும் தளர்ந்து போகும். எனவே உரியகாலத்தில் அதற்கு இரு வினையையும் ஒப்ப நோக்கும் திறன் உண்டாகிறது. இருவினை ஒப்பு

ஏற்பட்டதும் இறைவன் ஞானத்தை உணர்த்த உயிர் பேரின்ப நுகர்ச்சியைப் பெறுகிறது. இஃதே உயிர் இறுதியிற் பெறும் உயர் நிலையாகும்.

தீவினைக்குப் பயனாகத் துன்பம் மட்டுமே வருமெனக் கொண்டமையாலும், தீவினைக்குப் பயனாக மயக்கமும் வருமென்பதையும் மெய்யறிவு நூல்கள் மயக்கத்தைத் துன்பத்தினுள் அடக்கிக் கூறியுள்ளன என்பதையும் மனத்திற் கொள்ளாமையாலும், பழைய உரையாசிரியர்கள் கூட நல்வினை தீவினைபற்றியும் செல்வமுடைமை பற்றியும் எழுதும் போதுபிழைபட்டிருக்கின்றனர். உலகியல் இன்பம் யாது? எனச் சிவஞானமுனிவர் வரையறுத்துக் கூறியிருக்கிறார். அதனை உளங்கொண்டு சிந்தித்தோமாமல் குழப்பங்கள் ஏற்பட இடமில்லை.

நல்வினை தீவினைப் பயன்களை இன்பம், துன்பம், மயக்கம் என்னும் மூவகை நுகர்வு நிலையில் வைத்துத் தெளிவுறத் தெரிந்து கொண்டால், ஆரவார வாழ்க்கையைக் கண்டு மனம் மருளாமல் இன்பம் செறிந்த அறவாழ்க்கையை அமைதியோடு நடத்திச் செல்லலாம். இதுவே வினைப்பயன் பற்றிய ஆராய்ச்சியால் பெறும் பயனாகும்.



# 3. இறைவனின் இயல்புகள்

## (பதி இலக்கணம்)

இப்போது நான் பேச எடுத்துக்கொண்ட "பொருள் பதி இலக்கணம்" என்பதாகும். எனக்கு முன் பேசிய அன்பர்கள் வேறு தலைப்புகளில் பேசினாலும் இறைவனிடத்துக்கொண்ட பேரன்பால் அவன் சிறப்பு இயல்புகள் பற்றி நிறையக் கூறினார்கள். அவர்கள் அருள் கூர்ந்து எனக்கு விட்டுத்தந்த இறைவனின் பொது இயல்புகள் பற்றி இரண்டொன்று சொல்லக் கருதுகிறேன்.

இறைவன் தன் நிலையில் நிற்பதைச் "சிறப்பு" என்றும், அவன் பிறபொருட்களோடு தொடர்புற்று நிற்பதைப் "பொது" (தடத்தம்) என்றும் கூறுவர்.

"ஒன்றாகியும் வேறாகியும் உடனாகியும்" நிற்பது இறைவனின் பொது இலக்கணங்களுள் ஒன்றாகும்.

"ஒன்றாகி நிற்கின்றான்" என்றால் அதன் பொருள் என்ன?" கலப்பால்ஒன்றாகி நிற்கின்றான் என மெய்யறிவு (சாத்திர) நூல்களில் படிக்கிறோம். இறைவன் எங்கும் நிறைந்தவன்; ஆதலால் எல்லாப் பொருட்களிலும் நிறைந்து நிற்பதையே "கலப்பால் ஒன்றாகி நிற்கின்றான்" என மெய்யறிவு நூல் சொல்வதாகச் சில சமயங்களில் எளிதாகக் கருதி விடுகின்றோம்.

"இருபொருட்கள் அவை பருமையாயினும், நுண்மையாயினும் ஒரே இடத்தில் இருப்பதென்பது கூடாது; ஒரு பொருளினிடத்தே மற்றொரு பொருள்

இருந்தால் அந்த அளவுக்கு நிறைவு குறையவே செய்யும், பாலும் நீரும் ஒன்றாகக் கலந்து நிற்கிறதே? என்றால் அங்ஙனம் கலக்கும்போது அளவில் கூடி விடுமாதலால் ஒரே இடத்தில் அவை இரண்டும் இல்லை என்பது தெளிவு. பிரமம் எங்கும் நிறைந்துள்ள பொருள்; எனவே அதனிடத்தே உயிர்களும், மலங்களும் உண்டென்பது பொருந்தாது; இருப்பது 'பிரமம்'' ஒன்றே; ஏனைப் பொருட்கள் வெறும் தோற்றமே அன்றி உண்மை அல்ல" என்பது சங்கரர் வேதாந்தத்தின் கருத்தாகும்.

கடவுள் மிக நுண்மைப் பொருள்; அஃது இடம் வேண்டிய பொருள் அன்று; இடம் வேண்டாப் பொருளாகிய கடவுளிடத்தே இடத்தைக் கற்பித்துப் பேசுவது தவறு. நுண்மைப் பொருட்கள் இடம் வேண்டாமலே தம்முள் நிறைந்து நிற்க முடியும். இறைவனை நோக்க உயிர்களும் ஏனைப் பொருட்களும் பருமையேயாகும். பருமையாகிய நீரில் நுண்மையாகிய சூடு எங்ஙனம் நீரின் எல்லாப் பகுதியுள்ளும் நீக்கமற நிறைந்து நிற்கிறதோ அது போல மிக நுண்மைப் பொருளாகிய கடவுள் ஏனைப் பொருடகளிடத்தே நீக்கமற நிறைந்து நிற்க இயலும். இதனையே உமாபதிசிவம், "திருவருட்பயனி"ல் "எரியுறு நீர் போல்" எனக் கூறியருளிக்கிறார். இறைவனின் முழு நிறைவு, உயிர்களும் ஏனைப் பொருட்களும் அடங்கிய நிறைவாயும் (வியாப்பியமாயும்) ஒப்பு நிறைவா (வியாத்தியா)யும் நிற்றல் இயலக்கூடியதேயாகும்" என்று நாம் விடை கூறுகின்றோம்.

இடம் வேண்டாப் பொருளாகிய இறைவனிடத்தே இடத்தைக் குறியாக வைத்துப் பேசுவது தவறேயாகும். ஆனால் "ப்ரம வித்யா" என்னும் பெயருடைய இதழ் ஆசிரியர், சோமசுந்தர நாயகர்

அவர்களை மறுத்தெழுதும் ஒரு கட்டுரையில் இறைவனின் முழு நிறைவு பற்றி மிக நுணுக்கமான ஒரு தடையை எழுப்பியிருக்கிறார். அஃது ஆழ்ந்து சிந்திக்க வேண்டிய ஒன்றாகும். "முழு நிறைவு" என்பது இடத்தை மட்டும் குறித்து நிற்பதன்று. தன்மை, செயல் ஆகியவைகளில் பிற பொருட்களின் சாயல் இருக்குமானாலும் ஒரு பொருள் முழுநிறைவுடையதாகாது. அடங்கிய நிறைவும் ஒப்பு நிறைவும் தம்மளவில் யாண்டும் நிறைந்துள்ள தன்மையை குறிக்கும். முழுநிறைவென்பது இடம், தன்மை, செயல் யாவும் தானேயாக நிறைந்துள்ள தன்மையைக் குறிக்கும். இறைவன் குறையற்றவனாதலால் முழு நிறைவுடையவன் என மறைகள் கூறுகின்றன. இதனை அப்படியே ஒப்புக்கொள்ளுவதென்றால் இறைவனைத் தவிர வேறு பொருட்களே இல்லை என்றும் உலகுயிர்த் தன்மைகளும் செயல்களும் பொய்த் தோற்றமே என்றும், கூறுவதைத் தவிர வேறு வழியில்லை. "எரியுறு நீர்" எடுத்துக்காட்டுப் பொருந்தாது ; நீர் பொருள் ; சூடு குணம் ; பொருளில் குணம் நிறைவதைப்பற்றி நாம் பேசவில்லை ; பொருளும் பொருளும் ஓரிடத்தில் நிறைந்து நிற்க முடியுமா? என்பதே இங்கு ஆராய வேண்டிய ஒன்றாகும்." எனப் "ப்ரம்ம வித்யா" ஆசிரியர் எழுதியுள்ளார். இதனை வேறொரு முறையாகவும் விளக்கலாம்." நீர் - சூடு உவமையை இடத்திற்கு எடுத்துக் கொள்ளாமல் தன்மை செயல்களுக்கு எடுத்துக் கொள்வோம். நீரில் சூடு நிறையும்பொழுது நீரின் தண்மை இயல்பு அடங்கிப் போக அது வெந்நீராகிறது. சூடு அதிகரிக்கும்போது தண்ணீர் ஆவியாக மாறி வற்றிப் போகிறது ; இறைவன் பேராற்றலும் பேரறிவும் வாய்ந்தவன். அவன் உயிர்களுள்ளும்

ஏனைப் பொருள்களுள்ளும் நிறைந்து நிற்கும்பொழுது அவையாவும் தம்மியல்பு வெளிப்படாமல் அடங்கி நிற்க வேண்டும், அல்லது நீர்வற்றிப் போவதுபோல இறைவனது நிறைவுள் அவை நிற்க முடியாமல் அழிந்து போக வேண்டும். நறுமணம் மிகுதியும் பரவும்பொழுது தீநாற்றம் அடங்கிப் போகின்றது. அங்ஙனம் அடங்கவில்லையேல் நறுமணம் முழுநிறைவு பெறவில்லையென்றே கொள்ளவேண்டும். பேரறிவுப் பொருளாகிய இறைவன் நிறைந்து நிற்கும் நிலையில் அறியாமையைச் செய்யும் மலமும், அறியாமையால் கட்டுற்ற உயிர்களும் தம்மியல்பு கெட்டு அழிந்து போகாமல் நிற்கின்றன என்று சொல்வது இறைவனின் முழு நிறைவுத் தன்மைக்கு இழுக்காகும். "ஞாயிறு இருந்தும் படலமுற்ற கண் ஞாயிற்றை அறியாது இருளில் அழுந்துவதால், ஞாயிறு, கண், இருள் மூன்றும் இருத்தல் போல, மலக்கட்டுற்ற உயிர் இறைவனை அறியாது நிற்பதால், உயிர், மலம், இறை ஆகிய மூன்று பொருளும் உண்டு" என்னும் கருத்தை இங்கே கொண்டு வந்து குழப்பக்கூடாது. உயிர் இறைவனை அறிய முடியாமல் நிற்பதற்குத் தான் இதனைக் கூறலாம். இறைவனின் முழு நிறைவுள் உயிரும்தளையும் நிலை பெறுவதற்கு இதனைக் காரண மாகக் கூறமுடியாது. ஒரு பொருள் முழு நிறை வெய்தும்போது பிறபொருட்களின் தன்மைகள் காணப்படுவது பொருந்தாது. எனவே உயிரும், தளையும் தம் நிலைகெடாமல் இறைவன் நிறைவுள் நிற் கின்றன என்றால் அஃது இறைவனின் முழுநிறைவுத் தன்மைக்கு இழுக்கேயாகும். இந்தச் சிக்கலைச் சைவ சித்தாந்தம் எங்ஙனம் தீர்க்கின்றது?

இறைவன் பேராற்றலும், பேரறிவும் வாய்ந் தவன் என்பதோடு அவன் பேரருளும் உடையவன்

என்பதை நாம் மறக்கக்கூடாது. பேரருள் வாய்ந்த இறைவன் உயிர்கள் தன் நிறைவுக்குள் நிலைபெறும் பொருட்டு அவற்றுள் நீக்கமற நிறைந்து நிற்பதோடு அமையாமல் அவையாகவும் நிற்கின்றான். குழந்தைக்கு இருப்பு நல்கும் தாய், குழந்தையால் பற்றப்படும் பொருள்கட்கும் இருப்பு நல்குவதுபோல, உயிர்கள் நிலைக்கும் பொருட்டு அவையாகவே நிற்கின்ற இறைவன், அவ்வுயிர்களால் பற்றப்படும் பொருட்களும் நிலைபெறும் பொருட்டு அதுவதுவாகவும் நிற்கின்றான். பேராற்றல் வாய்ந்த இறைவனால் மட்டும்தான் இங்ஙனம் நிற்க முடியும். இதனால்தான் "கடவுளே அனைத்துமாகின்றார்" "(God is all)"- எனக் கூறுகின்றோம். "அனைத்தும் கடவுளாகின்றன" "(All is God)" என்பதுநேர் பொருளில் பொருத்தமாகாது. கடவுள் எல்லாமாக நிற்க முடியும். ஆனால் எல்லாம் கடவுளாக நிற்க முடியாது. வீடு பேற்று நிலையிலும் உயிர் சிவமாக நிற்கவில்லை, உயிரைச் சிவமாக்கி இறைவன் நிற்கின்றான். "சிவமாக்கி எனையாண்ட" என்னும் திருவாசகம் இதனைத் தெளிவுறுத்தும். எனவே "ஒன்றாகி" நிற்பதென்பது இறைவன் எல்லாப் பொருட்களிலும் நிறைந்து நிற்கிறான் என்பதோடு அமையாமல் அந்தந்தப் பொருட்களாகவும் நிற்கின்றான் என்பதை உணர்த்துகிறதென நாம் அறிந்துகொள்ள வேண்டும். "ஒன்றாகி" என்பது பொருட்களில் நிறைந்து நிற்பதை மட்டும் குறிக்கவில்லை; அந்த அந்தப் பொருளாக நிற்பதையும் அது குறிக்கிறது. இறைவன் பேராற்றல் வாய்ந்தவனாதலால் அந்தந்தப் பொருளாக நிற்பதோடு, அதே சமயம் வேறாகவும் நிற்கின்றான். எனவே அவன் இதனால் மாறுதல் அடையவில்லை. அருள் காரணமாகவே இங்ஙனம் நிற்கின்றான்.

ஆகவே உயிரையும், உலகையும் பார்க்கும்போது அவன் பேரருள் தன்மையே புலனாகின்றது. உலகுயிர்களின் தோற்றம் அவன் பேரருட் தன்மையே புலப்படுத்தி நிற்பதால் அவன் தன்மைதான் எங்கணும் நிறைந்து நிற்கிறதென்பது கூறாமலே விளங்கும். ஆகவே அந்தந்தப் பொருளாக "ஒன்றாகி" நிற்பதன் மூலம் அவனுடைய முழுநிறைவுத் தன்மையும் நிலைபெறுகிறது. உயிர்களும் தனையும் தம் இயல்பு கெடாமல் நிலைபெறவும் முடிகிறது. இஃதே ஒன்றாகி நிற்பதன் நுட்பமாகும். ஒன்றாகி நிற்றலால் இறைவனின் முழுநிறைவுக்குள் எல்லாப் பொருட்களுக்கும் இருப்புக் கிடைக்கின்றதென்பது தெளிவு.

அறிஞர் சிலர் இறைவன் உலகோடு ஒன்றாகியும் உயிரோடு உடனாகியும் நிற்கின்றான் என்று கூறுகின்றனர். இது பொருந்தாது. இறைவனின் முழு நிறைவுத்தன்மை காரணமாக அவன் உலகோடு ஒன்றாவது மட்டும் போதாது; உயிரோடும் ஒன்றாகியே நிற்கவேண்டும். மெய்ந்நூற்களும் ஐயத்திற்கிடமின்றி இறைவன் உலகோடும் உயிரோடும் ஒன்றாகி நிற்பதாகவே கூறுகின்றன. உயிரோடு அவன் ஒன்றாகி நிற்காவிட்டால் அவை தாமாக நிலைத்து நிற்கின்றன என்று கொள்ள வேண்டியது வரும். இஃது இறைவனின் முழு நிறைவுத் தன்மைக்கு இழுக்காகும். "இருபொருள் ஓரிடத்திருக்க முடியுமா?" என்னும் கேள்வி, "இறைவன் ஒவ்வொரு பொருளோடும் அதுவதுவாகவே நிற்கின்றான்" எனக் கூறும்போது அடிபட்டுப்போகிறது.

"ப்ரம்மவித்யா" ஆசிரியர் இறைவனின் முழு நிறைவுத் தன்மையை நிலைநாட்டுவதற்காக உலகு

யிர்த் தன்மைகள் யாவும் பொய்த் தோற்றம் என்று கொள்ளச் சொல்கிறார். உண்மைப் பொருளாகிய இறை இடத்தே பொய்த் தோற்றம் உண்டாவதும் முழு நிறைவுத் தன்மைக்கு இழுக்கேயாகும் உயிரும் உலகமும் உண்மையில் இல்லையென்றால், இறைவனுக்கு இத்தகைய பொய்த் தோற்றத்தை உண்டாக்க வேண்டிய தேவை இல்லை. அவன்தானே உலகுயிராக விளங்க வேண்டிய தேவையும் இல்லை. ஆகவே உலகுயிர்கள் உண்மையே என்றும் இறைவன் அருள் காரணமாக அவற்றில் கலந்து நிற்பதோடு அமையாமல் அவையாகவும் நிற்பதால் அவை தம் இருப்புக்கெடாமல் அவன் நிறைவுள் இடம் பெறுகின்றன என்றும், அங்ஙனம் அவை நின்று தோற்றுவது, இறைவனின் அருட்டன்மையே புலப்படுத்துவதால், இறைவனின் அருளே எங்கும் நிறைந்து நிற்கின்றதென்றாகி, அவனின் முழுநிறைவுத் தன்மை இழுக்கின்றி நிலைபெறுகிறதென்றும் அறிதல் வேண்டும்.

"அதுவதுவாய்" நிற்பதற்கு இறைவன் ஒருவனால்தான் முடியும். ஆகவே இதற்கு உதாரணங்கள் காட்ட இயலாது. "என் - எண்ணெய்" "நீர் - சூடு" முதலிய உதாரணங்கள் அவன் நிறைவைக் காட்டுவதற்குள்ள ஒரு புடை உதாரணங்களே ஆகும். உயிர் உடலினுள் நிறைந்து உடலாகவே நிற்பதை வேண்டுமானால், "அதுவதுவாய்" நிற்பதற்கு ஓர் உதாரணமாகக் காட்டலாம். இதுவே சிவஞான போதத்தில் வரும் "கட்டும் உறுப்பும்" என்னும் வெண்பாவில் காட்டப்படும் உதாரணமாகும். உடலும் உயிரும் ஒன்றாகி நின்றாலும் உடல் உடலே; உயிர் உயிரே; இதுபோலவே இறைவனும் உயிரும் ஒன்றாகி நின்றாலும் இறைவன் இறைவனே, உயிர் உயிரே; இவ்வேற்றுமையை

நன்கறிந்து கொள்ளவேண்டும். இனி வேருகி நிற்பதை ஆராய்வோம்.

உயிர்களாகவே இறைவன் நின்ருல் அவை கட்டுற்ற நிலையிலேயே என்றும் இருக்க நேரிடும். இதனுல்தான் வேருகியும் நின்று அறிவிக்க வேண்டிய கடமை இறைவனுக்குண்டாகிறது. முற்றறிவும் எல்லையில் ஆற்றலும் உடைய இறைவன் ஒன்ருகி நிற்கும் அதேசமயம் அதனுல் வேறுபாடு அடையாது வேருகவும் நிற்க முடியும் என்பது பொருத்தமுடைய ஒரு கருத்தேஆகும். ஞாயிற்றின் ஒளி மாறுபாடு அடையாமல் கண்ணெளியோடு ஒன்ருகக் கலந்து அதுவேயாகியும் அதே சமயம் வேருகவும் நின்று பொருட்களைக் காட்டுவது போல, இறைவனும் உயிர்களோடு ஒன்ருகநிற்பதோடமையாது வேருகவும் நின்று அறிவித்து வருகின்ருன். அறிவிப்பதற்கு வேருகி நின்ருல்தான் முடியும் நமக்குள்ளே நின்று அறிவிக்கும் போதும், அவன்' வேருகி நின்றே" அதனைச் செய்கின்ருன் ; புறத்தே,நின்று அறிவிக்கும் போதும் " வேருகி நின்றே " அதனைச் செய்கின்ருன். எனவே உயிரோடு உயிராக நிற்பது அவ்வுயிர் நிலைத்தற்காக என்றும், அதனின் வேருக நிற்பது அதற்கு அறிவிப்பதற்காக என்றும் அறிதல் வேண்டும்.

உயிர்கள் யாவும் ஒரே தன்மையுடையன அல்ல. இதனுல்தான் அவை பலவாக இருக்கின்றன. ஒவ்வோருயிர்க்கும் அதற்கேயுரிய தனி இயல்புகள் உண்டு.

உயிர்கள் அனைத்துக்கும் ஒன்று போலவே அறிவித்து உடனடியாக வீடுபேற்று நிலைக்கு இட்டுச்செல்வது என்பது உயிர்களின் நிலைக்கு

ஏற்றதன்று. அந்தந்த உயிர்களின் தனி இயல்புகள், நுகர்ச்சி நிலைகள் ஆகியவற்றிற்கு ஏற்பவே இறைவன் அறிவிக்கவேண்டும். இங்ஙனம் அறிவிப்பதன் மூலம் படிமுறையே உயிர்கள் அறிவு விளக்கம் பெற்று முன்னேறுகின்றன. வேறாகி நின்று அறிவிப்பதால் உயிர்கள் தத்தம் இயல்பிற்கு ஏற்ப அறிவு விளக்கம் பெற முடிகிறது. இது "வேறாகி" நிற்பதால் ஏற்படும் பயனாகும்.

இனி "உடனாகி" நிற்பதைக் கவனிப்போம். அறிவிக்கப்பட்ட பொருட்களைப்பற்றி அழுந்தியறிந்தே உயிர்கள் முன்னேற வேண்டும். "அழுந்தி அறிதல்" (அநுபவித்தல்) என்பது என்ன? உயிர்களின் அறிவு, விருப்பம், செயல்கள் பொருட்களைப் பற்றி இயங்குவதே "அழுந்தி அறிதல்" என்று கூறப் படும். இறைவன் ஒன்றாகி நிற்பதால் அவனை விடுத்து உயிர்களின் அறிவு, விருப்பம், செயல்கள் தனித்து இயங்கவராது. இறைவனின் அறிவு, விருப்பம், செயல்கள் இயங்காமல் வாளா இருக்க, உயிர்களின் அறிவு, விருப்பம், செயல்கள் இயங்கும் என்றால் ஒன்றாகி நிற்கும் நிலை அடிபட்டுப் போகும். அந்நிலை போய்விட்டால் உயிர்கள் நிலைக்கவே முடியாது. எனவே உயிர்களின் அறிவு, விருப்பம், செயல்கள் இயங்குவதற்காக இறைவனின் அறிவு, விருப்பம், செயல்களும் இயங்க வேண்டியதிருக்கிறது. இறைவனின் அறிவு, விருப்பம் செயல்களுக்கு ஏற்றவாறு உயிர்களின் அறிவு, விருப்பம், செயல்கள் இயங்கும் ஆற்றல் உடையவை அல்ல. எனவே உயிர்களின் அறிவு, விருப்பம் செயல்களுக்கு ஏற்பவே அருள் நிறைந்த இறைவன் தனக்கென எந்த நுகர்ச்சியும் வேண்டாதிருந்தும், தன் அறிவு, விருப்பம், செயல்களை இயங்கச் செய்கின்றான். ஒன்றாகி இயங்கினால்

நுகர்வை இறைவனும் பெறுகின்றான் என்றாகிவிடும். ஆகவே அவன் ஒன்றாகி இயங்காமல் உடனாகி இயங்கு கிறான் என அறிதல் வேண்டும். உடனாகி நிற்பதால் நுகர்வு இறைவனைச் சாராமல் உயிரைச் சார்கிறது. எனவே, உயிர்கள் அறிதற்பொருட்டு அவனும் உடன் நின்று அறிகின்றான்; அவை விரும்புவதற்பொருட்டு அவனும். உடன் நின்று விரும்புகின்றான்; அவை செயலாற்றுதற் பொருட்டு அவனும் உடன் நின்று செயலாற்றுகிறான். உயிர்கள் அறிவதற்காக அவனும் உடன் நின்று அறிவது அவனின் அளப்பரும் அருளுக்குப் பெரியதோர் எடுத்துக்காட்டாகும். இதனால்தான் வேறாகி நின்று அறிவிக்கும் உதவியி னும் பார்க்க உடனாகி நின்று அறியும் உதவி பெருஞ் சிறப்புடையதெனக் கூறப்படுகிறது. இங்ஙனம் உடனாகி நிற்பதன்மூலம் உயிர்கள் அறிந்தும், விரும்பி யும், செயல் புரிந்தும் நுகர்வு பெறுகின்றன. இஃது உடனாகி நிற்பதன் பயனாகும்.

உயிரோடு இறைவன் உடனாகி நிற்பது அவை நுகர்வு பெறுதன் பொருட்டென்றால் உயிரற்ற உலகப் பொருட்களோடு அவன் உடனாகி நிற்க வேண்டிய தேவை என்ன? அவற்றிற்கு நுகர்ச்சி வேண்டியதில்லையே? மெய்ந்நூற்கள் உலகோடும் அவன் உடனாகி நிற்பதாகக் கூறும் காரணம் யாது? எனக் கேட்கலாம். உயிரற்ற உலகப் பொருட்கள் அவற்றின் இயல்புக்கேற்பு இயங்கினால்தான் உயிர் கள் நுகர்வு பெறமுடியும். தீ சுடவேண்டும்; காற்று வீசவேண்டும்; அப்பொழுதுதான் உயிர் பயன்பெற இயலும். அந்தந்தப் பொருளாக நிற்கும் இறைவன் அவை தத்தம் இயல்புப்படி இயங்குவதற்காகத் தானும் உடன் நின்று இயங்கவேண்டியதிருக்கிறது.

நீயோடு ஒன்றான நிலையில், தீ சுட்டால் இறைவனே சுடுகிறான் என்றாகிவிடும். தீயோடு இறைவன் உடனாக நிற்க, அது தன் இயல்புப்படி சுடுகிறதென்பதே பொருத்தமாகும். ஆகவே உயிரில் பொருட்களின் இருப்புக்காக அவற்றோடு ஒன்றாகி நிற்பதோடு, அவை தத்தம் இயல்புப்படி இயங்குவதற்காக இறைவன் உடனாகவும் நிற்க வேண்டியதாகிறதென அறிய வேண்டும்.

உயிரும் உலகும் தன் நிறைவுள் இடம் பெறுவதற் பொருட்டு ஒன்றாகியும் அவற்றை இயக்குவித்தற் பொருட்டு வேறாகியும் அவை இயங்குதற் பொருட்டு உடனாகியும் இறைவன் நிற்கின்றான். இதனால் இறைவனின் முழு நிறைவுக்கும், பேரறிவுக்கும், பேராற்றலுக்கும், பேரருளுடைமைக்கும் சிறப்பே அன்றி இழுக்கொன்றும் இல்லை என்பது தெளிவு.

இனி இறைவனின் மற்றொரு பொது இயல்பு பற்றிச் சிந்திப்போம்:

இறைவன் தன் இயல்பில் அருவமோ, அருவுருவமோ, உருவமோ உடையவன் அல்லன். ஆனால் அருளால் உயிர்கள் முன்னேறும்பொருட்டு அருவம், அருவுருவம், உருவம் ஆகிய மூவகைத் திருமேனிகளையும் கொள்கின்றான். இம்மூவகைத் திருமேனிகளில் உருவத் திருமேனியே நம்மால் எளிதில் வழிபடக் கூடியது. ஆனால் இவ்வுருவத் திருமேனிகள் கற்பனை என்றும் நம் மனம் நிலைத்தற்பொருட்டு மெய்ப் பொருள் கருத்துக்களை உள்ளடக்கி இவற்றைப் பெரியோர்கள் அமைத்துத் தந்தனர் என்றும் சிலர் கூறுகின்றனர். எல்லையில் ஆற்றலும், அருளும் நிறைந்த இறைவன் உருவத் திருமேனி கொள்ளமுடியும் என்பதை இவர்கள் ஒப்புக்கொள்கின்றனர். அப்புறம்

ஏன் இவை கற்பனை என்றும், மெய்ப்பொருட்களை உணர்த்துவதற்காக இவற்றைப் பெரியோர்கள் அமைத்துக் கொடுத்தனர் என்றும் கூறவேண்டும்? இறைவனின் அருள் உண்மை என்றால், அவன் அருளால் கொள்ளும் உருவத் திருமேனியும் உண்மையே யாகும். இறைவனின் உருவத் திருமேனிதான் மெய்ப் பொருட் கருத்துக்கு மூலமாகுமே அன்றி இறைவனின் உருவத் திருமேனிக்கு அவை மூலமாகமாட்டா. மெய்ப்பொருட் கருத்துகளுக்கு முதன்மை நல்கி இறைவனின் உருவத் திருமேனிக்கு இழுக்கு நேரும் வண்ணம் பேசுவது இறைவன் இருப்பிலும், அவன் அருளிலும் நம்பிக்கை இன்மையையே காட்டும் என்பதை நாம் உணரவேண்டும். எனவே அடியவர் பொருட்டு இறைவன் பல்வகை உருவத் திருமேனிகள் கொள்ளுகின்றான் என்றும், அவை உண்மையே என்றும் நாம் அறிந்துகொள்ள வேண்டும்.

கோயிலில் இறைவன் கொண்ட பல்வேறு திருமேனிகள் "நிலைபெறுதல்" (பிரதிட்டை) செய்யப் பெற்றிருக்கின்றன. அவற்றுள் ஒன்றை "வழிபடு கடவுளாக', நாம் எடுத்துக் கொள்ளவேண்டும். கோயிலுக்குச் செல்லுவது நமக்கேற்ற மணமகனை (வழிபடு கடவுளை)த் தேர்ந்தெடுப்பதற்கே யாகும். இராம கிருட்டிண பரம அம்சர் "திருமணம் ஆயிற்றா?" என்று தம்மிடம் வருவோரைப் பார்த்துக் கேட்பாராம். "வழிபடு கடவுளை இன்னும் நீங்கள் தேர்ந்தெடுத்துக் கொள்ளவில்லை யானால் உங்களுக்கு இன்னும் திருமணம் ஆகவில்லை" என்று கூறுவாராம். எனவே நாம் நாள்தோறும் "திருமண மாகாதவராகவே" கோயிலுக்குச் சென்றுவருவதில் பயனில்லை,

விருப்பமான ஒரு திருவுருவத்தைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளவேண்டும். அத்திருவுருவம் முருகனாக இருக்கலாம்; பிள்ளையாராக இருக்கலாம்; தில்லைக் கூத்தனாக இருக்கலாம்; அம்மையாக இருக்கலாம். நமக்கு விருப்பமான எந்தத் திருவுருவத்தையும் எடுத்துக் கொள்ளலாம். திருவுருவங்களுள் உயர்வு தாழ்வு கருதுவது தவறாகும். "ஒருவரே பலபேருளர் காண்மினே" என்பது தேவாரம். நாம் எடுத்துக்கொண்ட வழிபடு கடவுளை இடையறாது அகத்தேயும் புறத்தேயும் சிந்தித்து வழிபாடாற்றவேண்டும். அத்திருவுருவத்தின் திருப்பெயரை இடைவிடாது சொல்லவேண்டும். திருப்பெயர் சொல்லுதல், மந்திரம் உருவேற்றல், திருமுறை ஓதுதல், வழிபடுகடவுளின் உருவத்தை நெஞ்சில் வைத்துத் தியானித்தல், நல்லொழுக்கத்துடன் வாழ்தல் இவையே சாதனையாகும் வேறு சாதனை வேண்டுவதில்லை. இதற்குமேல் சரியை பெரிதா? கிரியை பெரிதா? யோகம் பெரிதா? ஞானம் பெரிதா? என வழக்கிடுவது அறியாமையாகும். திருவருள் என்பது அறிவற்றதன்று. ஒருபடியில் நாம் ஏறிவிட்டால் ஏனைப்படிகளுக்கு அது நம்மைத் தானே இட்டுச் செல்லும். வழிபடுகடவுளிடத்தே உறைத்த அன்பு கொண்டால் போதும். அவரே மீண்டும் பிறவிக்கு வாராத வீடு பேற்றையும் தருவார் என உறுதி கொள்ளவேண்டும். எல்லா ஞானமும் அவராலே கிடைக்கும் என்பதில் ஐயமில்லை. "மேற்படியில் நிற்கிறோம்" என்று கருதினாலே கீழ்ப்படிக்கு நாம் வந்துவிட்டோம் என்னும் உண்மையை நாம் உணரவேண்டும். நாம் செய்ய வேண்டுவது வழிபாடே. ஏனையவற்றை வழிபடு கடவுள் பார்த்துக்கொள்வார். அந்தக் கவலை நமக்கு வேண்டுவதில்லை; கவலைப்படுவதும் தவறாகும்.

இதுகாறும் பொறுமையுடன் செவிமடுத்த உங்களுக்கும், எனக்குப் பேச இடமளித்த சமாசத்தார்க்கும் என் நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்கிறேன். வணக்கம்.

## 4. மரம் முந்தியா? வித்து முந்தியா?

மரம் முந்தியா? வித்து முந்தியா? என்னும் கேள்வியைக் கற்றவர் முதல் கல்லாதவர் ஈறாக எல்லாரும் கேட்பதுண்டு. மரம் இன்றி வித்தோ, வித்தின்றி மரமோ தோன்றாதாதலால், இக் கேள்விக்கு விடை இல்லை என்றே நாம் நினைக்கிறோம். ஆனால், சைவசித்தாந்தத்தில் இதற்கு விடை கூறியாக வேண்டிய ஒரு கட்டம் வருகிறது.

வினைக்கீடாக உயிர்களுக்கு உடல்கள் அமைகின்றன என்பது சைவசித்தாந்தக் கொள்கையாகும். இதுபற்றிச் சிவஞானசித்தியாரில் அருணந்தி சிவம் பின்வருமாறு அருளிச் செய்திருக்கிறார்:-

"உடற்செயல் கன்மம் இந்தஉடல் வந்தவா றதென்னின்
விடப்படும் முன்னுடம்பின் வினை இந்த உடல் வினைக்குந்
தொடர்ச்சியால் ஒன்றுக்கொன்று தொன்று தொட்ட நாதிவித்தின்
இடத்தினின் மரம் மரத்தின் வித்தும் வந் திடையுமாபோல்"

இதன் பொருள்: "உடலின் முயற்சியால் வினை உண்டாகும். அவ்வாறானால் இவ்வுடல் உண்டாவ

தற்குக் காரணம் யாதெனின் விடப்பட்ட முன் உடம்பின் வினையாம். அவ்வினையே இவ்வுடம்பை உண்டுபண்ணும். இவ்வாறு வினையால் உடம்பும், உடம்பால்வினையும் வருதல் வித்தின்கண் மரமும், மரத்தின்கண் வித்தும் வந்து பொருந்துமாறு போலாம். வினை, உடல் என்னும் இவ்விரண்டும் ஒன்றுக்கொன்று காரண காரியமாய்த் தொன்று தொட்டு அநாதியாக வரும்."

இச்செய்யுளிலிருந்து உடல் அமைவதற்கு வினை காரணம் என்றும், வினைசெய்வதற்கு உடல் காரணம் என்றும் தெரியவருகிறது. அங்ஙனமானல் உடல்முந்தியா? வினைமுந்தியா? என்னும் கேள்வி இயல்பாகவே எழுகிறது. இதற்கு விடை காணும் பொழுதுதான் மரம்முந்தியா? வித்துமுந்தியா? என்னும் கேள்விக்கும் விடை பிறக்கிறது,

தொன்மையாக வருவதால் உடல், வினை என்னும் இவ்விரண்டில் எது முந்தி? என்று கூற இயலாதென்று இக்கேள்விக்கு விடை இறுத்தோமானல் அது யார்க்கும் நிறைவளிக்காது. இதனை நன்கறிந்தே பின்வந்த சந்தான ஆசிரியரான உமாபதிசிவம், இங்கு அருணந்தி சிவம் கூறுவது மறுதோற்றம் (புனருற்பவம்) பற்றியாதலால், அநாதியென்பது "பிரவாக அநாதி" யைக் குறிக்கும் எனக் கொண்டு, இக்கேள்விக்குச் சரியான விடையைச் சிக்கறுத்துப் "போற்றிப் பஃறொடை" யில் கூறியருளியிருக்கிறார். அதனை ஈண்டு ஆராய்வோம்.

அநாதி கேவலத்தில் உயிர்களுக்கு எந்தவகையான உடலும் இல்லை. காரணஉடல், நுண்ணுடல், பருவுடல் ஆகிய யாவும் பின்னே இறைவனல் அவை

களுக்கு மாயையினின்றும் ஆக்கி அளிக்கப்பட்டவை யாகும். மேலும் அக்கேவல நிலையில் உயிர்களின் அறிவு, விருப்பம், செயல்களை நிகழவொட்டாமல் ஆணவமலம் மறைத்து நிற்பதால், அவை எந்த வினையையும் ஆற்றுவதற்கு இடம் இல்லை, இதனால் இறைவன் அவைகளுக்கு முதன்முதல் படைத்தளிக்கும் உடல்கள் வினை காரணமாக அமையமுடியாது. எனவே ஆணவமலக் கட்டினின்றும் உயிர்களை விடுவிக்கவேண்டும் என்னும் அருளால் இறைவன் தன் விருப்பத்திற்கே முதன் முதல் அவைகளுக்கு உடல்களைப் படைத்தளிக்கின்றான் என்பது தெளிவு.

வினை காரணமாக அமையாமல் இறைவனின் அருள் காரணமாக அமைகின்ற உடல்கள், எல்லா உயிர்களுக்கும் ஒரே தன்மையனவாகவே இருத்தல் வேண்டும். அங்ஙனம் இல்லாமல் பல்வேறு வகையான உடல்கள் உயிர்களுக்கு அமைந்திருக்கக் காரணம் என்ன? இங்கு மிக நுண்ணியதான ஒரு கருத்தைச் சைவசித்தாந்தம் வெளியிடுகிறது. இது சைவசித்தாந்தத்திற்கே உரிய தனிக் கருத்தாகும்.

ஒவ்வோர் உயிரும் தனித்தனியே வெவ்வேறு வகையான நுகர்வுகளைப் பெறுவதால் உயிர்கள் பல என்று கூறுகிறோம். எல்லா உயிர்களும் ஒரே வகையான் இயல்புகளை உடையன என்றால் அவை பலவாக இருத்தல் முடியாது. இலக்கணத்துள் ஒருவாற்றானும் வேற்றுமையில்வழி இலக்கியம் பலவாதல் செல்லாது. (சிவஞானபோதம். பிரமாணவியல் முதல் நூற்பா 8 ஆம் அதிகரண உரையில் சிவஞான முனிவர் கூறுவதைக் காண்க.) இதனால் ஒவ்வோர் உயிர்க்கும் அதற்கே உரித்தான தனி இயல்புகள் உண்டு என்பது பெறப் படும். இவ்வியல்புகளின் வேறுபாட்டால் ஆணவமல வேறுபாடு உண்டாகிறது. தொன்மையே உயிர்

களுக்குள் "விஞ்ஞானகலர்" "பிரளயாகலர்" "சகலர்" என்னும் வேறுபாடுவரக் காரணம் என்ன என்பதற்கு, ஆணவமலம் மட்டும் உடைமையால் "விஞ்ஞான கலர்" என்றும், ஆணவம், வினை, ஆகிய இருமலம் உடைமையால் பிரளயாகலர் என்றும் ஆணவம், வினை மாயை ஆகிய மும்மலம் உடைமை யால் "சகலர்" என்றும் அவை பகுக்கப்பட்டன எனக் கூறுவது சரியான விடையாகாது. ஏனெனில் தொன்மையில் எல்லா உயிர்களுமே ஆணவமலக் கட்டு ஒன்றுமட்டுமே உடையனவாய் இருந்தன. எனவே ஆணவமல மறைப்பின் வேறுபாட்டாலேயே அவை மூன்றாகப் பகுக்கப்பட்டன என்பதை உணர்தல் வேண்டும். மல ஆற்றல் பலவாதலால் மறைப்பும் பல்வேறு வகைப்படும் என்பதும் பொருளைப் போதிய அளவு விளக்கியதாகாது. அறிவற்ற மலஆற்றலுக்கு இன்ன உயிரை இன்ன அளவுதான் மறைக்க வேண்டுமென்னும் உணர்வு இருக்க முடியாது. உயிர்களுக்குரிய தனி இயல்பு வேறுபாட்டாலேயே (Inidividual difference) மல மறைப் பிலும் வேறுபாடுகள் ஏற்பட்டனவென்றும் அங்ஙனம் உள்ள வேறுபாட்டினிற்கேற்பப் பெரும் பிரிவாய் உயிர்கள் "விஞ்ஞான கலர்," "பிரளயா கலர்", "சகலர்" எனப்பகுக்கப்பட்டன என்றும். இங்ஙனம் மூவகையாகப் பகுக்கப்பட்டனவெனினும், ஒவ்வொரு வகுப்பினுள்ளும் உயிர்களுக்குள்ள தனி இயல்புகள் பலவாதலால், மலமறைப்பு வேறுபாடும் பலவகையாகும் என்றும் நாம் தெரிந்து கொள்ளல் வேண்டும். இந்நுட்பங்களை எல்லாம் சிவஞான போதப் பேருரையில் சிவஞான முனிவர் நன்கு விளக்கியுள்ளார். இனி எடுத்துக்கொண்ட பொருளுக்கு வருவோம்.

அநாதி கேவலத்தில் ஆணவமலத்தால் மறைப்புண்டு அறிவு, விருப்பம், செயல்கள், விளக்கம் இன்றிக் கிடந்த உயிர்களுக்கு மாயையினின்றும் இறைவன் முதற்கண் நுண்ணுடல்களைப் படைத்தளிக்கின்றான். அவன் அருளே காரணமாகப் படைத்தளிப்பதால் எல்லா உயிர்களுக்கும் ஒரே தன்மையவான நுண்ணுடல்களையே ஆக்கி அளிக்கின்றான். ஓர் அறிவு முதல் ஆறறிவு ஈறாக உள்ள எல்லா உயிர்கட்கும் நுண்ணுடல் ஒன்றுபோன்றே உள்ளது. நுண்ணுடல் என்பது சுவை, ஒளி, ஊறு, ஓசை நாற்றம் என்னும் நுண் பொருள் (தன்மாத்திரை)கள் ஐந்தும், மனம், அகங்காரம், புத்தி என்னும் அகக்கருவிகள் மூன்றும் ஆக எட்டுறுப்புகளால் ஆயதாகும். இறைவன் எல்லா உயிர்களுக்கும் ஒன்றுபோலவே நுண்ணுடல்களை ஆக்கி அளித்தவுடன் அவற்றின் அறிவு, விருப்பம், செயல்கள் சிறிது விளக்கம் பெறுகின்றன. நாம் முன்னர் எடுத்துக்காட்டியவாறு உயிர்களுக்குரிய தனி இயல்பு வேறுபாட்டாலும், அவ் வேறுபாட்டால் ஏற்பட்ட மலமறைப்பு வேறுபாட்டாலும் நுண்ணுடற்கண் உள்ள மனத்தில் அவை ஒவ்வொன்றுக்கும் வெவ்வேறு வகையான விருப்பு வெறுப்புக்கள் தோன்றுகின்றன. தெளிவு பெறாத இவ் விருப்பு வெறுப்புக்களைக் குறிப்பால் உணர்ந்து இவைகளையே துவக்க வினைகளாகக் கொண்டு, இறைவன் உயிர்களின் மன நிலைக்கு ஏற்றவாறு பருவுடல்களைப் படைத்தளிக்கின்றான். இதனாலேயே பருவுடல்கள் பல்வேறாக அமைய வேண்டுவதாயிற்றென்க. இங்ஙனம் அமைந்த பருவுடல்களால் உயிர்கள் வினைகளை ஆற்ற அவ்வினைகளால் பின்னர் உடம்புகளும் அவ்வுடல்களால் வினைகளும் மாறிமாறித் தொடர்ச்சியாய் வருமென அறிதல் வேண்டும். வீடுபேறுபெற்று

லன்றி முதற்கண் அமைந்த நுண்ணுடல் அழிவுறுமல் படைப்புக்காலந் தொடங்கிப் பேரொடுக்கக் காலம் வரை நிலைபெற்றிருக்கும் என்பதும் ஈண்டு அறியத் தக்கதாகும். இதுகாறும் கூறியவாற்ருல் உடல் முந்தியா? வினைமுந்தியா? என்னும் கேள்விக்கு உடலே முந்தி என்னும் விடை பெறப்படுதலைக் காணலாம், இவ்விடை அமைந்த உமாபதி சிவத்தின் திருமொழி வருமாறு :-

" கண்ணை மறைத்த கடியதொழில் ஆணவத்தால்
எண்ணும் செயல்மாண்ட எவ்வுயிர்க்கும் - உள்நாடிக்
கட்புலனுற் காணுர்தங் கைக்கொடுத்த கோலே போல்
பொற்புடைய மாயைப் புணர்ப்பின் கண் - முற்பால்
தனுகரண மும்புவன முந்தந் தவற்ருன்
மனமுதலால் வந்த விவகாரத்தால் வினை இரண்டும்
காட்டி யதனுற் பிறப்பாக்கிக் கைக்கொண்டு
மீட்டறிவு காட்டும் வினைபோற்றி"

(போற்றிப் பஃறொடை வரி 10—17)

இங்ஙனம் " முற்பால் தனுகரணமும் தந்து " என உமாபதி சிவம் கூறியருளியிருப்பதைச் சிவஞான முனிவர் சிவஞான போதப்பேருரையில் எடுத்துக்காட்டும்பொழுது, மணிவாசகப் பெருமான் திருவாய் மலர்ந்தருளிய திருமொழி ஒன்றிற்கு அரியதோர் உரையைக் குறிப்பால் உணர்த்துகிருர். இவ்வுரையே மரம்முந்தியா? வித்து முந்தியா ? என்னும் கேள்விக்கு விடையாக அமை கிறது. இனி அதனை ஆராய்வோம்.

திருவாசகத்தில் மணிவாசகப் பெருமான்,

" விச்சதின்றியே விளைவு செய்குவாய்
விண்ணும் மண்ணக முழுதும் யாவையும்
வைச்சு வாங்குவாய் "

(திருச்சதகம் செய்யுள் 96.)

என அருளிச் செய்திருக்கிறார்." விச்சதின்றியே விளைவுசெய்குவாய்" என்பதற்கு "வித்தே இல்லாமல் விளைவிப்பாய்; அஃதாவது முதல் இல்லாமலே ஒரு பொருளை உண்டாக்குவாய்" எனப் பொருள்கூறி "எல்லாம் செய்யவல்லவனாதலால், இஃது இறைவனின் செயற்கரிய செயல்களைச் செய்யும் வல்லமையை உணர்த்திற்று" எனச் சிலர் அமைவுரை கூறுவர். இவ்வுரை "உள்ளதேதோற்றும்" என்னும் கொள்கை உடைய சைவசித்தாந்தத்திற்குப் பொருந்தாது. சைவசித்தாந்தம் எந்தப் பொருளும் அதற்குள்ள முதலினின்றுமே தோன்றும் என்றும், உலகம், 'மாயை' என்னும் மூலப்பொருளினின்றும் தோன்றியதென்றும் கூறுகிறது. ஆகவே, இறைவன் செய்தற்கரிய செயல்களைச் செய்யும் தன் வல்லமையால் முதல் இல்லாமலே ஒரு பொருளை உண்டாக்குவான் என மாணிக்கவாசகர் திருமொழிக்குப் பொருள் கூறுதல் சைவசித்தாந்தத்துக்கு ஏற்றதன்று. சைவசித்தாந்தத்திற்கு ஏற்றவாறு சைவத் திருமுறையாகிய திருவாசகத்திற்குப் பொருள் கொள்ளுதல் சிறப்பாகும். அப்பொருள் யாது?" "இது முதற்றோற்றம் ஆமாறுணர்த்திற்று" எனச் சிவஞான முனிவர் நுண்ணுணர்வால் உரை காண்கின்றார்:

முதற் றோற்றத்தில் நாம் முன் கூறியவாறு இறைவன் நுண்ணுடற்கண் தோன்றும் உயிர்களின் மனநிலைக்கு ஏற்பப் பருவுடல்களை நல்குகின்றான். அங்ஙனம் நல்கப்பட்ட பருவுடல்கள் பல என்றும் முன்னர்க் குறிப்பிட்டோம். அவற்றுள் ஒன்றே மரம் என்னும் பருவுடல் என்பதைக் கூறவேண்டுவதில்லை. எனவே மரமாகிய பருவுடல் முதற் றோற்றத்தில் வித்தின்றியே தோன்றுகிறது. அதன்பின் அதனின்று வித்தும், வித்துனின்று மரமும் மாறி

மாறித் தொடர்ச்சியாய்த் தோன்றும் முறைமை ஏற்பட்டிருக்கின்றது. எனவே மரமும், வித்துமாகிய முறைமைத் தொடர்ச்சி முதற் தோற்றத்திற்குப் பின்னரே ஏற்பட்டதென்பது தெளிவாகும்.

"விச்சதின்றியே விளைவு செய்குவாய்" என்பதற்கு "இல்லாததை உண்டாக்குவாய்" என்று உரை செய்யாமல் என்றும் உள்ள பொருளாகிய மாயையினின்றும் உண்டாக்கப்படும் அறிவற்ற பொருள்களான மரம், வித்து என்னும் இவ்விரண்டனுள் முதல் தோற்றத்தில் வித்தில்லாமல் மரமே, முன்னர் இறைவனுல் படைக்கப்படுமாதலால், "விச்சதின்றியே விளைவு செய்குவாய்" என மணிவாசகப் பெருமான் கூறியருளியிருக்கின்ருர் என உரை செய்ய வேண்டும். இங்ஙனம் இயல்பாகக் கொள்கின்ற பருப்பொருளோடு நாம் முன்னர் எடுத்துக் காட்டியவாறு, முதற் தோற்றத்தில் வினையின்றியே அருள் காரணமாக இறைவன் உயிர்களுக்கு நுண்ணுடல்களைப் படைத்தளிக்கின்ருன் என்னும் நுண்பொருளையும் கொள்ளுதல் வேண்டும். சிவஞான முனிவர் குறிப்பால் கூறும் இவ்வுரையை நாம் விரித்துப் பொருள் கொள்ளும்போது, "மரம் முந்தியா?" "வித்துமுந்தியா?" என்னும் கேள்விக்கு "மரமேமுந்தி" என்னும் விடை மணிவாசகப் பெருமான் திருமொழியாக அமைவது அறிந்து இன்புறத் தக்கதாகும்.

இக்கட்டுரையின் துவக்கத்தில் காட்டிய சிவஞான சித்தியார் "உடற்செயல் கன்மம்" என்னும் திருப்பாடலுக்குச் சைவசித்தாந்தப் பேரறிஞர் திரு. பொ. முத்தையா பிள்ளை அவர்கள் உரை எழுதும்போது, பின்வருமாறு குறிப்பிடுகின்ருர் :-

"வித்தும் மரமும் ஒன்றுக்கொன்று காரண காரியமாக இருப்பினும் இறைவன் முதலாவதாக இரண்டில் ஒன்றைத்தான் உண்டாக்கியிருக்க வேண்டும். அது மரமாகவே இருக்கவேண்டும். இக் கருத்துப்பற்றியே, "விச்சதின்றியே விளைவு செய்கு வாய்" என மணிவாசகப் பெருமான் அருளிச் செய் தனர். (சிவஞான சித்தியார் - சுபக்கம் முத்தையா பிள்ளை அவர்கள் உரை பக்கம் 140) இங்ஙனம் எளிய நடையில் தெளிவாக, "மரம் முந்தியா?" "வித்து முந்தியா?" என்னும் கேள்விக்கு "மரமே முந்தி" என்னும் சைவசித் தாந்த விடையை எடுத்துக் கூறிய திரு. பொ. முத்தையா பிள்ளை அவர்களுக்குச் சைவ உலகம் பெரிதும் கடமைப்பட்டதாகும்.



# 5. இறைவனை வேண்டலாமா ?

வாழ்க்கையில் நேரும் துன்பங்களை நீக்கிக் கொள்ளவும், இன்பத்தைப் பெருக்கிக் கொள்ளவும் விரும்புகிறோம். இன்பமும், துன்பமும் நாம் செய்யும் நல்வினை, தீவினைக்கேற்ப வருகின்றன.

இறைவன் ஊழ்வினைப்பயனை ஊட்டுவதற்குக் காரணம் நாம் அவ்வினைப்பயனை நுகர்ந்தே ஆக வேண்டும் என்பதற்காக அன்று. நம்மைப் பற்றி, யுள்ள ஆணவமலப் பிடிப்பில் நெகிழ்ச்சி ஏற்படுவதற்காகவே அவன் அவ்வினைப்பயனை ஊட்டுகிறான். நாம் இப்பிறப்பில் செய்யும் வினை ஆணவமல நெகிழ்ச்சியை உண்டாக்கக் கூடியதாக இருக்குமானால், ஊழ்வினைப்பயனை ஊட்டவேண்டிய தேவை இல்லாமற்போகும். நாம் செய்யும் வினையின் தூய்மைநோக்கி இறைவன் ஊழ்வினைப் பயனை நிறுத்திவைத்து பேரருள் புரிகின்றான்.

இறைவழிபாடு ஆணவமல நெகிழ்ச்சியை உண்டாக்குவதில் தலைசிறந்ததாகும். தீயனவற்றை இறைவனிடம் கேட்டால், நமக்கு ஆணவமல நெகிழ்ச்சி ஏற்படாது. எனவே தீயனவற்றைக் கேட்டால் அவன் ஊழ்வினைப் பயனை ஊட்டவே செய்வான். ஆனால் நல்லனவற்றை அவனிடம் கேட்பதில் தவறில்லை. அறநெறிக்கு மாறுபடாதவாறு உலகப் பொருட்களை நாம் அவனிடம் கேட்டால் அவன் அவற்றை வழங்கவே செய்வான். எல்லையில் இரக்கமுடைய அவன் நாம் வேண்டுவனவற்றை வழங்கி நம் துன்பங்களை நீக்குவான் என்பதில் ஐயமில்லை.

"நாம் எவ்வளவோ கேட்டும் இறைவன் அருள் வழங்கவில்லையே ? நம் துன்பம் நீங்கவில்லையே" எனச் சில சமயத்தில் ஏங்குகிறோம். நம் ஊழ் வினைப் பயன்கள் கடுமையானவையாக இருக்கு மாறால் பல்காலம் நாம் அவனை வேண்டிய பின்னரே அருள் செய்வான். ஏனெனில் அப்பொழுதுதான் நமக்கு ஆணவமல நெகிழ்ச்சி ஏற்படும். விரைந்து நல்கினால் ஆணவமல நெகிழ்ச்சிக்கு மாறாகப் பிடிப்பு ஏற்படக்கூடும். இதனால் நாம் பல்காலும் அவனை உருகி வழிபட்ட பின்னரே அருள் வழங்குகின்றான். ஊழ்வினையை வெல்லும் அளவுக்கு நம் வழிபாடு உழைப்புமிக்கதாயிருத்தல் வேண்டும். அப்படியிருந் தால் ஊழ்வினைப் பயனை ஊட்டாமல் நிறுத்தி இம்மையிலேயே நாம் வேண்டுவனவற்றை அவன் தருவான். "இருப்புவினை, ஏறுவினை ஆகிய வற்றையே நீக்கலாம்; ஊழ்வினையை நீக்க முடியுமா?" என ஐயுறலாம். "ஒருவனோர் அடியாரை ஊழ்வினை நலிய வொட்டார்" எனச் சுந்தரர் அருளிச் செய் துள்ளார். சுந்தரர் திருமொழிக்குமேல் வேறொரு சான்று நாம் தேட வேண்டுவதில்லை. உண்மையான உருக்கமிக்க வழிபாடு ஊழ்வினைப் பயனையும் வெல்லும் என அறிதல் வேண்டும். எந்த அளவிற்கு வழிபடுகிறோமோ அந்த அளவிற்கு ஊழ்வினையின் கடுமை குறையும்.

அருணகிரிநாதர் "கனமதுறு நீள் சௌக்ய, சகல செல்வயோக மிக்க பெருவாழ்வு, தகைமை சிவஞான முத்தி பரகதியும் நீ கொடுத்துதவி புரிய வேணும்" என வேண்டுகிறார். இதிலிருந்து உலகப் பொருட் களையும், வீடுபேற்றையும் ஒருங்கே இறைவனிடம் நாம் வேண்டலாம் என்பது பெறப்படும். "வீடு பேற்றை மட்டும்தானே கேட்கவேண்டும்; உலகப்

பொருட்கள் குறித்தும் வேண்டலாமா?" என ஐயம் எழுவதுண்டு. வழிபாடு போலியாக இருந்தால் இறைவன் அருள் செய்யமாட்டான். வீடுபேற்றை உண்மையில் நாம் விரும்பினால் அதனைக் கேட்கவேண்டும். இல்லையேல் வெறும் "உபசாரத்திற்காக" அதனைக் கேட்பது பயனற்றதாவதோடு, இறைவனை ஏமாற்ற முயன்ற குற்றத்திற்கும் நாம் ஆளாக நேரிடும். நாம் விரும்புகின்ற அறத்தோடு சார்ந்த உலகப் பொருட்களை இறைவனிடம் வேண்டும் பொழுது அவ்வழிபாடு போலியாக அமையாமல் உண்மையான உருக்கத்தோடு அமையும் என்பதைக் கூற வேண்டுவதில்லை. இதனால் இறையருளை விரைவில் பெறுவதற்கு வாய்ப்புண்டாகிறது. இறையருளைக் கண்கூடாக உணரத் துவங்கியதும், நம்மை அறியாமலேயே உலக ஆசைகள் நீங்கி வீடுபேற்றை விரும்புநிலை உண்டாகும். இதனால்தான் உலகப் பொருட்களைக் கேட்பதில் தவறில்லை எனப் பெரியோர்கள் கூறி அருளியிருக்கிறார்கள். இறைவன் நாம் கேட்பனவற்றைத் தராவிட்டால் அவனிடம் உள்ள நம்பிக்கை போய்விடும் எனக் கருத வேண்டுவதில்லை. இடையிடையே நம்பிக்கையின்மை ஏற்படினும் இறையருள் நம்மை மேல்நிலைக்குத்தானே இட்டுச்செல்லும். இறைவழிபாட்டை இடையில் நம்பிக்கையின்மை காரணமாக விட்டுவிட்ட சிலர், மீண்டும் சில காலம் கழித்து அதனைத் துவங்குவதை உலகியலில் காணலாம். இறையருள் அவர்களை விடாது; உளம் உருகிய வழிபாடு வீண்போகாது.

"இறைவன் எல்லாவற்றையும் அறிபவன்; ஆதலால் அவன் நமக்கு வேண்டுவனவற்றை அறிந்து நல்கவே செய்வான்; அங்ஙனம் இருக்க நாம் ஏன் அவனைக் கேட்க வேண்டும்?" எனச் சிலர் வினவுவ

துண்டு. இறைவன் எல்லாம் அறிந்தவன்தான்; ஆனால் நாம் அவனைக் கேட்டுப் பெறுவதில் ஒரு தனிச் சுவை உண்டு. அச்சுவை அன்பு (பத்தி) நெறியில் நாம் மிக்க ஊக்கத்தோடு செல்வதற்குத் துணை செய்யும். நாம் கேட்ட ஒன்றை அவன் தரும்போது, அவன் இடத்தில் நமக்கு ஒரு தனி ஈடுபாடு உண்டாகும். இதனால்தான் இறைவனிடம் வேண்டுவனவற்றைக் கேட்கும்படி பெரியோர்கள் ஆணை தந்திருக்கிறார்கள். "இம்மையே தரும் சோறும், கூறையும்" என்றும், "அம்மையே சிவலோகம் ஆள்வதற்கு யாதும் ஐயுற வில்லையே" என்றும், "பொய்மையாளரைப் பாடாதே யெந்தை புகலூர் பாடுமின்" என்றும் சுந்தரர் அறைகூவி அழைத்திருப்பதற்குக் காரணம் இதுவேயாகும். உயர்ந்த ஒருவனிடத்தில் இழிந்த-தாழ்ந்த பொருட்களைக் கேட்பது அறிவின்மையே என்றாலும், ஆணவமலப் பிடிப்புள்ள நாம் இங்ஙனம் கேட்டே உலக ஆசையை நீக்கிக்கொள்ள வேண்டிய திருக்கிறது. எனவே இங்ஙனம் கேட்பது நலம் பயக்குமேயன்றி ஒருபோதும் தீமைபயக்காது.

நம்பிக்கையோடு இறைவனை வழிபடல் வேண்டும்; அவன் அருள் நமக்கு எப்பொழுதும் துணை செய்யும் என்பதில் ஐயமில்லை.

விடாப்பிடியாக வேண்டினால், நாம் வேண்டிய ஒன்றை இறைவன் திண்ணமாகத் தருவான். சில சமயம் நாம் வேண்டிய பொருள் கிடைக்காமற் போகக்கூடும். ஆனால் நாம் எதிர்பாராத வேறு சில நன்மைகள் உண்டாகி, அவை காரணமாக ஏற்படும் தெளிவுணர்ச்சியால் அப்பொருளை வேண்டாமென நாமே விட்டுவிடுவோம். இங்ஙனம் இறைவழிபாடு படிப்படியே நம்மை மேல் நிலைக்கு இட்டுச் செல்லும்.

# 6 கல். ஒரு பிறவியாகுமா?

மணிவாசகப் பெருமான்

"புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல் விருகமாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்ற இத்தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன்" என்று

கூறியருளியிருக்கிறார்.

புல், பூடு, புழு, மரம், விலங்கு, பறவை, பாம்பு, கல், மனிதர், பேய், கணம், அசுரர், முனிவர், தேவர் எனப்பதினான்கு வகைப் பிறவி வேறுபாடுகள் இத் திருமொழியில் காணப்படுகின்றன. இவற்றுள் "கல்" ஒன்று நீங்கலாக ஏனையவற்றைப் பற்றிக் கருத்து வேறுபாடுகள் இல்லை. கல் ஒரு பிறவியாகுமா? என்பதே சிந்திக்க வேண்டிய பொருளாகும்.

கல் உயிரற்ற அறிவில்லாத பொருள். அதன் கண் உயிர் இருப்பதற்கான அறிகுறி எதுவும் இல்லை. அறிவியல் இன்றுவரை கல்லை அறிவில்லாத பொருளாகவே கொண்டுள்ளது. கல்லுக்கு வளர்ச்சியுண்டு என்று சிலர் கூறுகின்றனர். கெமிய (இரசாயன)ப் பொருள் மாற்றத்தால் இவ்வளர்ச்சி ஏற்படுகிறதே அன்றி உயிர்ப்பொருள் (Biological growth)வளர்ச்சியால் இஃது ஏற்படவில்லை என்று அறிவியல் நூற்கள் தெளிவு செய்துள்ளன.

சிவஞான பாடியத்தில் "நிலம், மலை, கடல் முதலிய வற்றின் ஏகதேசமாகிய மண், சிலை, நீர் முதலியன" எனச் சிவஞான முனிவர் குறிப்பிடுவதிலிருந்து சிலையை அதாவது கல்லை உயிரற்ற - அறிவில்லாத பொருளாகவே சைவ சித்தாந்தம் கொண்டுள்ள தென்பது புலனாகும். கல், மண் முதலியவை தாத்துவிகங்களாக மாறி உயிர்களுக்கு உடல்களாக அமையுமே அல்லாமல் நேரடியாக அவை உடல் களாக அமையமாட்டா. சைவசித்தாந்தம் தத்துவ-தாத்துவிக வேறுபாடு கொள்வதற்குக் காரணம் இஃதே ஆகும்.

கல்லுக்கு உயிருண்டென்றால் ஏனை உயிரற்ற பொருள்களாகிய மண், தீ, காற்று, நீர் முதலிய வற்றுக்கும் உயிருண்டென்றே கொள்ள வேண்டியது வரும். இதனால் கல் ஒரு பிறவியாகுமானால், மண், தீ, காற்று, நீர் முதலியனவும் பிறவியேயாகும். மணி வாசகர் கல்லாகப் பிறந்திளைத்ததாகக் கூறுகின்றாரே அல்லாமல் மண்ணாகவும், நீராகவும், காற்றாகவும் பிறந்திளைத்ததாகக் கூறவில்லை. கல்லைச் சொன்னாலே மண், நீர் முதலியனவும் தாமே பெறப்படும் என்றால், புல்லைச் சொன்னாலே பூடு, மரம் முதலியனவும் தாமே பெறப்படும் என்பதில் தவறில்லை. மணிவாசகர் புல்லைச் சொன்னதோடு அமையாமல் பூடு, மரம் முதலியவற்றையும் சொல்லியிருக்கிறார். எனவே அவர் கல்லைச் சொன்னதோடு அமையாமல் மண், நீர், காற்று முதலியவற்றையும் சொல்லியே இருக்க வேண்டும். அங்ஙனம் அவர் சொல்லாமல் கல்லை மட்டும் குறிப்பிடுவதால் கல்லுக்கு அவர் வேறு பொருள் கொண்டிருக்கிறார் என்றே தோற்றுகிறது.

பிரும்ம ஞான சபைக் கொள்கையினர், "இறைவன் உயிருள்ள பொருள், உயிரற்ற பொருள்

ஆகிய யாவற்றினும் நிறைந்திருப்பதால் கல் ஒரு பிறவியே'' என்கின்றனர். அங்ஙனமானால் மண், தீ, காற்று முதலியவற்றிலும் அவன் நிறைந்திருப்பதால் அவையும் பிறவியே என்று கொள்ளப்பட வேண்டும். அங்ஙனம் கொள்ளாமல் கல்லை மட்டும் மணிவாசகர் பிறவியாகக் கொள்வதற்கு வேறே தேனும் காரணம் இருக்கவேண்டும்.

''கல்லாய் மனிதராய்'' என்பதில் இடையிலுள்ள யகர ஒற்று ஏடெழுதுவோரால் பிழையாகக் கொள்ளப்பட்டுள்ளது; ''கல்லா மனிதராய்'' என்றே அஃது இருக்க வேண்டும்; கல்லாத மனிதப் பிறவியையே மணிவாசகர் வெறுத்துக் கூறியிருக்கிறார்'' என்று உரை கூறுவதும் பொருத்தமாகக் காணப்படவில்லை. கல்லாத கண்ணப்பரைக் ''கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை கண்டபின்'' என அன்புருவமாக அவர் பாராட்டியிருக்கிறார். ''கற்பனவும் இனி அமையும்'' என்றும், ''கல்வி என்னும் பல்கடல் பிழைத்தும்'' என்றும் கல்வியறிவை அவர் வெறுத்தும் கூறியருளியிருக்கிறார். எனவே கல்லாத மனிதப் பிறவி, கற்றமனிதப் பிறவி என வேறு பிரித்து ஒன்றை மதித்தும், ஒன்றை வெறுத்தும் அவர்கூறியுள்ளார் என்பது பொருந்தாது.

திருவாசகம் சைவத் திருமுறைகளுள் ஒன்று. சைவ சாத்திரத் துணை கொண்டு அதற்குப் பொருள் காண்பதே சிறப்பு.

சைவசாத்திரமாகிய சிவஞான சித்தியாரில் உயிர்கள் எடுக்கும் பிறவி வேறுபாடுகள் குறித்துக் கூறப்பட்டுள்ளது.

பருவுடல் நீங்கிய உயிர் இன்புலகுக்கும் (சுவர்க்கத்திற்கும்) துன்புலகுக்கும் (நரகத்திற்கும்) சென்று இன்ப துன்பங்களைத் துய்த்துப் பின் உலகிடைவரும். துன்புலகில் "யாதனை" உடம்போடு துன்பம் நுகரும்; இன்புலகில் பூதசார உடம்போடு இன்பம் நுகரும். இதனைச் சிவஞான சித்தியாரில் வரும் "பூதனா சரீரம் போனால்" என்னும் செய்யுளால் அறியலாம்.

எல்லாவுயிர்களும் இங்ஙனம் பருவுடல் விட்டவுடன் இன்ப, துன்ப உலகங்கட்குப் போவதில்லை; சில உயிர்கள் உடனே மறுபிறவி எடுப்பதுண்டு. முதிராச் சாவு எய்திய பற்றுமிக்க கொடிய உயிர்கள் பருவுடல் நீங்கிய அளவில் மறுபிறவி எடுக்காமலும், இன்ப, துன்ப உலகிற்குச் செல்லாமலும் நில உலகிலேயே, சிலகாலம் "யாதனை உடலோடு" உலவுவதுண்டு. கருவுற்றுப் பிறந்தால்தான் பிறப்பு எனக் கொள்ளவேண்டுவதில்லை. வினைக்கீடாக உயிர்கள் எந்த உடலில் நின்று வினைப்பயனை நுகர்ந்தாலும் அது பிறப்பென்றே கூறப்படும். கருவுற்றுப் பிறக்காமல் யாதனை உடலோடு உலகிலேயே உலவுகின்ற இவ்வுயிர்கள் பேய்ப் பிறப்பை அடைந்துள்ளன என்று சொல்லப்படும். மணிவாசகர் "பேயாய்" என இப்பேய்ப் பிறப்பைக் குறிப்பிடுவது காண்க.

உயிர்கள் பேயாய் நின்றுலவுவது ஒருவகை; மற்றொரு வகையும் உண்டு. பேய்ப்பிறப்பில் அறிவும் உணர்ச்சியும் இருப்பதால் பல செயல்களும் செய்ய இயலும். ஆனால் மற்றொருவகைப் பிறப்பில் உயிர்கள் எந்தவிதமான அறிவும் உணர்ச்சியும் இன்றிச் செயலற்றுக் கிடக்கும். மிகமிகக் கொடிய வினையைச்

செய்துள்ள உயிர்களே பருவுடல் நீங்கியதும் இப் பிறப்பினை எய்தும். பேய்ப்பிறப்பு யாதனா உடலோடு நிற்பதாகும்; இப்பிறப்போ "யாதனா உடலும்" இன்றி நுண்ணுடலோடு நிற்பதாகும், முன்னதில் அறிவு, விருப்பம், செயல்களின் இயக்கம் உண்டு. பின்னதில் எதுவும் இல்லை. இதனாலேயே இதனைப் பேய்ப் பிறப்பாகக் கொள்ளாமல் வேறொரு பிறப்பாகக் கொள்ளப்பட்டுள்ளது. இப்பிறவிக்கு என்னபெயர்? நுண்ணுடலில் எத்தகைய உணர்வுமின்றிக் கற் போலக் கிடத்தலால் இப்பிறப்பிற்குக் "கற் பிறப்பு" என்று பெயர். "பேம்-அச்சம்" என்னும் பொருளில் கண்டார்க்கு அச்சத்தைத் தருவதாகிய பிறப்பிற்குப் "பேய்ப் பிறப்பு" என்று காரணப் பெயர் அமைந்தது போல உணர்வற்றுக் கற்போலக் கிடத்தலாகிய இப் பிறப்பிற்குக் "கற்பிறப்பு" எனக் காரணப் பெயர் அமைந்துள்ளது. நுண்ணுடலோடு உயிர்கள் உணர்வற்றுக் கிடத்தலாகிய கற்பிறப்பிற்கும் எவ்வித உடலுமின்றி ஆணவமலம் ஒன்றே காரணமாக உணர்வற்றுக் கிடக்கும் அநாதி கேவலத்திற்கும் வேறுபாடு பெரிதாகும்.

சிவஞான சித்தியார் சுபக்கம் 2-ஆம் நூற்பா 37 ஆவது செய்யுள் பின்வருமாறு:—

"உடல்விடா யோனிபற்றி உதிப்பினும் உதிக்கும் [ஒன்றில்
படர்வுறாது உறும்பாவத்தால் பாடாணம் போற் [கிடந்து
கடனதாம் காலம் சென்றால் கடுநரகதனில் வீழ்ந்து ஆங்கு
இடருறும் உருவம் கன்மத்தளவினில் எடுக்கும் அன்றே"

இப்பாடலின் பொருள்:— "பருவுடல் நீங்கியதும் உயிர்கள் உடனே மற்றொரு கருவில் பதிந்து பிறவி எடுப்பதும் உண்டு. மிகப்பெரிய தீவினை காரணமாகச் சில உயிர்கள் உலகில் பிறக்காமலும், இன்ப, துன்ப உலகிற்குச் செல்லாமலும், நுண்ணுடலோடு எவ்வகை உணர்வுமின்றிக் கற்போலக் கிடந்து உரிய காலம் சென்றதும் கொடிய நரகிற்குச் சென்று துன்ப நுகர்வு பெற்றுப் பின் வினைக்கேற்றவாறு உலகிடைப் பிறவி எடுப்பதும் உண்டு."

இப்பாடலில் வரும் "பாடாணம் போற் கிடந்து" என்னும் பகுதி ஈண்டு ஆராய்தற்குரியது. "பாடாணம்" என்றால் கல். "கற்போலக் கிடத்தல்" என்றால் எவ்வகை உணர்வுமின்றிக் கிடத்தல் என்பது பொருள். "ஒன்றில் படர்வுறாது" என்பதால் உடல் வேறு எடுக்காமலும், இன்ப, துன்ப உலகிற்குச் செல்லாமலும் உயிர் கிடக்கும் என்பது புலனாகும். "உறும் பாவத்தால்" என்பதால் மிகப்பெரிய தீவினை செய்த உயிர்களே கற்போலக் கிடத்தலாகிய இப் பிறப்பினை எய்தும் என்பது தெளிவாகும். உடல் வேறு எடுக்கவில்லையென்றால் நுண்ணுடல் மட்டும் எப்படியிருக்கும்? என்று வினவலாம். நுண்ணுடல் படைப்புக் காலம் தொடங்கி வீடுபேறு அடையும் வரையிலோ, பேரூழிக்காலம் வரையிலோ அழியாது நிற்கும் என்பது சித்தாந்த முடிபு. எனவே பருவுடல் நீங்கிய அளவில் நுண்ணுடலிலேயே கற்போலக் கிடத்தலாகிய இப் பிறப்பினை உயிர்கள் எய்துமென அறிதல் வேண்டும்.

அறிவில்லாத பொருளாகிய கல் ஊனக் கண்ணுக்குப் புலனாகும்; நுண்ணுடலில் கற்போலக் கிடத்தலாகிய நிலை ஊனக் கண்ணுக்குப் புலனாகாது.

ஆகவே அறிவற்ற பொருளாகிய கல் வேறு; கற்பிறப்பாகிய இது வேறு. இரண்டிற்கும் எவ்வகைத் தொடர்புமில்லை. பெயர் ஒற்றுமை கொண்டு நாம் மயங்கக் கூடாது. அறிவில் பொருளாகிய "கல்லாக" உயிர்கள் பிறவி எடுப்பதில்லை. நுண்ணுடலில் உணர்வற்றுக் கிடக்கும் நிலையினையே, கற்போலக் கிடக்கும் காரணத்தால் "கல்லாதல்" எனக் கூறப் படுகிறது. ஆகவே அறிவில் பொருளாகிய கல்லை இப் பிறப்பினோடு தொடர்புப் படுத்திப் பேசுவது பொருந்தாது. சிவஞான சித்தியார் சுபக்கம் 2ஆம் நூற்பா 44ஆவது செய்யுளில் "அகலிகை கல்லதானாள்" என்பதற்கு அகலிகை கல்லாகி விட்டாள் எனப் பொருள் செய்யக் கூடாது. 37ஆவது செய்யுளில் "பாடாணம் போற்கிடந்து" என்றுதான் ஆசிரியர் சொல்கிறார். உயிர் கல்லாகக் கிடப்பதென்றால், ஆசிரியர் "பாடாணமாய்க் கிடந்து" என்று கூறியிருப்பார். எனவே 44ஆவது செய்யுளில் அகலிகை கல்லதானாள் என்பதற்கு அவள் தீமொழியால் பருவுடல் ஒழிந்து, நுண்ணுடலில் கற்போலக் கிடக்கும் பிறவியாகிய, "கற்பிறவியை" அடைந்தாள் என்றே பொருள் செய்ய வேண்டும். அவளின் நுண்ணுடல் கிடந்த இடம் காட்டகத்தே உள்ள ஒரு கல்லாக இருக்கலாம். இராமர் திருவடித்துகள் அக்கல்லின் மீது பட்டதும் நுண்ணுடலில் ஆண்டுக்கிடந்த அகலிகை உணர்வு பெற்றுப் பருவுடலோடு காட்சி அளித்தாள் என்று கூறுவதே சித்தியாரில் வரும் 37ஆவது செய்யுளுக்குப் பொருந்துவதாகும். "கற்போலக் கிடந்தாள்" என்று சொல்லாமல், "கல்லதானாள்" என்று ஆசிரியர் சொல்லியிருக்கிறாரே? எனக் கேட்கலாம். கற்போலக் கிடக்கும் பிறவிக்குக் கற்பிறவி என்றே பெயராதலால்

"கல்லதாளுள்" என ஆசிரியர் கூறியருளி யிருக்கிறார். பேய்ப்பிறப்பை அடைந்தவளைப் "பேயாளுள்" என்பது போலக் கற்பிறவியை அடைந்தவளைக் "கல்லாளுள்" எனக் குறிப் பிடுவது இயல்பேயாகும். நுண்ணுடலில் உணர் வற்றுக் கிடக்கும் ஒருவகைப் பிறவிக்கே "கற்பிறவி" என்று பெயர். இதனை ஆசிரியர் 37ஆவது செய்யுளில் முன்னரே தெளிவு செய்து விட்டதால் 44ஆவது செய்யுளில் அவர் "கல்லதாளுள்" எனச் சொல்வது உணர்வற்றுக் கிடக்கும் ஒருவகைப் பிறவியாகிய கற் பிறவியைக் குறிக்குமே அன்றி உலகில் காணப்படும் அறிவில் பொருளாகிய கல்லைக் குறிக்காதென்பது தெளிவு.

மணிவாசகர் "கல்லாய் மனிதராய்" என்று கூறும் பகுதிக்குக் "கல்லாகியும் மனிதராகியும்" என்றே பொருள் எழுதிக் "கல்லாதல்" என்பது கொடிய வினையைச் செய்த உயிர் பருவுடல் நீங்கிய அளவில் நுண்ணுடலில் பேரிருளில் மூழ்கி எவ்வகை உணர்வும் இன்றிக் கற்போலக் கிடக்கும் நிலையாகிய ஒருவகைப் பிறப்பினைக்குறிக்கும்; அறிவில்லாப் பொருளாகிய கல்லை அது குறிக்காது" எனச் சிறப் புரை கூறுவதே சைவ சாத்திரத்திற்கேற்ற பொரு ளாக விளங்கும்.

உயிர்கள் வினைக்கேற்பப் பிறவிகள் எடுக்கும்; உயர் பிறவி எடுத்த உயிர் தாழ்ந்த பிறவிக்கும் வருவ துண்டு. எனவே "புல்லாகிப் பூடாய்" என மணி வாசகர், "தோன்றும் முறையில்" பிறவியை வரி சைப் படுத்திக் கூறியருளியிருக்கிறாரெனக் கொள்ள வேண்டுவதில்லை. சைவசாத்திரம் பிறவி வினைப்படி அமையும் எனக் கூறுகிறதே அன்றி "முறைப்படி"

அமையும் எனக் கூறவில்லை. ஆகவே மணிவாசகர் பொதுவாக உயிர்கள் எடுக்கும் பிறவி வகைகளைக் கூறியுள்ளாரென்றே கொள்ள வேண்டும். "தார்வின்" (Darwin) சித்தாந்தத்தை இங்கே புகுத்தக் கூடாது.

"கல்லாய்" என்பதற்கு வேறொவ்வகையாகப் பொருள் கூறினாலும், அது சைவ சாத்திரத்திற்கு மாறாகவே முடிதல் காணலாம். எனவே சித்தியார் கூறும், "கற்பிறவி" யாக அதனைக் கொள்வதே பொருத்தமாகும்.



# 7. வீடுபேற்றில் மலம் உண்டா?

"முத்திதனில் மூன்று முதலும் மொழியக்கேள்
சுத்த அனுபோகத்தைத் துய்த்தலணு -
மெத்தவே
இன்பம் கொடுத்தலிறை இத்தைவிளை
வித்தல்மலம்
அன்புடனே கண்டுகொளப் பா" - மனவாசகம்
கடந்தார்.

"இவ்வெண்பா சித்தாந்த மெய்ந்நூற்கள். பதினான்கனுள் ஒன்றாகிய "உண்மை விளக்கத்தில் உள்ளது. சித்தாந்த உலகில் மிகப்பெரிதும் ஆட்சியில் உள்ள செய்யுட்களில் இஃதும் ஒன்று. எனினும் இதற்கு உரைகாண்பதில் அறிஞர்களிடையே ஒருமைப்பாடு இல்லை. இக்கட்டுரையின் நோக்கம் இதனை ஆராய்ந்து தக்கதொரு முடிவு காண்பதாகும்.

மேற்காட்டிய வெண்பா அமைந்து கிடந்தவாறே பொருள் சொல்வதென்றால் பின்வருமாறு கூறலாம்:- "வீடுபேற்றில் அழிவில்லாத தொன்மைப் பொருட்களான இறை, உயிர், ஆணவமலம் ஆகிய மூன்றும் எவ்வாறு உள்ளன என்பதைக் கூறுகிறேன்; கேட்பாயாக; பேரின்பத்தை உயிர் நுகரும்; இறைவன் அவ்வின்பத்தினை அதற்கு வழங்குவான்; ஆணவமலம் அவ்வின்பத்தினை விளைவிக்கும்" இங்ஙனம் பொருள் கொள்ளும்போது, ஆணவமலம் பற்றிக் கூறுகிற இடத்தில் இடர்ப்பாடு வருகிறது. உயிர்பேரின்பத்தை நுகரும் என்பதிலோ, இறைவன் அதனை வழங்கு

வான் என்பதிலோ கருத்து வேற்றுமை கொள்ளக் காரணம் இல்லை. துன்பங்கள் அத்தனைக்கும் முதற் காரணமாக உள்ள ஆணவமலம் இன்பத்தினை விளைவிக்கும் என்று சொன்னால் எங்ஙனம் ஒப்புக் கொள்ளுவது?

காலஞ் சென்ற சைவசித்தாந்தப் பேரறிஞர் திரு. பொ. முத்தையா பிள்ளை அவர்கள் எழுதியுள்ள சிவஞான சித்தியார் உரையில், "இத்தை விளைவித்தன் மலம்" என வீடுபேற்றிலும் மலம் உண்டென்று நிறுவியிருக்கவும், வீடுபேற்றில் மலம் நீங்குமென்றல் எவ்வாறு பொருந்துமெனின், துன்பத்தை விளைவிக்கும் மலம் இன்பத்தை விளைவிக்க மாட்டாது. இருள் ஒளியைச்செய்தல் எக்காலத்தும் இல்லையாதலின், மலநீக்கமே இன்பத்தை விளைவிக்கும் என்பதை இவ்வாறு கூறினராகையால் மலம் நீங்குமென்றல் பொருந்துமென்க: இச்செய்யுளில் இல்லை என்னும் உணர்வுக்கு விடயமாய் மலம் நின்றவாறறிக; ஆயினும் இல்லையென்று கூறவேண்டிய மலத்தை உண்டென்று கருதும் வண்ணம் கூறியது பொருந்துமோ? எனின், சுருக்கிக் கூறவேண்டிய இடங்களில் அவ்வாறு கூறுதல் நூல்வழக்காதலின் பொருந்தும்; இதனைக் "கெடுப்பதூஉம் கெட்டார்க்குச் சார்வாய் மற்றாங்கே எடுப்பதூஉம் எல்லாம் மழை" என்னும் திருக்குறளானுமறிக. "மழைகெடுப்பதூஉம்" என்பதற்கு மழையின்மை கெடுப்பது பொருளாதல் போல "மலம் இத்தை விளைத்தல் என்பதற்கு மலமின்மை இத்தை விளைவித்தல் என்பது பொருளாதல் அறிக" என விரிவானதொரு விளக்கம் கூறியிருக்கிறார்கள். இவ்வுரையினைப் படிக்கும் பொழுதே, இது மிகவும் வலிந்து எழுதிய உரை என்பது புலனாகின்றது.

ஆசிரியர் மனவாசகம் கடந்தார் "வீடுபேற்றில் மூன்று முதல்களையும் கூறுகிறேன்" என வெண் பாவைத் துவங்குவதிலிருந்தே ஆண்டு முப் பொருளும் உண்டெனஅவர் கருதுகிறார் என்பது நன்கு விளங்குகிறது. எனவே அவர் கருத்துக்கு ஏற்ப நாம் உரை செய்யாமல் "இத்தை விளைவித்தல் மலம்" என்று அவர் கூறியிருக்க அதற்கு நேர் மாறாக மலமின்மை எனப் பொருள் கொள்வது எவ் வாற்றானும் பொருந்தாது. சுருங்கக் கூறுதல் நூல் வழக்காயினும் மயங்கக் கூறுதல் நூற் குற்றத்தினுள் ஒன்று. இவ்வெண்பாவிற்கு முந்திய வெண்பாவில், "நீக்காப் பதியினைப்போல் நித்தம் பசு, பாசம் என்றாய்; கதியிடத்து மூன்றினையும் காட்டு" என்று மாணவர் கேட்கிறார். "இறைவனைப்போல உயிர், தளை ஆகிய இரண்டும் என்றும் அழியாதவை என்று கூறினை; அப்படியானால் வீடுபேற்றில் மூன்று பொருட்களும் அழியாமல் இருக்கும் திறனை உணர்த்துக" என்று தம் ஆசிரியரை அவர் வேண்டுகிறார். அவர்க்கு விடையாகவே ஆசிரியர் இவ்வெண்பாவை அருளிச் செய்திருக்கிறார். எனவே "மலம் எவ்வாறு நித்தியம்?" என்னும் மாணவரின் வினாவிற்கு விடையாகவே, "இத்தை விளைவித்தல் மலம்" என்னும் அடியை ஆசிரியர் அமைத்திருக் கிறார் என்பது தெளிவு. மலம் எவ்வாறு நித்தியம்?" என்னும் கேள்விக்கு "மலமின்மை இன்பத்தை விளை விக்கும்" என்பது எப்படி விடையாக அமைய முடியும்? மாணவர் ஒன்று கேட்க, ஆசியர் வேறொன் றைச் சொன்னதாகவே அது முடியும். ஆகவே திரு. பிள்ளை அவர்களின் உரை திசை தப்பிப்போய் விட்டதென நாம் மிக்க வருத்தத்துடன் கூறி அதனைத் தள்ள வேண்டியிருக்கிறது.

அழியாத பொருட்கள் எவ்விடத்தும் எக்காலத்தும் இருக்கவேண்டும். வீடுபேறடைந்த காலத்தில் மலம் இல்லை என்றால் எங்கும் நிறைந்த (வியாபகம்) அதன் இயல்பு அடிபட்டுப் போகும். மாணவர் '' வீடு பேற்றில் மலம் இருக்க முடியாதே? அப்படியானால் அஃது எப்படி என்றும் உள்ள (அழியாப்) பொருளாகும்? என்று ஐயுற்றுத்தான் இந்தக் கேள்வியையே கேட்டிருக்கிறார். வீடுபேறடையாத உயிர்களிடம் மலம் உண்டென்பது மாணவர்க்குத் தெரியாத ஒன்றன்று; ''வீடு பேற்றில் அஃது இல்லைதானே? அப்படியானால் அஃது எப்படி அழியாத என்றும் உள்ள பொருளாகும்?'' என்பதுதான் மாணவர்க்கு ஏற்பட்ட ஐயமாகும். ஒரு பொருள் ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்தில் இல்லையென்றால் அஃது எங்கும் நிறைந்த பொருளாகாது: எங்கும் நிறையாத பொருள் என்றும் உள்ள பொருளாகாது; வீடுபேறடைந்த காலத்தில் மலம் இல்லாவிட்டாலும் அதே காலத்தில் வீடுபேறடையாத உயிர்களிடத்தில் மலம் இருப்பதால் எக்காலத்திலும் மலம் உண்டெனக் காலத்தை நிறைவு செய்யச் சிலர் முயல்வதுண்டு. ஆனால் அப்படி நிறைவு செய்யும் பொழுதும் இடத்தை நிறைவுசெய்ய இயலவில்லை என்பதை நினைவிலிருத்திக் கொள்ளவேண்டும். ''வீடுபேற்றில் மலம் இல்லை; வீடுபேறு அடையாதவரிடம் அஃது உண்டென்றால்'' மலம் எங்கும் நிறைந்த பொருளாக இல்லாமல் இடவரையறைக்குட்பட்ட பொருளாகப் போவது கண்கூடு. காலம், இடம் இரண்டாலும் என்றும் உள்ள பொருளுக்குக் கேடு வருதல் கூடாது. மல நிறைவிற்கும் உயிர் நிறைவிற்கும் இறை நிறைவிற்கும் வேறுபாடு உண்டு என்று சொல்லித் தப்பித்துக் கொள்வது பொருந்ாது. இறை

நிறைவை நோக்க மலம் அடங்கிய நிறைவே எனி னும் அது தன்னளவில் எங்கும் நிறைந்த பொருளே என்பதை மறக்கக்கூடாது.

"அநித்தப்பொருளாகலின் ஏகதேசமே" எனச் சிவஞானபாடியம் 2ம் சூத்திரம் 2ம் அதிகரணத்தில் சிவஞான சுவாமிகள் கூறுவதிலிருந்து, நித்தப் பொரு ளாகிய மலம் ஏகதேசமாக இல்லாமல் எங்கும் நிறைந்திருக்க வேண்டுமென்பது புலனாகும். ஒரு பொருள் பிறிதொன்றை வரம்புபடுத்தினால், அது தானும் வரம்புடைப் பொருளாகப் போய்விடும். எனவே வரம்பற்ற இறை நிறைவிற்குள் நிற்கும் உயிரும் மலமும் தம் அளவில் வரம்பற்றவையே ஆகும். இதனால்தான் ஆசிரியர், "முத்தினில் மூன் றையும்" மொழிவதாகக் கூறி "இத்தை விளைவித்தல் மலம்" என வீடு பேற்றிலும் மலம் உண்டென்று தெளிவு படுத்தியிருக்கிறார். மலம் இன்பத்தை விளைவிக்கின்றதா? மலமின்மை இன்பத்தை விளைவிக்கின்றதா? என்பது இங்கே கேள்வி அன்று; மலம் எப்படி அழியாத பொருள் என்பதுதான் இங்கே எழுப்பப்பட்ட கேள்வியாகும். வீடு பேற் றில் மலம் இல்லாவிட்டாலும் அதே காலத்தில் வீடு பேறடையாத உயிர்களிடம் மலம் இருப்பதால் அஃது அழியாத பொருள் என்று ஆசிரியர் கூறக் கருதினால், "இத்தை விளைவித்தல் மலம்" என்று சொல்லாமல், "பெத்தரைப் பந்திப்பது மலம்" என்னும் பொருள் தரும் வகையில் இவ்வடியைக் கூறியிருக்க வேண்டும். பெத்தரிடம் இருப்பதால் நித்தியம் என வருவித்துப் பொருள் செய்ய ஒரு சிறு குறிப்புக் கூட இவ்வடியில் இல்லை. இங்கே சொல்ல வேண்டுவது மலத்தின் அழிவின்மை பற்றியேயாகும். அதை விடுத்து "மல மின்மை இன்பத்தை விளைவிக்கும்" எனத் தேவை

இல்லாத ஒன்றைச் சொல்வது எங்ஙனம் சுருக்கிக் கூறுவதாகும்?

"இருள் ஒளியினை விளைவிக்கும்" என ஒரு செய்யுள் செய்து, "இருள் எப்படி ஒளியினை விளைவிக்கும்?" என்றால் அது தன் இன்மையால் அல்லது தன் நீக்கத்தால் அதனை விளைவிக்கும்" என்று விளக்கம் எழுதினால் செய்யுள் செய்வதற்கு எந்த வரம்புமே இல்லையென்றாகிவிடும். ஒரு குறிப்பும் இல்லாதபோது நினைத்தபடி எல்லாம் வருவித்துப் பொருள் சொல்வது நேர்மையாகாது.

வேறுசிலர் "மலமின்மை" எனப் பொருள் கூறாமல் "இன்பத்தினை விளைவித்தல் மலம்" என்றே பொருள் கூறி அது பொருந்தும் என்பதற்கு அடியில் கண்டவாறு காரணம் கூறுகிறார்கள்:— "துன்ப நுகர்ச்சி இருந்தாலன்றி இன்பப் பேற்றினை முழுமையாய் நுகர முடியாது; வெயிலில் சென்று வந்தவனுக்குத்தான் நிழலின் இன்பம் தெரியும். தொன்மையாக உயிர் மலவெப்பத்தால் துன்புற்றுப் பின் இறைவன் திருவடி நிழலை அடைவதாலேயே பேரின்பத்தினை மிகுதியாக நுகர்கிறது. இதனால் ஆணவமலம் இன்பத்தினை விளைவிக்கும் என்பது பொருந்துமென்க".

மலத்தால் ஏற்பட்ட துன்ப நுகர்ச்சி இன்பத்தினை நுகரத்துணை செய்தலால், மலம் இன்பத்தினை விளைவிக்கும் என்பது ஏற்றுரையே அன்றி உண்மை அன்று. புலவரொருவர், பரத்தையர் தெரு பற்றிப் பாடுகையில் "தம்மை அடைந்தோர் அத்தனை பேரையும் வறியவர்களாக்கி அவர்களை உலக வாழ்வில் வெறுப்புறச் செய்து துறவிகளாக்குவதால் இத்தெருவில் வாழ்கின்ற பரத்தையர் மெய்யுணர்வை

விளைவிப்பவர் என்பதில் ஐயமில்லை". என்று கூறுகிறார். மலம் இன்பத்தினை விளைவிப்பதாகச் சொல்வதையும், இது போன்ற ஒரு நயமாக வேண்டுமானால் கொள்ளலாமே அன்றிச் சிறப்பான ஒரு கருத்தாகக் கொள்ள முடியாது. இவ்வுரையும் மலம் எவ்வாறு இன்பத்தினை விளைவிக்கும் என்பதற்கு அமைதி கூற முயலுகின்றதே அன்றி அஃது எவ்வாறு வீடு பேற்றிலும் அழியாத பொருள் என்பதற்குரிய ஒரு சிறு குறிப்பைக் கூடக் காட்டவில்லை. வீடு பேற்றில் மலம் இருந்தாலும் இல்லாவிட்டாலும் அதனால் ஏற்பட்ட முன்னைத் துன்பம் இன்பம் நுகர ஏதுவாக இருக்கவே செய்யும். எனவே, மலம் எவ்வாறு நித்தியம் என்பதைத் தெளிவு செய்யக்கூடிய குறிப்பெதுவும் இவ்வுரையில் இல்லை. இதனால் இது மாணவர் வினாவிற்கு ஏற்ற விடையாகாது என்பது தெளிவு. ஆகவே இவ்வுரையையும் பொருத்தமற்றதென்றே தள்ளவேண்டியதிருக்கிறது.

இன்னும் சிலர், "மலத்திற்கு ஏற்றுரையாகச் செயல் சொல்ல வேண்டுவதில்லை. உண்மையிலேயே அஃது இன்பத்தினை விளைவிப்பதற்குக் காரணமாக அமைகிறது; கூத்தாடுவான் அவையிடை நடிக்குங்கால், உள்ளிருந்து ஆட்டுபவனைத் திரை மறைத்து நிற்கின்றது; அதனால் அவன் ஆசிரியனை மறந்து அவையோர் கொள்ளும் அகமகிழ்ச்சியால் தன்னையும் தன் ஆடலையும் வியந்து பொய்யின்பம் கொள்கிறான்; ஆடுவான் திரையினுட் புகுந்தால் ஆட்டுவானைக் கண்டு இன்புறுகிறான். அப்பொழுது திரை அவையை மறைத்து நிற்கிறது. திரை அவையினை மட்டும் மறைப்பது போல் காணப்படினும், அவை தோன்றாமையே, அவன் ஆடாமைக்குக் காரணம்; ஆட்டுவானைக் கண்டு இன்புறுதற்கும் காரணம். அதனா

லேயே திரை அவ்வின்பினை விளைவித்தது என்று கொள்ளுதல் வேண்டும். மலம் இன்பத்தினை விளைவிப்பதற்கும் இவ்வாறே கொள்க" என்று சொல்லுகிறார்கள். இவர்கள்சொல்வதுபோல் வீடு பேற்றில் உயிர் காண முடியாதவாறு உலகினையும் ஏனை உயிர்களையும் மலம் மறைத்து நிற்குமாறுல் அம்மறைப்பை அதற்குரிய உண்மையான செயலாகக்கூறலாம். அம் மறைப்பால் உயிர் வேறென்றனையும் அறியாது இறைவனையே அறிந்து இன்புறுமாதலால் இன்பம் விளைதற்கு அதனை ஒரு பெருங்காரண மாகவும் சொல்லலாம். ஆனால் ஆணவமல இயல்பு எல்லாவற்றையும் மறைத்தலே அன்றி ஒன்றைக் காட்டி ஒன்றை மறைத்தல் அன்று. "பரத்தை மறைத்தது பார் முதல் பூதம், பரத்தில் மறைந்தது பார்முதல் பூதம்" என்பது திருமந்திரம். வீடுபேற்றில் "பார்முதல் பூதமாகிய" உலகம் இறைவனுள் மறையுமே அன்றி ஆணவமலத்துள் மறையாது. ஆகவே ஆணவமலம் உலகை மறைப்பதென்பது உண்மைக்கு மாறுனதாகும். மாயை, கன்மம் இரண்டும் வீடுபேற்றிலும் உண்டு. ஆனால் அவை அருளோடு கலந்து அருளாய் நிற்கும். "மாயை மாமாயை" என்னும், சிவப்பிரகாசச் செய்யுளால் இதனை அறியலாம். ஆகவே அருளோடு கலந்து அருளேயாய் நிற்கும் மாயைகன்மங்களை மலம் மறைக்கும் என்பது பொருந்தாது. "பரமே பார்த்திருப்பார் பதார்த்தம் பாரார்" என்னும் சித்தியார் கருத்துப்படி, வீடுபேற்றில் உயிர்" இறைவனையே நோக்கி நிற்குமாதலால் உலகம் அதற்குக் காட்சிப் படாது என்றறிதல் வேண்டும். எனவே மலம் உலகை மறைக்கும் என்னும் இவ்வுரை பொருத்தமற்றதென்பது தெளிவு.

சிவஞானபாடியம் 2ம் சூத்திரம் 2ம் அதிகரணம் உரையில் சிவஞான சுவாமிகள், "ஆன்மாப் பசுவென்னும் பெயர் நீங்கி முத்தனாய் அருளோடும் கூடி நின்றவழி, அவ்வான்மாவின் வியாப்பியமான மாயை முதலியனவும் திரோதான சத்திபோலப் பாசம் என்னும் பெயர் நீங்கி அருளாய் நிற்கும் என்க" எனக் கூறுவதால், வீடு பேற்றில் மாயை, கன்மங்களுக்குப் "பாசம்" என்னும் பெயர் இல்லை, இதனாலேயே வீடுபேறு பற்றிக் கூறும் இவ்வெண்பாவில் வரும், "மலம்" என்பது ஆணவமலம் ஒன்றையே குறித்து நிற்கிறதென அறிதல் வேண்டும்.

இனி இச்செய்யுளுக்கு என்னதான் உரை காணலாம் என்பதைச் சிந்திப்போம். வீடுபேற்றில் ஆணவமலம் நீங்கிப் போகிறதென்று சொல்லுகிறவர்களும் உண்டு; ஒடுங்கிப் போகிறதென்று சொல்கிறவர்களும் உண்டு. நீக்கம் சொல்கிறவர்கள் அது வீடு பேற்றில் இல்லாவிட்டாலும், ஏனை உயிர்களிடத்தில் இருத்தலால் என்றுமுள்ள அதன் தன்மைக்கு இழுக்கில்லை என்கிறார்கள். ஒடுக்கம் சொல்கிறவர்கள் எங்கும் நிறைந்த பொருளுக்கு நீக்கம் இல்லையாதலால் வீடுபேற்றில் ஆணவமலம் தன் ஆற்றல் கெட்டு ஒடுங்கி நிற்கும் என்பதுதான் பொருத்தமுடையதென்கிறார்கள். இவ்வெண்பாச் செய்தருளிய ஆசிரியர் வீடுபேற்றில் மூன்று முதலும் உண்டு என்று சொல்வதால் நீக்கம் சொல்கிறவர்களை ஆதரிப்பவராய்த் தோன்றவில்லை. "இத்தை விளைவித்தல் மலம்" என்பதால் வீடுபேற்றிலும் அதற்கு ஒரு செயல் உண்டு என்று கருதுபவராயும் தெரிகிறது. ஆற்றல் கெட்டு ஒடுங்கிய ஒரு பொருளுக்குச் செயல் இருக்க வழியில்லை. இதனால் ஒடுக்கம் சொல்கிறவர்களையும் இவர் ஆதரிக்கவில்லை என்பது தெளி

வாகிறது. இருதரப்பாரையும் மறுக்கும் இவர் பின் எதைத்தான் நிலைநாட்டுகிருர்? தொன்மையில் உயிர் களைத் விடுத்துத் தனியே இறைவன் நிற்கவில்லை. அப்பொழுதும் அவன் அவைகளோடு ஒன்ருகக் கலந்தே நிற்கிருன். இறைவன் உடனுகக் கலந்திருந் தும் மலம் உயிர்களைப் பிணித்து நிற்கிறது. இறைவன் இருப்பதற்காக அது விலகவும் இல்லை; ஆற்றல் கெட்டு ஒடுங்கவும் இல்லை. ஆனல் உயிர்களை அது கட்டுப்படுத்த முடிந்ததே அன்றி உடனிருக்கும் இறைவனைக் கட்டுப்படுத்த முடியவில்லை. தூய்மை நிலையாகிய வீடுபேற்றில் உயிர்கள் இறைவனேடு இரண்டறக் கலந்து நிற்கின்றன. தொன்மை நிலையில் இறைவன் உயிர்களோடு கலந்திருந்தும் எங்ஙனம் மலம் நின்றதோ, அதுபோலவே வீடுபேற்று நிலையி லும் உயிர்கள் இறைவனேடு கலந்திருந்தும் மலம் நிற் கிறது. ஆனல் ஆங்கு அஃது இறைவனைக் கட்டுப் படுத்த முடியாது நின்றமை போலச் சார்ச்சிச்சிறப் பால் இங்கே வீடுபேறுற்ற உயிர்களையும் கட்டுப் படுத்த முடியாது நிற்கிறது. கட்டுப்படுத்த முடியா மைக்காக மலம் தன்னளவில் ஆற்றல் இழந்து விட்ட தென்றே, இல்லாமற் போய்விட்டதென்றே கூற முடியாது. இராமன் என்பான் ஆறடி உயரம் இருந் தால் அவனைத் தனிமையில் நோக்கும்போது "நெடியன்" என்றே கூறுகிறேம். ஆறேகால் அடி உயரமுள்ள சாத்தன் என்பவனேடு நோக்குகையில் அவனைக் குறியன் என்று சொல்கிறேம். உண்மையில் இராமன் தன்னளவில் ஒரங்குலம் கூடக்குறைய வில்லை. எப்பொழுதும் போல் நெடியனுக இருக் கின்ற அவன் சாத்தனை நோக்கக் குறியவன் ஆகின் ருன். இதுபோல மலம் தன்னிடத்தில் உள்ள ஆற் றல் குறையாது எப்பொழுதும் போல் இருப்பினும்

வீடுபேறுற்ற உயிர்களிடத்தில் அதன் ஆற்றல் பலிக்காமையால் அவ்வுயிர்களை நோக்க அது "வலி கெட்டதென்றோ", "ஒடுங்கிப் போயிற்று என்றோ" "விட்டு நீங்கியது என்றோ" "இல்லாமற் போய் விட்டதனென்றோ" கூறுகிறோம். "ஒடுக்கம்" "நீக்கம்" "இன்மை" என்னும் சொற்களுக்கு இங்ஙனம் பொருள் கொள்ளாமல் உண்மையிலேயே வீடுபேற்றில் மலம் ஒடுங்கிப் போகிறதென்றோ, இல்லாமற் போய் விடுகிறதென்றோ பொருள் கொண்டு மயங்கக் கூடாதென்பதற்காகவே ஆசிரியர் மனவாசகம் கடந்தார் இச்செய்யுளில் தெளிவாக வீடுபேற்றிலும் மலம் உண்டு என்று கூறுகிறார். வீடுபேற்றில் மலம் உண்டு என்று ஒப்புக் கொண்டாலும், அது வீடுபேறடைந்த உயிர்களை ஒரு சிறிதும் பாதிக்காது என்பது தேற்றம். மலம் எங்கும் நிறைந்த பொருள்; எனவே அஃது எவ்விடத்தும் நீங்காது. ஆனால் மலத்தொடக்கென்பது மலத்தின் செயலே அன்றிப் பொருள் அன்று. அச்செயல் உயிரைப் பாதித்த நிலையே தொன்மைநிலையாம். வீடுபேற்று நிலையில் அச்செயல் உயிரைப் பாதிக்காது. இங்ஙனம் நிலையில் வேறுபாடு சொல்லவேண்டுமே அன்றி எங்கும் நிறைந்த பொருட்களாகிய உயிர், மலம் இரண்டிற்கும் இடம் நீக்கம் சொல்லக் கூடாது.

மலத்தின் செயல் வீடுபேற்று நிலையில் பலிக்காதென்பதிற சந்தேகம் இல்லை. அங்ஙனமானால் ஆசிரியர் "வித்தை விளைவித்தல் மலம்" எனக் கூறும் செயல் யாதாக இருக்க முடியும்? இனி இதனை ஆராய்வோம்.

மலம் - இறைவனைக் கட்டுப்படுத்த முடியாது நிற்றல் போலவே, வீடு பேற்றில் உயிர்களைக் கட்டுப் படுத்த முடியாமல் நிற்பதால் வீடுபேறடைந்த உயிர் களும் இறைவனுக்குச் சமமாதல் செல்லும் எனக் கொள்ள இடம் உண்டாகிறது. "உயிர் வீடுபேற்றில் சிவசமம்" என்னும் முறை மொழியை அடிப்படை யாகக் கொண்டு "வீடு பேறடைந்த உயிர்கள் சிவசம மாகி ஐந்தொழிலும் செய்வர்" எனச் சிவசமவாதிகள் கூறுகின்றனர். இவர்கள் கூற்றைச் சித்தாந்த சைவர் களாகிய நாம் வன்மையாக மறுக்கிறோம். மலக்கட் டினின்றும் விடுபட்டாலும் இறைவன் துணையின்றித் தனித்தியங்கும் ஆற்றல் உயிர்க்கு இல்லாமையால், கட்டு நிலை, வீட்டுநிலை இரண்டிலும் அஃது அடிமை யாகுமே அன்றிச் சமமாகாதென்றும், வீடுபேற்றில் சிவநுகர்வு ஒன்றினுக்கு மட்டுமே அஃது உரிய தென்றும், இறைவன் ஒருவனே ஐந்தொழிற்கும் உரியவனென்றும் நாம் கொள்ளுகிறோம். ஆனால் சிவ சமவாதிகள் நம் கொள்கையை எளிதில் உடைப் பதற்கு வழி இருக்கிறது. இறைவன் துணையின்றித் தனித்தியங்கும் ஆற்றல் உயிர்களுக்கு இல்லை என்பது உண்மை. ஆனால் முதல்வனை எதிர்த்து நின்று உயிர் கள் ஐந்தொழில் ஆற்றும் என்றால்தான் இதனை ஒரு காரணமாக எடுத்துக் காட்டி நம் கொள்கையை நிறுவலாம். அருளால் இறைவன் உயிர்களைத் தன் போலாக்கித் தானே உறுதுணையாக நின்று ஐந் தொழில் புரியும் ஆற்றலை அவைகட்கு வழங்குவான் என்று கூறினால் இக்காரணம் வலியிழந்து போகிறது. ஆண்டவன் உயிர்களின் அடிமைத் திறத்தை எதிர் பார்த்துத் துணை செய்பவனல்லன். அவை என்றும் அடிமையாகவே இருக்கவேண்டுமென விரும்புபவனு மல்லன். தன்னை அடுத்த மாணாக்கனை என்றும்

மாணுக்கனுகவே ஆசிரியன் வைத்திருப்பதில்லை; அவனைத் தன்னைப் போல ஆசிரியனுக்கிப் பிறர்க்குக் கல்வி பயிற்றத் துணை செய்வதை நாம் காண்கிறோம். மாணுக்கன் தன்னைப் போலக் கல்வி பயிற்றுவிக்கும் திறனைக்கண்டு மகிழ்வதே நல்லாசிரியனுக்குரிய இலக்கணமாகவும் நாம் கொள்கின்றோம். "தன்னையறிவித்துத் தான்றனைச் செய்தானை" என்றும், "எண் குணத்துளோமே" என்றும் ஆன்றோர்கள் கூறும் திருமொழிகளும் இறைவன் உயிர்களைத் தன்போலாக்குவன் என்னும் கருத்தை உறுதி செய்வதால் வீடுபேற்றில் உயிர்கள் சிவசமமாக முடியுமெனச் சிவசமவாதிகள் நமக்குள்ளேயே புகுந்து நாம் கொள்ளும் மேற்கோளையே சான்று காட்டித் தம் கொள்கையை நிலைநாட்ட முயல்கின்றனர். அவர்கள் கூற்றை மறுப்பதென்றால், உயிர்களுக்கு இறைவன் உறுதுணையாக நின்றாலும் கூட அவை அவனைப் போலச் சமமாகா என்பதற்கு வலிமைமிக்க ஒரு காரணம் காட்டல் வேண்டும். சிவசமமாகி உயிர்கள் ஐந்தொழில் ஆற்றா எனக் கூறுகின்ற நாம், இறைவன் கீழ்நின்று அவனருளேவல்வழி ஐந்தொழில் ஆற்றும் உயிரினங்கள் இல்லையெனச் சொல்லவில்லை. அநந்ததேவர், சீகண்டருத்திரர் முதலியோர் தங்கட்குரிய புவனங்களில் ஐந்தொழிற்கும் தலைவர்களாக விளங்குகின்றனர். இறைவன் ஆணையால் இவர்கள் ஐந்தொழில்களுக்கும் தலைவர்களாக இருப்பினும் மிகச் சிறிய அளவில் ஆணவமலக் கட்டு இவர்களுக்கு இருக்கவே செய்கிறது. மிகப்பெரிய நிலையிலுள்ள அநந்ததேவர், சீகண்டருத்திரர், அணுசதாசிவர் ஆகியோர்க்கும் தலைமை செலுத்துதலால் உண்டாகும் செருக்காகிய அதிகாரமலம் உண்டென நூல்கள் முழங்குகின்றன. சிறிய அளவில் மலத் தொடக்கு இருப்பினும் அதனால்

உண்டாகும் மறைப்பால் இவர்கள் அறிவிலும், இன்பத்திலும் குறைபாடுடையவர்களாகவே இருப்பர் என்பதைக் கூற வேண்டுவதில்லை. எனவே இறைவனுக்குச் சமமாக இவர்களைக் கொள்ள முடியா தென்பது தேற்றம். தம்மிலே அறிவும் இன்ப மும் குறைந்த இவர்கள் ஏனை உயிர்கட்குப் பேரின்பப் பேற்றை வழங்க முடியாதென்பதும் தானே போதரும்.

இறைவன் உயிர்களை அடிமையாக வைத்திருக்க வில்லை. தன்னைப் போலவே அவைகளும் ஐந்தொழில் செய்யத் திருவருள் செய்கின்றான் என்பதை அநந்த தேவர், சிகண்டருத்திரர் முதலியோர் வாயிலாக அறிகின்றோம். இறைவனோடு ஒப்ப வைத் தெண்ணப்படக் கூடிய அத்துணை மேம்பட்ட நிலையி னராகிய அவர்களும், இறைவனுக்குச் சமமாக விளங்க முடியாமைக்குக் காரணம் ஆணவமலம் அவர்கள் அறிவைத் தடைசெய்வதுதான். மலத் தடையிலிருந்து அறவே விடுபட்டு, முழு அறிவும் முழு இன்பமும் விளங்கப்பெறவேண்டுமானால் அவர்களும் ஐந்தொழில் ஆற்றுவதை அறவே ஒழித்து இறைவன் அடிக்கீழ் அடங்கிப் பேரின்ப நுகர்வு ஒன்றையே பயனாகக் கொண்டு நிற்க வேண்டும். ஆகவே மல மென்னும் ஒரு பொருள் உள்ள அளவும் எந்த உயிரும் சிவ சமமாக முடியாதென்பது உறுதியாகின் றது. மலமோ என்றுமுள்ள பொருளாய்த் தன்னள வில் எக்காலத்தும் யாண்டும் ஆற்றல் குன்றாததாய் இருப்பதால் உயிர்களும் ஒரு காலத்திலும் சிவசம மாகப் போவதில்லை.

விடுபேறடைந்த உயிர்கள் வேறொன்றனையும் நோக்காது இறைவன் அடிக்கீழ் அடிமையாய்

விற்கும் சார்ச்சிச் சிறப்பால் மலத்தால் தாக்குறாமல் இருக்கின்றன. வீடு பேறடைந்த உயிர்களை மலம் தாக்காதவாறு காக்கின்ற இறைவன் அவைகளைத் தன்னைப்போல் ஐந்தொழில் ஆற்றுமாறு செய்வித்து மலத்தால் தாக்குறாத வண்ணம் காக்கமுடியாதோ? எனக் கேட்கலாம். அவனாலும் இது முடியாத செயலாகவே இருக்கிறது.

உயிர்கள் சார்ந்ததன் வண்ணமாகும் இயல்புடையன. இவ்வியல்பால் மலத்தைச் செயல்படுத்துவதாகிய ஐந்தொழிலை அவை செய்யப் புகின், மலத்தால் தொடக்குறலே வேண்டியது வரும். இதனால்தான் வீடுபேறடைந்த உயிர்கள் வேறொன்றையும் பற்றாது இறைவனையே பற்றிப் பேரின்பநுகர்வொன்றையே பயனாகக் கொண்டிருக்கின்றன. "புணர்ந்தால் புணருந்தொறும் பெரும்போகம் பின்னும் புதிதாய்" மேன்மேலும் விளையும் பெற்றியையுடைய மேலான இன்பத்தை அவ்வுயிர்கள் துய்ப்பதால் அதுவே வீடுபேற்றுப் பெரும்பயன் என்பதிலும் ஐயமில்லை.

இறைவனாலும் ஐந்தொழில் செய்யும் உயிர்களை மலத்தால் தாக்குறாதவாறு காக்கமுடியாதென்பது எல்லாம் வல்ல அவன்றன் இறைமைக் குணத்திற்குப் பேரிழுக்காய் முடிகின்றதே? என அன்பர்கள் கேட்கக் கூடும். "இறைவன் ஆணவ மலத்தினை அறிவினை விளக்கும் ஒளியுடைப் பொருளாய் மாற்றமுடியாது" என்று கூறினால் அஃது எங்ஙனம் இறைவன்றன் எல்லாம் வல்லமைக்கு இழுக்காகாதோ, அதுபோல இஃதும் இழுக்காகாது. பொருள்களின் இயல்பை மாற்றுவது வல்லமைக்கு இலக்கணமன்று; அவற்றின் இயற்கையை அறிந்து அவற்றால்தான்

தாக்குறாமல் நின்று, அவற்றைச் செயல்படுத்தி உயிர்களுக்கு நலம் செய்வதே வல்லமைக்கு இலக்கண மாகும். பற்றிய பொருளில் அழுந்துகின்ற உயிர் இயல்பு மாற்றப்பட முடியாத ஒன்றாதலால், ஐந் தொழில் செய்யும் உயிரை மலத்தாக்குதலினின்றும் காக்கமுடியாதென்பது நன்கு புலனாகும்.

சிவசமம் என்பது இறைவனைப்போல ஐந் தொழில் ஆற்றுவதுதான் எனச் சிவசமவாதிகள் சொல்கின்றனர். ஆனால் உயிர்கள் ஐந்தொழில் ஆற்றின் ஆணவமலம் அவற்றின் அறிவினைக் குறைத்து விடுவதால் அவை சிவசமமாக முடியாமற் போகின்றன என்பதை மேலே காட்டினோம். எனவே சிவசமவாதம் செல்லாதென்பதற்குச் சரியான மறுப் பாய் அமைவது ஆணவமல இருப்பே ஆகும். வீடு பேறுற்ற உயிர்கள் பிறப்பிறப்பினுக்குட்படாமல் இருப்பதால் அவை சிவசமம் என வேதாகமங்கள் கூறுகின்றன என்பதே சித்தாந்த சைவக் கருத் தாகும். மலம் என்றுமுள்ள பொருளாய் இருப்பதால் அதன் தாக்குதலினின்றும் தப்புவதற்காக வீடுபேறு அடைந்தவர்களும் ஒரு செயலும் ஆற்றாமல் இறை வனுக்கு அடங்கி அடிமையாகவே நிற்க வேண்டிய திருக்கிறது. முடிந்த நிலையாகிய வீடுபேற்றிலும் சம நிலை எய்த வொட்டாமல், தலைவனாகிய இறைவன் இன்பத்தை வழங்க, உயிர் அடிமையாகவே இருந்து அதனைத் துய்ப்பதோடு அமைய வேண்டியதான ஒரு நிலையை மலம் விளைவிக்கிறது ஆசிரியர் மனவாசகம் கடந்தார் "இத்தை விளைவித்தல்" என்று கூறியதற்கு எல்லாரும் "இந்த இன்பத்தினை விளைவித்தல்" என்றே பொருள் கொண்டிருக்கின்றனர். இன்பம் இறைவனி டத்துள்ளதென்பது யாவரும் நன்கறிந்த ஒன்றா தலால் "இன்பம் கொடுத்தல் இறை" என்பதிலிருந்தே

இறைவனால் அவ்வின்பம் விளைகிறது என்பது தெளிவு. ஆகவே "இத்தை. விளைவித்தல்" என்பதற்கு மீண்டும் "இந்த இன்பத்தை விளைவித்தல்" எனப் பொருள் கொள்ளவேண்டிய தேவை இல்லை. "சுத்த அநுபோகத்தைத் துய்த்தல் அணு" "இன்பங் கொடுத்தல் இறை" எனக் கூறிய பின்னர் "இத்தை விளைவித்தல் மலம்" என்பதால் "இந்த நிலையினை விளைவித்தல் மலம்" எனப் பொருள் கொள்ளுதல் பொருத்தமுடையதாகும். வீடுபேற்றில் உயிர் இன்பத்தைத் துய்க்கிறது; இறைவன் அவ்வின்பத்தை வழங்குகிறான்; பெறுவானும் கொடுப்பானுமாக இருக்கின்ற நிலை சமம் அற்ற நிலையாகும். இந்த நிலையை மலம் விளைவிக்கிறது.

எனவே இங்கு ஆராய்வான் எடுத்துக் கொண்ட உண்மை விளக்கச் செய்யுளுக்குப் பின்வருமாறு உரைவிரித்துக் கொள்ளுவது ஏற்றதாக இருக்குமெனக் கருதுகின்றோம்:- "வீடுபேற்றிலும் உயிர், இறை, ஆணவமலம் ஆகிய மூன்று பொருள்களும் உண்டு; பேரின்பத்தைத் துய்ப்பது உயிர்; அதனை வழங்குவது இறைவன்; இங்ஙனம் வீடுபேற்றிலும் சமமாக முடியாமல் இறைவன் இன்பத்தைக் கொடுக்க, உயிர் அதனைத் துய்ப்பதோடு அமைய வேண்டியதான நிலையை விளைவிப்பது மலம்"

வீடுபேறுற்ற உயிர்கள் வேறொன்றனையும் நோக்கா என்பது உண்மை. ஆனால் இறைவனே, "தான்றாச்" செய்யும் அருளினால் உறுதுணையாக நின்று அவ்வுயிர்களின் நோக்கைத் திருப்பித் தன்னைப் போல ஐந்தொழில் ஆற்றும்படி செய்தாலும் எங்கும் நிறைந்த - என்றும் உள்ள மலம் அவ்வுயிர்களைப் பற்றவே செய்யும். இதனால் அவை ஐந்தொழில்

ஆற்றுமல் பேரின்பம் துய்ப்பதோடு அமைய வேண்டி யதான ஒரு நிலை ஏற்படுகிறது; வீடுபேற்றிலும் உயிர் இறை அடிமையாயிருப்பதற்கு இறைப் பொருள் காரணமாகாமல் மலமே காரணமாக அமைதல் காணலாம். மலம் என்றும் உள்ள பொரு ளாக இருப்பினும், பற்றிய பொருளில் அழுந்தாத தன்மை உயிர்க்கு இருக்குமானுல் இந்நிலை ஏற்படாது. எனவே உயிர் இயல்பு காரணமாக மலம் இந்நிலையை விளைவிப்பதால், "விளைவிக்கும்" எனப் பிற வினையில் வைத்து ஆசிரியர் இதனை உணர்த்தியுள்ளாரென அறிதல் வேண்டும். இது நிலையே அன்றி நுகர்வு அன்று. ஆகவே பிறவினையில் வைத்தே ஆசிரியர் இதனைக் கூற வேண்டியதிருக்கிறது.

வீடுபேற்றிலும் அடிமை நிலை ஏற்படுவதற்குக் காரணம் மலம் என்று கூறுவதால், ஆண்டும் மலம் அழியாத என்றும் உள்ள பொருளாக இருக்கிறதென் பது புலனுகும். இஃது, "எவ்வாறு ஆண்டு மலம் அழியாத பொருள்?" என மாணவர் எழுப்பிய விஞு விற்கு ஏற்ற விடையாக அமைகிறதென்பது தெளிவு.

"மலம் நீங்கி இன்பத்தை விளைவிக்கும்" என்பதோ, "மலமின்மை இன்பத்தை விளைவிக்கும்" என்பதோ, "மலத்தால் ஏற்பட்ட துன்ப உணர்வு இன்பத்தை நன்கு நுகரச் செய்கிறது" என்பதோ, "மலம் எவ்வாறு வீடுபேற்றிலும் அழியாத பொருள்?" என மாணவர் எழுப்பிய விஞுவிற்கு ஏற்ற விடையாக அமையாமல் "மலம் எவ்வாறு இன்பத்தை விளைவிக்கிறது?" என எழுப்பப்படாத ஒரு கேள்விக்கே விடையாக அமைவதைக் காணலாம். ஆகவே இத்தகைய உரைகள் பொருத்தமற்றவை யாகும். "மலம் நீங்கிப் பெத்தரிடம் நிற்பதால் இன்பம் விளைகிறது" எனச் சொல்லிப் "பெத்தரிடம்

நிற்பதால் அது நித்தியம்" என்று அமைதி கூற முயல்வது ஒருவாற்றானும் பொருந்தாது. ஏனெனில் மலம் நீங்கிப் போய்ப் பெத்தரிடம் நின்றாலும், நில்லாவிட்டாலும் இன்பம் விளையவே செய்யும். எனவே இன்பம் விளைவதற்கு மல நீக்கம்தான் காரணமாக இருக்குமே ஒழியப் பெத்தரிடம் மலம் நிற்பது காரணமாக இருக்காது. இதனால் "மலம் நீங்கி இன்பத்தை விளைவிக்கிற" தென்னும் உரை பெத்தரிடம் மலம் இருக்கிறதென்பதை எவ்வகையாலும் உறுதிப்படுத்தாது. உறுதிப்படுத்தினால்தான் அதனை உரையாகக் கொள்ளலாம்; நாமாக வலிந்து "பெத்தரிடம் நின்று இன்பத்தை விளைவிக்கிறதெனக்" கூறி, ஒரு தொடர்பும் இல்லாத "பெத்தரை" இங்கே வருவிப்பது பொருத்தமாகாது. எனவே இங்ஙனம் சொல்வது உரையே அன்றெனா அறிந்து கொள்ளவேண்டும்.

வீடுபேற்றில் உலகை மலம் மறைப்பதால் இன்பம் விளைகிறதெனச் சொல்லப்படும் உரை உண்மைக்கு மாறானதென்பதை முன்னர் விளக்கியிருக்கிறோம்.

மலம் வீடுபேற்றிலும் சிறிதளவு இருந்து உயிர்க்குத் தன்னுணர்வைப் பயப்பிப்பதால் பேரின்ப நுகர்ச்சி கைகூடுகிறதென ஓர் உரை சொல்லப்படுகிறது. இது மிகப் பிழையான ஒரு கருத்தாகும். மலத்தொடக்கு உயிர்க்குச் சிறிதளவு இருந்தாலும் அது வீடுபேறாகாது. வீடுபேற்றில் மலம் உண்டே அன்றி மலத்தொடக்கு ஒரு சிறிதும் இல்லையென்பதை மறந்துவிடக்கூடாது. எனவே மலத்தொடக்கு ஓரளவு உண்டென்று கூறும் இவ்வுரை பொருந்தாது. உயிருடன் இறைவன் முத்தியிலும் உடனாகி நின்று அறிகின்றான். இதனாலேயே சிவபோக நுகர்வு கைகூடுகிறதென அறிதல் வேண்டும்.

"இத்தை விளைவித்தல் மலம்" என்பதற்கு "இன்பத்தை விளைவித்தல் மலம்" என்றே பொருள் செய்யக் கருதினால், கீழ்க்கண்டவாறுதான் காரணம் சொல்லவேண்டும்:-' மலம் அழியாத பொருளாதலால் முத்தியிலும் அஃது இருக்கவே செய்கிறது; உயிர் இறைவனை நோக்காது வேறெதனை அறியத் தலைப் பட்டாலும் ஆண்டு நிற்கும் மலம் அதனைப்பற்றிச் சிவபோக நுகர்வைக் குறைப்பிக்கும்; எனவே உயிர் வேறெதனையும் நோக்காது இறைவனையே நோக்கி நின்று சிவபோகத்தை நன்கினிது நுகர்கிறது; இதனால் மலம் இன்பத்தை விளைவிக்கிறதென ஆசிரியர் ஏற்றுரையாகக் கூறியுள்ளார்"

இவ்வாறு காரணம் கூறினால்தான் மலம் முத்தியிலும் "நித்தியம்" என்பது பெறப்படும். இது மாணவர் எழுப்பிய வினாவிற்கு ஏற்ற விடையாக அமையும். சிவஞான சுவாமிகள் சிவஞான பாடியம் 6ம் சூத்திரம் 2ம்அதிகரணத்தில், "அது வதுவாய் நின்றனுபவிக்கும் ஆன்மா ஏனையவற்றை யும் அறிவுழி" எனத் துவங்கி எழுதியிருக்கும் பகுதிக்கு இவ்வாறு பொருள் அமைத்துக் கொள்ளுவதுதான் பொருத்தமாக இருக்கும்.

"உயிர் ஏனையவற்றையும் அறிவுழி" எனச் சுவாமிகள் கூறுவது, "வீடு பேற்றில் உயிர் ஐந் தொழில் முதலியன ஆற்றுமல் இன்ப நுகர்வொன்றே பயனாகக் கொண்டு அமைய வேண்டியதான ஒரு நிலையைக் குறிப்பாகச் சுட்டுகிறதென்பது தெளிவு. ஆகவே, "மலம் இன்பத்தை விளைவிக்கும்" என உரை கூறக் கருதுபவர்கள் இவ்வாறுதான் காரணம் கூறவேண்டும். இப்படிக் காரணம் கூறினால் இவ் வுரையும் பொருந்தும். ஆனால் "இன்பத்தை விளை

வித்தல் மலம்" என ஏற்றுரைப் பொருள் கொள்வதை விட "இந்த நிலையினை விளைவிப்பது மலம்" என உண்மைப் பொருள் கொள்வது மிகுதியும் பொருத்தமுடையதாக இருக்கும். எனவே இதற்கு இவ்விரு பொருளைத் தவிர வேறு பொருள் கொள்ள இடமில்லை என்பதே நம் கருத்தாகும். அறிஞர்கள் ஆராய்வார்களாக!



## மன்றத்தார் எழுப்பிய ஆறு வினாக்களும் ஆசிரியர் அளித்த விடைகளும்.

**வினா. (அ:-)**

*கொலைக்குற்றத்திற்காகத் தூக்குத் தண்டனை அல்லது வாழ்நாள் (ஆயுள்) தண்டனை பெறுவோர், தாம் இன்ன குற்றம் செய்ததால் இன்ன தண்டனை பெறுகிறோம் என்பதை உணர்கின்றனர்; திருடியவர்கள் சிறையில் துன்பம் அடையும்போது திருடியதற்காகவே அத்தண்டனை என்பதை உணர்கிறார்கள்; இவ்வாறு உணரும் போது இனி அக்குற்றத்தைச் செய்யக் கூடாது என்று திருந்தி நல்வழிக்கு வர வாய்ப்பு ஏற்படுகிறது.*

*நாம் சென்ற பிறவிகளில் செய்த தீவினைக்கு, இப்பிறவியில் துன்பம் துய்க்கும் போது "சென்ற பிறவியில் இன்ன தீவினையைச் செய்ததால் இப் பிறவியில் இந்தத் துன்பத்தை அடைந்துள்ளோம்" என்று உணரும் அறிவை நமக்கு இறைவன் கொடுக்கவில்லை. சென்ற பிறவிகளின் நினைவைக் கொடுத்திருந்தால் நாம் செய்த குற்றங்களையும், அவற்றிற்கு இப்போது பெற்றுள்ள தண்டனையையும் உணர்ந்து திருந்த வாய்ப்பு ஏற்படும். இந்த வாய்ப்பை இறைவன் ஏன் நமக்குத் தரவில்லை?*

**விடை :**

*இறைவனின் அருளாற்றலே மறைப்பாற்றலாக நின்று நாம் முற் பிறவிகளில் செய்த நல்வினை, தீவினைகளையும் அவற்றின் பயனாகத் துய்த்த இன்ப துன்பங்களையும், இன்ப துன்ப உலகங்களில் துய்த்த இன்ப, துன்ப நுகர்ச்சிகளையும் நம் அறிவுக்குப்*

புலனாகாதவாறு மறைத்து விடுகிறது. இம் மறைப்பால் நாம் முயற்சி அவியாமல் முழு உரிமையோடு மீண்டும் நல்வினை, தீவினைகளைச் செய்ய முடிகிறது. நாம் முன்பிறவியில் செய்த செயலும் அதற்காக நுகர்ந்த தண்டனையும் நினைவிலிருந்தால் மீண்டும் அந்தச் செயலைச் செய்யப்பயப்படுவோம் என்பது உண்மையே. ஆனால் தீவினையைச் செய்யாமலிருப்பதால் மட்டும் பயனில்லை; உண்மையிலேயே தீவினையில் வெறுப்பு ஏற்பட வேண்டும். திருடன் மீண்டும் சிறைத்தண்டனை கிடைக்குமே என்னும் அச்சத்தால் திருடாமல் இருந்தானானால் அவனைத் திருந்தியவன் என்று கூற முடியாது; திருட்டில் அவனுக்கு இயல்பாகவே வெறுப்பு ஏற்பட வேண்டும். உலகியலில் கொடுக்கப்படும் தண்டனை நினைவிலிருப்பதாலேயே, மேன்மேலும் மறைவாகத் தீவினை செய்யும் விருப்பம் மக்களுக்கு ஏற்படுகிறது. இறைவன் மறைப்பாற்றல் மூலம் சென்ற பிறவி நினைவுகளை மறைத்துவிடுவதால் பொதுவகையாக ஏற்படும் இன்பதுன்ப நினைவுகளிலிருந்து மெய் (ஞான) உணர்வு பிறக்கிறது. இதனால் உண்மையான மலத்தேய்வு உண்டாகிறது. "இன்ன செயலுக்கு இன்ன தண்டனையினை நுகர்ந்தோம்" என்னும் நினைவு நமக்கு இருக்குமானால், அச்செயலை மறுபடி செய்ய அஞ்சுவோமே ஒழியத் திருந்த மாட்டோம். அச்செயல் மீதுள்ள பற்றும் அறாது. இதனாலேயே, உள்ளுணர்வுக்குப் புலனாகும் வகையில், "ஏதோ தீவினை செய்திருக்கிறோம்; இதனாலேயே துன்பம் நுகருகிறோம்" என்னும் அளவில் நம் சிந்தனையைத் தூண்டிவிட இறைவன் முயலுகிறான். இதுதான் மறைப்பாற்றலின் நுட்பமாகும். சென்ற பிறவிகளின் நிகழ்ச்சிகளும் தண்டனைகளும் வாசனை வடிவில் நம் புத்தி தத்துவத்தில் படிந்துள்ளன. இவ்

வாசனையே நமக்கு முயலும் விருப்பத்தை உண்டாக்கு கிறது. இது போதுமானதாகும். இதற்கு மேல் சென்ற பிறவி நிகழ்ச்சிகள் நினைவிருக்குமானால் நாம் பெரிய துன்பத்திற்காளாவதோடு எழுச்சி குன்றிக் கல், மண் போலச் செயலற்றுப் போவோம். செயலைச் செய்ய அஞ்சுவது மலநெகிழ்வை உண்டாக் காது. செயல் மீதுள்ள பற்று அறவேண்டும். இதற் காகவே இறைவன் இம்மறைப்பினைச் செய்கின்றான். உயிர்களின் முன்னேற்றத்திற்கு இம்மறைப்பு இன்றி யமையாததாகும்.

வினா. (ஆ:)

"சைவசித்தாந்தமே" அறிவுக்குப் பொருத்த மான கொள்கையாக உள்ளது. அப்படியாயின் கிறித்தவர்கள், முகம்மதியர்கள், வைணவர்கள், மாயாவாதிகள் போன்ற புறச் சமயத்தவரும் மற்றும் நம் அகச் சமயத்தவரும் சைவசமயிகளாகப் பிறந்து தான் வீடுபேறு அடைய வேண்டுமா? புறச்சமயங் களில் நின்றே வீடுபேறு அடைய முடியாதா? முடியாதெனின் ஏசுநாதர், முகமது நபி, இராம கிருட்டினர், புத்தர் போன்ற பெரியோர்கள் வீடு பேறு அடையவில்லையா?

விடை:

வீடுபேறு அடைவதற்கு ஒரே வழி உலகப் பற்றை அறவே ஒழித்து இறைவனிடத்து மாறாத மெய்யன்பு கொள்வதேயாகும். மெய்யன்பினால் மறவாது ஏத்தத் திருவடியினை உயிர் அணையும் என் பது சிவஞான போதக் கருத்தாகும், எனவே ஒருவர் கிறித்தவராகவோ, முகமதியராகவோ, சைவ ராகவோ இருப்பது இங்கே கேள்வி அன்று. இறை அன்பும் உளத் தூய்மையும் உடையவராக அவர்

இருக்கிறாரா? என்பதே சிந்திக்க வேண்டிய ஒன்றாகும். எச்சமயத்தைச் சேர்ந்தவராயிருந்தாலும் பற்றற்று இறைவனை வழிபட்டால் வீடுபேறு அடையலாம். "சைவதிறத்தடைந்தே வீடுபேறு அடைவர்" எனச் சிவஞான சித்தியார் கூறுவதற்குச் சித்தாந்த சைவத்தைச் சார்ந்த பின்னரே வீடுபேறு அடையலாம் என்ற அளவில் பொருள் கொள்வது குறுகிய நோக்கையே புலப்படுத்தும் சமயம் கடந்த நிலையே சைவத்திறமாகும். தத்தம் சமயத்தைச் 'சார்ந்தால் தான் முத்திபெறலாம் என்பது சமயவாதிகளின் கொள்கையாகும். எச்சமயத்தைச் சார்ந்திருந்தாலும் பற்றற்று அன்பு செய்தால் வீடுபேறடையலாம் என்பது சைவத்திறமாகும். "சைவசமயம்" என்று கூறாமல் "சைவத்திறம்" என்று கூறியதை ஆழ்ந்து சிந்திக்கவேண்டும். எல்லாச் சமயங்களுக்கும் இறைவன் திருவருள் உண்டு. "விரிவிலா அறிவினார்கள் வேறொரு சமயம் செய்தே, எரிவினால் சொன்னாரேனும் எம்பிராற் கேற்றதாகும்" என்பது அப்பர் திருமொழி. அதிலிருந்து ஏசுநாதர், நபிகள் நாயகம் போன்ற பெரியோர்கள் வீடுபேறு அடைவதற்காகச் சைவசமயத்திற்கு வரவேண்டிய தேவையில்லை என்பது இனிது புலனாகும். இறைவன் உண்டா? இல்லையா? என்பன போன்ற ஐயங்களை முப்பொருள் உண்மை பற்றிய ஆராய்ச்சியால் நீக்கிக்கொள்ளலாம். ஆனால் இவ்வையம் நீக்கத்தால் மட்டும் வீடுபேறடைய முடியாது. உலகப் பற்றை நீக்கி, இறைவனை வழிபட்டால்தான் வீடுபேறடையலாம். வேதாந்திகள், கிறித்தவர்கள், முகம்மதியர்கள் ஆகியோர்களில் எத்தனையோ பேர் சிறந்த மெய்யன்பர்களாக இருப்பதைக் காண்கிறோம். ஆகவே அவர்கள் வீடுபேறடைவதில் தடையில்லை.

மூப்பொருளுண்மையை ஏனைச் சமயத்தினர் முற்றி லும் அறியாவிட்டாலும் "இறைவனிடத்தே அன்பு செய்தல்" என்னும் பழங்கால மருந்தை உண்டு பிறவிப் பிணியை நீக்கிக் கொள்வர் என்பதில் ஐயமில்லை. பல்வகை அழுக்குகளை மனத்திற் வைத்துக் கொண்டு, செருக்குணர்வோடு இறைவழிபாடு செய்தால், உண்மை புலப்படாது உளத் தூய்மையோடு வழிபாடு செய்தால் இறையருளால் எச்சமயத்தோர்க்கும் உண்மைகள் தாமே புலனாகும்.

வினா. (இ:)

திருமுறைகளிலும் சாத்திர நூல்களிலும் கூறப்படும் நான்கு மறைகள் எவை? அவை வட மொழியி லுள்ள இருக்கு முதலான வேதங்களெனின், அவற்றில் கூறப்படும் கருத்துக்கள் பல நம் சைவசமயத்திற்கு முரண்பட்டவைகளாக இருக்கின்றனவே? அவற்றை நாம் எப்படி ஒப்புக்கொள்வது?

விடை:-

திருமுறைகளில் கூறப்படும் மறைகள் பெரிதும் வடமொழி நால்வேதங்களையே குறிக்கும். "அருந்தவர்க்கு அறமுதலாம் நான்கினையும்" என்றும் "நன்றாக நால்வர்க்கு நால்வேதம் உரைத்தருளி" என்றும் கூறப்படும் இடங்கள் சிந்தனைக்குரியவையாகும். வடமொழி நான்கு வேதங்கள் முறையே அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய நான்கினையும் உணர்த்தும் முறையில் பகுக்கப்படவில்லை. அங்ஙனம் அவை பகுக்கப்பட்டுச் சனகர் முதலான முனிவர் நால்வர்க்கும் உணர்த்தப்பட்டன என்பதற்கு இவ் வேதங்களுள் எவ்வித அகச்சான்றும் இல்லை. எனவே இங்ஙனம் குறிக்கப்படும் இடங்கள் "தமிழ் நான் மறைகளையே" சுட்டுகின்றன என்றும் அம்மறைகள் கடல் வாய்ப்பட்டு அழிந்துபோயிருக்க வேண்டும்

என்றும் அறிஞர்கள் கருதுகின்றனர். தேவாரத்திலும், "மறை, வேதம்" என்னும் இரு சொற்களும் ஒரே அடியில் சிலவிடங்களில் வருகின்றன. ஒரே அடியில் வருவதால் இரண்டு சொற்களுக்கும் பொருள் வேறுபாடு இருக்கவேண்டும். "மறை" என்பது தமிழ் மறையையும், "வேதம்" என்பது வடமொழி மறையையும் குறிக்கும் என்று அறிஞர்கள் கூறுவது பொருத்தமானகருத்தேயாகும். இஃது எங்ஙனம் இருப்பினும் வடமொழி நான்கு வேதங்களே பெரிதும் திருமுறைகளில் சுட்டப்படுகின்றன என்பதில் ஐயம் இல்லை; சங்க காலத்திலேயே வேதநெறி வழக்காறு தமிழகத்தில் வேரூன்றி விட்டது. தமிழ் நூல் முடிபுகள் வடநூலாரால் ஏற்றுக் கொள்ளப்பட்டும், வடநூல் முடிபுகள் தமிழ் நூலாரால் ஏற்றுக்கொள்ளப்பட்டும் இருவகை நெறிகளும் தமிழகத்தில் உடன் பிறப்பு முறையுடனும், பொது நோக்கத்துடன் தழைக்கலாயின; ஆனால் காலம் செல்லச் செல்ல தமிழ் நெறியினை மீதூர்ந்து வேதநெறி பரவலாயிற்று. தமிழ் மக்களும் தமிழ் நெறியினும் பார்க்க வேதநெறி மேலானதெனை நம்பத் தலைப்பட்டனர். இங்ஙனம் இருக்கும்பொழுது சைனர்களும், பௌத்தர்களும் களப்பிரர்களும் தமிழகம் புகுந்து, இருவகை நெறியினையுமே வீழ்த்தித் தங்கள் நெறியே சாலச்சிறந்ததென நிலைநாட்டினர். இச்சமயம் தான் தேவார திருவாசக ஆசிரியர்கள் தோன்றினர். சைன பௌத்த நெறிகள் மேலோங்கி நிற்கையில் முன்னமே ஒன்றாகக் கலந்து கிடக்கும் சைவநெறியினையும் வேதநெறியினையும் வேறுபிரித்துக் காட்டும் முயற்சியில் ஈடுபடுவது இருவகை நெறிக்குமே கேடாக முடியும். சைன,

பௌத்த நெறியினோடு வேதநெறியினையும் சேர்த்து வீழ்த்த முயன்றால் தமிழ் மக்களிடையே பெருங் குழப்பம் விளையும். இது மட்டும் அன்று; தமிழகம் புகுந்த வேதநெறி தன் தனித்தன்மையை இழந்து சைவ அடையாளத்துடன் தான் அக்காலத்தில் விளங்கலாயிற்று. இதனால் "வேதம் பொது நூல், உலகிற்காகப் பல திறமாகச் சொல்லப்பட்டது; கன்ம காண்டப் பிரிவு இன்றியமையாததில்லை. வேதத்தின் ஈற்றிலுள்ள ஞான காண்டப்பிரிவே இன்றியமை யாதது; உபநிடதங்கள் யாவும் ஞானகாண்டப் பிரிவையே சார்ந்தவை; உபநிடதக் கருத்துக்கள் சைவநெறியினையே உணர்த்துகின்றன; எனவே வேதம் கொள்ளற்பாலது," என்று திருமுறை ஆசிரி யர்கள் கருதி, வேதத்தில் காணப்படும் முரணான பகுதிகளைப் "பொது நூல்" என அமைதி கூறித்தள்ளி ஏற்கத்தக்க பகுதிகளையே எடுத்தோதிப் பாராட்டி வரலாயினர். ஆனால் அவர்கள் செய்த பெருந்தொண்டு வேதநெறி சைவ நெறியினும் பார்க்க மேலான தென்னும் கருத்தை, வீழ்த்தியது தான். "இரண்டும் சமமே" என்னும் கருத்தைத் தெளிவாகவும் ஆழ்ந்து நோக்கினால் வேதநெறியினும் பார்க்கச் சைவ நெறியே சிறந்த தென்னும் கருத்தைக் குறிப் பாகவும் திருமுறைகளில் வெளிப்படுத்தித் தமிழ் நெறிக்குள் வேதநெறியை அடங்கி நிற்கச் செய்தனர். அவர்கள் காலத்திலிருந்து இன்றுவரை சைவநெறி யைத் தாழ்த்தி வேதநெறியே சிறந்ததென்னும் கருத்தை இடம் பெறச் செய்ய வடநூலார் எவ்வளவோ முயன்றும் பலிக்கவில்லை. திருமுறை ஆசிரியர்கள் தோன்றியிராவிட்டால் வேதநெறி சைவ நெறியை விழுங்கியிருக்கும். இரண்டுமே வீழ்ந்து போய் வேறு நெறிகள் ஓங்கியிருக்கும். இன்றும்

தமிழகத்தில் சைவ நெறியை எதிர்த்து வெளிப்படை யாக வேத நெறியினர் பேச முடியாமலிருப்பதற்குக் காரணம் திருமுறைகளேயாகும். "சைவசித்தாந்தம் வடமொழி ஆகமங்களையே மூலமாகக் கொண்டிருக் கிறது; ஆகவே வடமொழிக்குத் தானே சிறப்பு" என்று சிலர் கூறலாம். ஆனால் சைவசித்தாந்தம் தமி ழகத்திலும் சரி, வெளியுலகத்திலும் சரி தமிழ்ச்சித் தாந்தசாத்திரங்களாலேதான் பரவி நிற்கின்றது. ஆக மங்கள் இருக்கும் இடம் தெரியவில்லை; பல அழிந்து போயின; சில வெளியாகி இருக்கின்றன. ஆனால் அவற்றில் சைவ சித்தாந்தக் கருத்துக்கள் வரையறை யுடன் காணப்படவில்லை. பொருட் தெளிவு செய்யத் தமிழ் சித்தாந்த சாத்திரங்களையே நோக்கவேண்டிய திருக்கிறது. வடமொழியில் ஆகமங்கள் இருந்தும் வடநூலார் சைவசித்தாந்தத்தை அறியவில்லை; வட நாட்டில் சைவசித்தாந்த அறிவு பரவவில்லை. வேதாந்தம், சாங்கியம், யோகம், நியாயம், வைசேடிகம், மீமாஞ்சகம் ஆகியவற்றையெல்லாம் வடநூலார் அறிந்திருக்கின்றனர். அவற்றிலிருந்து மேற்கோளும் காட்டுகின்றனர். ஆனால் அவர்கள் சைவ சித்தாந்த மேற்கோள்கள் காட்டுவதில்லை; சிவாகம மேற்கோளும் காட்டுவதில்லை. எனவே சித்தாந்தம் தமிழ் மொழிக்குரிய ஒன்றாகவே திகழ்கிற தென்பது தெளிவு.

சித்தாந்த சாத்திரங்களில் சுட்டப்படும் நான் மறைகள் முற்றிலும் வடமொழி நான்மறைகளே யாகும். ஆனால் இம்மறைகளில் முரண்பாடு பெரிதும் இருப்பதை அறிந்த சித்தாந்த ஆசிரியர்கள் திட்ட வட்டமாக, "வேதம் பொது நூல்; ஆகமங்களே சிறப்பு நூல்கள்; வேதத்திற்குப் பொருள் ஆகமங்களுக்கேற்பவே கொள்ள வேண்டும்" எனக் கூறியருளியிருக்கின்றனர். எனவே வேதங்களில்

காணப்படும் முரண்பாடான பகுதிகளைத் தள்ளி, மக்கட்கு உறுதிபயக்கும் சீரிய கருத்துக்கள் கொண்ட பகுதிகளையே நாம் கொள்ளவேண்டும்.

வினு (ஈ)

சிவபெருமானே ஆகமங்களை அருளிச் செய்தார் என்பது உண்மையா? அப்படியாயின் அவர் அருளிச் செய்த ஆகமங்கள் இப்போது உள்ளனவா? இல்லையெனில் ஏன் அழிந்து போயின? நமக்கு ஆகமங்கள் மூல நூற்களாகுமா?

விடை:

சிவாகமங்கள் இறைவனுல் அருளிச் செய்யப் பட்டன என்று கூறுவது நூன் மரபாகும். ஆனுல் இவ்வாகமங்களில் பல இருக்குமிடம் தெரியவில்லை. சில ஆகமங்களே அச்சில் வந்திருக்கின்றன; அவையும் ஒழுங்காக இல்லை. நேபாளம் வரை தேடிப் பல ஆகமங்களைத் திரட்டி வந்திருப்பதாக ஈசான சிவா-சாரியாரவர்கள் ஒரு முறை சொன்னுர்கள். ஏட்டுச் சுவடிகள் பழுதுபட்டும், வரையறையின்றி ஏதேதோ எழுதப்பட்டும் இருப்பதால் இவ்வாகமங்களை அச்சேற்றுவது மிகவும் அரிய செயலென்றும் அவர்கள் சொன்னுர்கள். எனவே சைவ சிந்தாந்தம் தமிழ்ச் சித்தாந்த சாத்திரங்களால் உயிர் வாழ்கின்றதேயன்றி இவ்வாகமங்களால் அன்று என்பது மறுக்க முடியாத உண்மையாகும். இவ் விடத்தில் சில உண்மைகளை நாம் தெரிந்து கொள்ள வேண்டும். எல்லாச் சமயத்தினரும் தங்கள் மறைகள் இறைவனுல் அருளிச்செய்யப்பட்டவையே எனக் கூறு கின்றனர். உண்மை என்ன? இறைவன் அருள் திருமேனி கொண்டு பலதிறப்பட்ட உயிர்களுக்குப் பக்குவ நிலைக்கேற்ப உண்மைப் பொருட்களை அறிவுறுத்தியிருக்கின்முன். இவ்வுண்மைகள்

அறிவுறுத்தும் முறையாக வழி வழி உலகெங்கணும் பரவியிருக்கின்றன; பற்பல காலங்களில் இவ்வுண்மைகளைத் திரட்டிப் பெரியோர்கள், "மறைகள்" என்னும் பெயரால் வெளிப்படுத்தியிருக்கின்றனர். எனவே பொதுவாக எல்லா வேதங்களும் இறைவனால் அருளிச் செய்யப்பட்டவையே என்பது பொருந்தும். ஆனால் அவ்வேதங்களில் உள்ள ஒவ்வொரு சொல்லும் இறைவனால் சொல்லப்பட்டதன்று. வேதங்களை ஆக்கியோர் இறைவன் உணர்த்திய உண்மைகளைத் தங்கள் மொழியாலேயே வெளியிட்டனர். ஆசிரியர்கள் பெயரும் அவர்கள் வெளியிட்ட காலமும் அவ்வேதங்களுக்குள்ளேயே அறியக் கூடியனவாக இருக்கின்றன. பின்னையோர் அவ்வேதங்களுக்குள் புகுத்தியனவும் பலவாகும். எனவே நிலைபேறான உண்மைகள் தாம் தொன்மையனவே [அநாதியே] அல்லாமல் இவ்வேதங்கள் தொன்மையானவை [அநாதியானவை] அல்ல; இவை இறைவனால் அப்படியே சொல்லப்பட்டவையும் அல்ல. ஏற்றுரையாகத்தான் இவற்றை இறைவன் அருளிச் செய்தான் என்று சொல்லுகிறோம். இவ்வேதங்களில் எத்தனையோ அழிந்துபோய் விட்டன; மறைகள் தோன்றும்; அழியும். நிலைபேறான உண்மைகள் என்றும் அழியா. அவை காலந்தோறும் மெய்யுணர்வாளர்களால் உணர்த்தப்படும். தமிழகத்தில் உண்டான சமய நூல்கள் ஒரு காலத்தில் அழிந்து போயிருக்கின்றன. ஆனால் அந்நூல்களில் உள்ள உண்மைகளை உள்ளடக்கி "ஆகமங்கள்" என்னும் பெயரால் வடமொழியில் நூற்கள் செய்யப்பட்டிருக்கின்றன. உபநிடதங்களைப் போல ஆகமங்கள் வடமொழிக்குச் சொந்தமானவை அல்ல; அவை சொந்த

மானவை அல்ல என்பதைப் பின்வரும் நான்கு காரணங்களைக் கொண்டு அறியலாம்:—

1. உபநிடத நடைவேறு; ஆகமநடை வேறு; அது. பிற்காலத்தது: பிற்காலச் சொற்கள் பல ஆகமங்களில் இடம் பெற்றுள்ளன.

2. வடமொழியாளர்கள் சிவ காம மங் க ளைப் போற்றுவதும் இல்லை; மேற்கோள் காட்டுவதும் இல்லை.

3. சிவாகம விதிப்படி கோயில்கள் வடநாட்டில் அமையவில்லை; வழிபாடுகளும் சிவாகம விதிப்படி அங்கே செய்யப்படவில்லை.

4. வேத நெறியினர் ஆ க ம ங் க ளை மிகக் கீழானவையாக மதித்து அவற்றைப் பார்ப்பதே பாவம் என்று கூறுகின்றனர். எனவே இவை வேறிடத்திலிருந்து வந்தன என்றே அவர்கள் கொள்கின்றனர் என்பது தேற்றம். எங்ஙனம் இருப்பினும் ஆகம உண்மைகள் தமிழ்மொழியில்தாம் போற்றப் பட்டுள்ளன. தமிழ்மொழியிலுள்ள சமய நூல்கள் அழிந்துபோன பின்னர் இவ்வாகமங்கள் அவ்வுண்மைகளைச் சில காலம் பரப்பி வந்திருக்கின்றன. அப்புறம் இவைகளும் மங்கிப் போகத் திருமுறை ஆசிரியர்கள் தோன்றிச் சமய உண்மைகளை அறிவுறுத்தியிருக்கின்றனர், திருமுறைகள் தோன்றிய பின்னர் வடமொழி ஆகமங்களை மக்கள் மிகுதியாகப் பேணவில்லை; அவை மறையத் துவங்கின; கிரியா விதிகளுள்ள பகுதிகள் மட்டும் அழிந்து போய் விடாமல் பாதுகாக்கப்பட்டு வந்திருக்கின்றன. சித்தாந்த ஆசிரியர்கள் காலத்தில் வடமொழி ஆகமங்களையும், உபநிடதங்களையும் ஒருமைப் படுத்தி மேற்கோள் காட்டினால் தான் சங்கரர், இராமானுசர் முதலியோரின் கொள்கைகளால் ஏற்பட்ட குழப்பம் நீங்கும்

போலிருந்தது. எனவே ஆகமங்களைச் சிறப்பு நூற்களாகக் கொண்டு திருமுறைகளுக்கேற்ப அவற்றைப் பொருள் படுத்திச் சித்தாந்த உண்மைகளை வெளியிட்டனர் சிவஞான போதம் ரௌரவ ஆகமப் பகுதியின் மொழி பெயர்ப்பு என்பது தவறு; அண்மையில் ரௌரவ ஆகமம் வெளியிடப்பட்டுள்ளது. அதில் "சிவஞான போதம்" இல்லை. எனவே சிவஞான போதம் தமிழ் முதல் நூலே ஆகும். சித்தாந்த நூற்கள் அனைத்தும் ஆகமங்களைத் திருமுறைகளுக்கேற்பப் பொருள் செய்வதற்காக எழுந்த தமிழ் நூற்களே ஆகும். அவை மொழிபெயர்க்கப்பட்டவையல்ல. சித்தாந்த நூற்கள் வெளிவந்த பின்னர் பெரும்பாலான ஆகமங்கள் தேடுவாரற்றுப் போயின; நமக்கு இப்பொழுது திருமுறைகளும் சித்தாந்த சாத்திரங்களுமே மூல நூற்களாகும்; கிடைக்கின்ற ஆகமங்களைத் துணையாக வேண்டுமானால் பயிலலாம்; வேதங்களும் ஆகமங்களும் காலத்தால் அழிவது இயற்கை; நிலைபேறான உண்மைகள் என்றும் அழியாமல் மெய்யுணர்வாளர்களால் உணர்த்தப்பட்டு வரும் என்பதில் ஐயமில்லை. "வடமொழி ஆகமங்கள் தாம் நமக்கு மூலம்" என்று சொல்லுபவர்கள் கூற்றை ஏற்றுக்கொண்டாலும் வடநூலார் அவ்வாகமங்களைப் போற்றுவதில்லையாதலால் நாமே அவற்றிற்குரியவர்களாக இருக்கிறோம் என்பது தெளிவு.

வினா. உ:

சிவஞானசித்தியாரில் "யாதொரு தெய்வங் கொண்டீர்" என்று தொடங்கும் பாட்டை வைத்துக் கொண்டு காட்டேரி, கருப்பராயன், மதுரைவீரன் முதலான பலி கேட்கும் சிறு தெய்வங்களை இறைவனாகவே நினைத்து வழிபட்டால் அவன் அதை ஏற்று

அருள்புரிவாரா? [கல்வி அறிவில்லாப் பொது மக்கள் அவ்வாறே வழிபடுகின்றனர்.]

முழுமுதற்கடவுளல்லாத திருமாலை முழுமுதற் கடவுளாகவே நினைந்து வழிபட்டால் எல்லா நன்மைகளையும் அடைய முடியுமா? திருமாலை வழிபட்ட ஆழ்வார்களும் பிறரும் வீடுபேற்றினை அடைந்துள்ளனரா?

"அரியலால் தேவியில்லை" என்று அப்பர் திருமாலையே உமையம்மையாகக் கொண்டுள்ளார். அதனால் திருமாலும் முழுமுதற்கடவுள் என்று தெரிகிறது; தமிழ்க்கடல் மறைமலையடிகளாரும் தமது "தமிழர் மதம்" என்னும் நூலில் "அம்மை வழிபாடே திருமால் வழிபாடாக மாறியது" என்றும் "திருமாலும் முழுமுதற்கடவுளே" என்றும் பல சான்றுகள் காட்டி விளக்கியுள்ளார். இந்த மயக்கத்தை நீக்க வேண்டுகிறோம்.

விடை:

பொதுமக்கள் காட்டேரி, மதுரைவீரன் முதலிய சிறு தெய்வங்களை முழுமுதற் பொருளாகக் கருதி வழிபடவில்லை; அத்தெய்வங்களை முழுமுதற் பொருளாக அவர்கள் கருதியிருந்தால், "எதிரியின் கண்ணைப் பிடுங்கு; காலை முறி; உனக்கு ஆடு வெட்டுகிறேன்; கோழி வெட்டுகிறேன்" என்று வேண்ட மாட்டார்கள்; தாம் செய்யும் தீய செயல்களுக்கு அவை துணையாக வரும் என்று நம்ப மாட்டார்கள். மது, இறைச்சி முதலியவைகளை வைத்துப் படைக்கவும் மாட்டார்கள். சிறு தெய்வங்களை, "இறைவனாக நினைந்து" வழிபடுவதற்கு, முதலில் இறைவனின் இலக்கணங்களைத் தெரிந்து கொள்ளவேண்டும். அவ்விலக்கணங்கள்

யாவற்றையும் அச்சிறு தெய்வத்தின் மீதேற்றிச் சிறு தெய்வம் என்றே நினையாது முழுமுதற் பொருள் என்றே நினைத்து வழிபட்டால் வீடுபேறடையலாம். ஆனால் இங்ஙனம் வழிபடும் பொழுது சிறு தெய்வ வணக்கம் என்பதே அடிபட்டுப்போவதால், இக் கேள்விக்கு இடமில்லை. பொதுமக்கள் முழு முதற்பொருளாக இவற்றை வணங்காமல் சிறு தெய்வங்களாகவே கருதி வணங்குவதால், சிறு தெய்வ வழிபாட்டில் செய்யப்படும் நல்வினை, தீவினைக்கேற்ற பயனையே இறைவன் அவர்களுக்கு வழங்குவான். முழுமுதற் பொருள் வணக்கத்தால் பெறும்பயனில் மிகச் சிறிய அளவு கூட இவ்வணக்கத்தால் பெற இயலாது.

திருமால் முழுமுதற்கடவுளேயாகும்; திருமாலில் இருவகை உண்டு. தூய மாயையில் இறைவனே திருமாலாக நிற்கின்றான். ஆகவே அவன் முழு முதற் பொருள் என்பது தெளிவு. பிரகிருதி மாயா உலகத்தில் நம் போன்ற உயிர்கள் புண்ணிய மிகுதியால் திருமால் நிலை பெறுகின்றன. இங்ஙனம் பதவி பெறுகின்ற உயிராகிய திருமால்' முழுமுதற்கடவுள் அன்று; ஆழ்வார்கள் பிரகிருதி மாயா உலகத் திருமாலையும் சுத்தமாயா தத்துவத் திருமாலின் கூறாகவே கொண்டு வழிபட்டனர். முழுமுதற் பொருளுக்குள்ள இலக்கணங்கள் அனைத்தும் திருமாலுக்கு உண்டெனக்கொண்டே வழி பட்டதால் அவர்கள் வீடு பேற்றினை அடைந்திருப்பர் என்பதைச் சொல்ல வேண்டுவதில்லை. சுத்தமாயா தத்துவத்தில் இறைவனின் ஆற்றலே திருமாலாக நிற்பதால் "அரியலால் தேவியில்லை" என அப்பர் பெருமான் கூறியுள்ளார்.

திருமாலை முழுமுதற் பொருளாகக் கொண்டு வழிபட்டால் உறுதியாக எல்லா நன்மைகளையும் பெறலாம்; வீடுபேறும் எய்தலாம்.

வினா. (ஊ):

உயிர்களின் எண்ணிக்கை பற்றிக் கேட்ட வினாவிற்கு, "அவை எண்ணிலி என்றும்" "எண்ணிலி" என்றால் எண்ண முடியாத தொகையினை உடையதென்று பொருள் கொள்ளக் கூடாதென்றும் தொகையே அற்றதென்று பொருள் கொள்ள வேண்டும் என்றும் கூறியுள்ளீர்கள்; தொகையே அற்றதென்றாலும் இறைவன் தன் பேரறிவாலும் பேராற்றலாலும் தன் நிறைவுள் அடங்கியுள்ள உயிர்களின் எண்ணிக்கையை அறிந்து தானே இருக்கவேண்டும்? தொகையே அற்று எப்படி இருக்க முடியும்? ஆதலின் தொகையற்ற உயிர்கள், தொகையற்ற காலத்திலாவது இறைவனை அடைந்து தானே தீரவேண்டும்? அப்போது வீடுபேறு அடைதற்குரிய உயிர்கள் இல்லாமற்போகுமாதலால், ஐந்தொழில்களில் முதல் நான்கு தொழில்களும் நின்று போக "அருளல்" என்னும் தொழில் மட்டும் தானே நிகழ முடியும்? இறைவனின் தொழில்களுக்கும் ஒரு முடிவு உண்டா? விளக்க வேண்டுகிறோம்.

விடை:

"எண்ணிலி" என்பது பற்றி முதலில் கணக்கு நூல் கூறுவதை நன்கு விளங்கிக் கொள்ள வேண்டும். ஒன்று, இரண்டு, மூன்று என்று எண்ணுகிறோம். முடிவான எண் அதாவது எல்லா எண்களுக்கும் மேற்பட்டதாக உள்ள இறுதி எண் யாது? கோடியை இறுதி எண் என்று கூறமுடியாது. அதற்கு மேல் பத்துக்கோடி, நூறுகோடி, கோடியோ

கோடி என்று எண்ணிக்கொண்டே போகலாம். 1,00,00,00,000............... இப்படிச் சுன்னத்தைப் போட்டுக்கொண்டே இருக்கலாம், முடிவான எண் இதுதான் என்று சொல்ல முடியாது. ஏதேனும் ஓர் எண்ணில் முடியத்தானே வேண்டும்? முடிவில்லாமல் எப்படி இருக்க முடியும்? நம்மால் சொல்ல முடியா விட்டாலும் எண்களுக்கு ஏதேனும் ஒரு முடிவு இருக்கத்தானே வேண்டும்? இப்படிக் கேட்டால் என்ன சொல்வோம்? எண்ண, எண்ணக் கூடி வருவது தான் எண்ணாகும். எனவே எவ்வளவு எண்ணினாலும் மேன்மேலும் எண்கள் இருப்பதே எண்ணின் இயல்பாகும். இவ்வியல்பினால் எண்ணுக்கு முடிவில்லை. இதுவே கணக்கு நூல் கூறும் விடை யாகும். எண்ணின் முடிவில்லாத தன்மையை உணர்த்த ''எண்ணிலி', என்னும் குறியீட்டைக் கணக்கு நூல் கண்டுள்ளது.

''எண்ணிலி'' என்றால் தொகையே அற்றது என்று பொருள். தொகையே இல்லாமல் எப்படி இருக்கும்? என்று வினவலாம். நூறு என்பது ஒரு தொகை. நூறு என்று சொன்னவுடனேயே அதற்கு மேல் ஆயிரம் என்று ஒரு தொகையை நாம் சொல்லி விடலாம். எந்தத் தொகையைச் சொன்னாலும் அதற்கு மேல் திண்ணமாக வேறொரு தொகை இருக்கவே செய்யும். "எண்ணிலி" என்பதோ எந்தத் தொகையைச் சொன்னாலும் அதற்குள்ளடங்காமல் அதற்கு மேலே முடிவின்றிச் சென்று கொண்டிருக்கும் நிலையைக் குறிக்கும். இதனாலேயே "எண்ணிலி" என்பது தொகையே அற்றதென்று சொல்கிறோம்.

"எண்ணிலி"யிலிருந்து எந்தத் தொகையைக் கழித்தாலும் மீதி எண்ணிலியாகவே இருக்கும் என்று கணக்கு நூல் கூறுகிறது. இஃதெப்படிப்

பொருந்தும்? கழித்த அளவு குறையத்தானே வேண்டும்? என்று கேட்கலாம். அண்ணாந்து பார்த்தால் வானம் தெரிகிறது; அதன் எல்லையைக் காண ஆசையுற்ற ஒருவன் வான ஊர்தியில் பறந்து செல்கிறான் என வைத்துக் கொள்வோம். பறந்து செல்லச் செல்ல வானம் மேன்மேலும் முடிவின்றிச் சென்று கொண்டிருப்பதையே அவன் காண்பான். பறந்து சென்ற தொலைவின் அளவு கழிந்துதானே இருக்கும்? முகில் மண்டிலங்கள், அவற்றிற்கு மேலுள்ள மண்டிலங்கள் இப்படி எவ்வளவு மண்டிலங்களைக் கடந்தாலும் மேன்மேலும் வானம் இருந்து கொண்டே இருக்கும். வானத்திற்கு ஒரு முடிவு இருந்தால், அப்புறம் அதற்கு மேல் என்ன இருக்கும் என்று சிந்தித்துப் பார்ப்போம். அதற்கு மேலும் வானமே இருக்கவேண்டும் என்று தோன்றுகிற தன்றோ? ஆகவே வானத்திற்கு முடிவில்லை; எவ்வளவு தொலைவு சென்றாலும், சென்ற தொலைவை எவ்வளவுதான் கழித்துப் பார்த்தாலும் மீதம் இருக்கும் வானம் முடிவில்லாமல்தான் இருக்கும், கழிந்த தொலைவு கழிந்ததுதான்; எனினும் மீத மிருக்கும் வானத்தின் தொலைவு முடிவற்றதாகவே இருக்கும். இதுபோலவே "எண்ணிலி" என்பது முடிவற்ற எண்தொடர் வழியாகும். எனவே எவ்வளவு தொகையைக் கழித்தாலும் மீதமிருக்கும் "எண்ணிலி" முடிவற்றதாகவே இருக்கும். ஒரு தொகையாக இருந்தால்தான் மற்றொரு தொகையைக் கழித்ததும் குறைவு உண்டாகும்; தொகை என்பது வரம்புக்குட்பட்டது. நூறு என்றால் அது நூற்றி ஒன்றுக்குக் கீழ்ப்பட்டதென்றுதானே பொருள்? இதனால் அதற்கு வரம்பு இருக்கிறது. வரம்புடைய ஒன்றிலிருந்து ஒன்றைக் குறைத்தால்

குறைந்தது போக மீதம் அத்தொகைக்குக் குறைவாகவே இருக்கும். வரம்பற்றது குறையாது. குறைந்தால் அது வரம்புடையதாகுமே அன்றி வரம்பற்றதாகாது. "எண்ணிலி" வரம்பற்றது. அஃது எந்தத் தொகையைச் சொன்னாலும் அந்தத் தொகைக்கு மேலும் சென்று கொண்டே இருக்கும் தன்மையுடையது. இதனால் "எண்ணிலி" யிலிருந்து எந்தத் தொகையைக் கழித்தாலும் அதற்காக "எண்ணிலியில்" குறைவு நேர இடமில்லை. இன்னொரு வகையாகச் சொல்வதென்றால், கழித்ததொகை குறைவதற்காக "எண்ணிலி" முடிவற்றதாகிய தன் தன்மையில் குறையாதென அறிதல் வேண்டும். எனவே எண்ணிலியிலிருந்து எதனைக் கழித்தாலும் மீதமும் எண்ணிலியே எனக் கணக்கு நூல் திட்டவட்டமாகக் கூறுகிறது.

வானத்துக்கு முடிவு இருக்கத்தானே வேண்டும்? எண்ணிலிக்கும் முடிவு இருக்கத்தானே வேண்டும்? நமக்கு அம்முடிவு தெரியாவிட்டாலும் இறைவனுக்குத் தெரியத்தானே வேண்டும்? என்று கேட்கலாம்.

இறைவன் எல்லையற்றவன்! அவன் நிறைவு முடிவற்றது. மாயை நிறைவுப் பொருள்; அதன் நிறைவும் எல்லையற்றது. ஆனால் எல்லையற்ற இறைவன் மாயையின் "எல்லையை" அறிந்திருக்கத்தானே வேண்டும்? இதற்கு நாம் என்ன விடை சொல்வோம்? எல்லையற்ற இறைவன் எல்லையற்ற அதன் தன்மையை அறிவான் என்றே சொல்வோம். இதனால் மாயை எல்லையுடையதாகிவிடுமா? எல்லையற்றது எல்லையற்றதேயாகும். இது போலவே வானத்தின் முடிவற்ற தன்மையையோ, எண்ணிலியின் முடிவற்ற தன்மையையோ இறைவன் அறிவான் என்பதற்காக அவை முடிவுடையனவாக மாட்டா. முடிவற்றவை முடிவற்றவையே. "முடிவற்ற

தன்மையைக்" கண்டு சுட்டறிவினராகிய நாம் மிரளக் கூடாது." வரம்பற்ற தன்மை" உண்டென அறிந்தால் தான் அதனை அறிதற்குரிய வரம்பற்ற அறிவைப் பெற முயல்வோம். இதனால் நம் முன்னேற்றத்துக்கு "முடிவற்ற தன்மை" தேவையாகும். "முடிவுடையன" நம்மை உய்விக்க மாட்டா. "முடிவற்ற தன்மையே" நம்மை உய்விக்கும். எல்லையற்ற இறைவன் எல்லை யற்ற ஒன்றை அறிந்தால், அந்த ஒன்று எல்லையற்ற தாகத்தானே இருக்கவேண்டும்?

இனி உயிர்கள் பற்றிச் சைவ சித்தாந்தம் கூறுவதைக் கவனிப்போம்.

உயிர்கள் "எண்ணிலி" என்று கூறுகிறோம். நம்மால் அவற்றின் தொகையைக் கணக்கிட்டுக் கூற முடியாதென்பதற்காக அவை "எண்ணிலி" என்று நாம் சொல்லவில்லை. நம்மால் கணக்கிடமுடியா விட்டாலும் அவை ஏதேனும் ஒரு தொகைக்குட்பட்டு இருக்கலாம் அன்றோ? தொகையே அற்றதாகிய "எண்ணிலியை" நாம் ஏன் புகுத்த வேண்டும்?

இறைவன் முதன் முதலாக எப்பொழுது தன் படைப்புத் தொழிலைத் துவங்கி இருப்பான்? என்னும் ஒரு கேள்வியை எழுப்பிப் பார்ப்போம். ஆயிரம் கோடி ஆண்டுகளுக்கு முன் என்று சொன்னால் அதற்குமுன் ஏன் அவன் அதனைத் துவங் காமலிருந்தான்? என்னும் வினா எழும். எத்தனை கோடி ஆண்டுகளைச் சொன்னாலும் அவ்வாண்டுகளுக்கு முன் அவன் ஏன் வாளா இருந்தான்? என்னும் வினா எழாமற்போகாது. இறைவன் வாளா இருக்க வேண்டிய தேவை இல்லை. அவனுக்குக் குறையாத ஆற்றல் என்றும் உண்டு. எனவே இக்கேள்விக்கு என்ன விடை இறுக்கலாம்? "எண்ணிலி காலத்துக்கு முன் இறைவன் படைப்பைத் துவங்கினான்" என்பதே சரியான விடையாகும். ஏனெனில் "எண்ணிலி"

காலம் என்றால் அதற்கு முன் என்ன செய்தான் என்னும் கேள்வி தோன்ற இடமிருக்காது. ஒரு வரம்பு இருந்தால்தான் அதற்கு முன் பின் இருக்கும். வரம்பற்றதற்கு முன் பின் இல்லை. ஆயிரங்கோடி என்பது வரம்புக்குட்பட்டது; ஆயிரங்கோடிக்கு மேலும் ஆண்டுகள் உண்டு. இதனால் அது வரம்புடையதாகிறது. வரம்பு இருப்பதால் அதற்கு முன் என்ன செய்தான்? என்று கேட்க இடமிருக்கிறது. "எண்ணிலி என்பது வரம்பற்றது. ஆகவே அதற்கு முன் என்ன செய்தான்? என்னும் கேள்வி எழ இடமில்லாமற் போகிறது.

"எண்ணிலி" காலத்துக்கு முன் இறைவன் படைப்பைத் துவங்கியதால் எண்ணிலி படைப்புகளும் அழிப்புகளும் நிகழ்ந்திருக்கும் என்பதைச் சொல்ல வேண்டுவதில்லை. அப்படி இருந்தும் இன்னும் உயிர்கள் பிறப்பிறப்பினுக்குட்பட்டு வருவதைக் காண்கிறோம். எல்லா உயிர்களும் வீடு பேறு அடைவதற்கு ஏதேனும் ஒரு தனிக் கால அளவு இருக்குமானால் இந்த எண்ணிலி காலத்தில் அவை யாவும் வீடுபேறு அடைந்திருக்க வேண்டும். ஏனெனில் எவ்வளவு கால அளவைச் சொன்னாலும் அத்தனை கால அளவும் "எண்ணிலி" காலத்துக்குள் அடங்கியே இருக்கும். ஆகவே ஒவ்வோர் உயிரும் வீடுபேறு அடைவதற்குக் காலம் இருக்கலாமே அன்றி எல்லா உயிர்களும் வீடுபேறு அடைவதற்கென்று ஒரு தனிக்கால அளவு இருக்க முடியாது. ஒவ்வோர் உயிரும் அதற்கென்றே உரிய இயல்பு வேறுபாட்டால் வெவ்வேறு காலங்களில் தகுதி எய்தி வீடுபேறு அடைவதாலேயே, உலகம் இன்னும் செயல்பட்டு வருகிறதெனக் கொள்ளவேண்டியதிருக்கிறது. உயிர்கள் வெவ்வேறு

வகையான இயல்பு கொண்டவையாக இருப்பதால் அவை தகுதி எய்துதற்குரிய கால வேறுபாடுகளும் பலவாக இருக்கின்றன. "எண்ணிலி" காலமாகியும் தகுதி பெருத உயிர்களை நாம் காண்பதால் உயிர் களின் இயல்பு வேறுபாடுகளும் எண்ணிலியாகவே இருத்தல் வேண்டும் எனக் கொள்ள வேண்டியதிருக் கிறது. எண்ணிலி இயல்பு வேறுபாடுகள் உள்ள உயிர்களும் எண்ணிலியாகவே இருக்க வேண்டு மன்றோ? இதனுல்தான் உயிர்கள் எண்ணிலி எனச் சொல்கிறோமே அன்றி நம்மால் எண்ண முடியாத காரணத்துக்காக அன்று என அறிதல் வேண்டும்.

உயிர்கள் எண்ணிலி என்பது பெறப்பட்டதும் மற்றவற்றை விளக்குவது எளிதாகிறது.

"எண்ணிலி" உயிர்களில் எத்தனை உயிர்கள் வீடு பேறு அடையினும் பின்னும் வீடுபேறடைய வேண்டிய உயிர்கள் எண்ணிலியாகவே இருக்கும் என்பதைச் சொல்ல வேண்டுவதில்லை. ஒவ்வோர் உயிரும் விடுபேறு அடையும் என்பதை நாம் ஒப்புக் கொள்ளுகிறோம். ஆனுல் உயிர்கள் எண்ணிலியாத லால் அவை அனைத்தும் முத்தியடைவதற்குரிய காலத்தையும் "எண்ணிலி" என்றே கூறவேண்டிய திருக்கிறது. "எண்ணிலி" என்ருல் "எக்காலமும்" என்றுதான் பொருள். எனவே இறைவனின் ஐந் தொழிற்கும் எக்காலத்திலும் முடிவில்லை என்பதும், எப்பொழுதும் அத்தொழில்கள் நடந்து கொண்டே இருக்கும் என்பதும் புலனுகும்.

சித்தாந்த சாத்திரம் பதினுன்கனுள் ஒன்ருகிய "போற்றிப் பஃருெடையில்" உமாபதி சிவம் அருளிச் செய்திருக்கும் திருவாக்கால், இது பற்றிய உண்மையை அறியலாம். அது வருமாறு:-

"பல்லுயிர் வெவ்வேறு படைத்தும், அவை காத்தும், எல்லே இளைப் பொழியவிட்டு வைத்தும், தொல்லையுறும், அந்தம் அடி நடுவென்றெண்ண அளவிறந்துவந்த பெரிய வழிபோற்றி."

இதற்குப் பழைய உரையாசிரியர் மிக அருமை யாக - மிகத்திட்டவட்டமாக உரைஎழுதி இருக்கிருர். அதுவருமாறு;-

"அநாதியாய் எண்ணிறந்த உயிர்கள் மோட்ச மடைந்திருக்கவும் குறைவில்லாமல் நித்தியமாய் அளவிறந் திருக்கிற பெத்தான்மாக்களைக் கன்ம மலத்துக்கீடான தேகங்களில் சராயுஜம், அண்டஜம், சுவேதஜம், உத் பீஜம் ஆகிய நால்வகை யோனிகளிலும் மாறி, மாறி வேறு வேருகப் படைத்தும் அவ்வான்மாக்களுக் குள்ள அரிய விளைப்போகங்களை ஏருமற் குறை யாமற் கூட்டிப் புசிப்பித்தும் சர்வ சங்கார காலத்தில் ஆன்மாக்கள் சகலாவத்தைப் பட்டுப் பிறந்து இறந்து அலேந்து திரிந்த இளைப்பு நீங்கும் படிக்குக் காரண கேவலாவத்தையில் ஒடுங்குவித்தும் அநாதியே தொடுத்து ஆதியாய்ச் சிருட்டித்தும், திதித்தும் சங்கரித்தும் அளவிறந்து ஆதி, நடுவு, அந்தம் அற்று வருகிற பெரிய கிருத்திய வழி எம்மை இரட்சிக்க."

இதுவே பழைய உரையாசிரியர் எழுதியிருக்கும் உரையாகும். இதில் "குறைவில்லாமல் நித்தியமாய்" என அவர் எழுதியிருப்பதைக் கவனிக்க வேண்டும். உயிர்கள் குறையாமல் என்றும் உண்டென அவர் கூறுவதிலிருந்து "எண்ணிலி" பற்றிய கணக்கு நூற் கருத்தை அவர் மிகத் தெளிவாக உணர்ந்திருக்கிருர் என்பது புலனுகும். "அந்தம் அற்று வருகிற பெரிய கிருத்திய வழி" என அவர் கூறுவதிலிருந்து இறை

வனின் தொழில்களுக்கு "அந்தம்" அதாவது முடிவில்லை என்பதும் தெரியவரும். எனவே சைவ மெய்ந் நூலும் அதன் உரையும் கூறுவதற்கு மாறாக இறைவன் செயல் என்றாவது ஒருநாள் நின்று விடும் என்பது சரியன்று.

இறைவனின் நுண்ணிய ஐந்தொழிற்கோ, பரிய ஐந்தொழிற்கோ, அவற்றுள் ஏதேனும் ஒரு தொழிலுக்கோ காலத்தால் முடிவு சொல்வது பொருந்தாது. அப்படிச்சொன்னால் இறைவன் தன் நுண்ணிய செயல் நிறைவிற்கோ பரிய செயல் நிறைவிற்கோ காலம் நோக்கி நிற்கின்றான் என்று கொள்ள வேண்டியது வரும். உயிர்கள் தம்செயல் நிறைவிற்குத் தகுதி நோக்கியோ, காலம் நோக்கியோ நிற்பது இழுக்காகாது. இறைவன் தன்செயல் நிறைவிற்குக் காலம் நோக்கி நின்றால் அவன் குறையுடையவனாகி விடுவான். இஃது அவன் இறைமைத் தன்மைக்கு இழுக்காகும்.

இறைவன் செயலுக்கு முடிவு கூறினால் அவன் காலத்திற்குட்பட்டே செயலாற்றுகிறான் என்று சொல்ல வேண்டியது வரும். எனவே அவன் செயல் என்றும் நிகழ்ந்து கொண்டேயிருக்கும் என்பதே பொருத்தமான கருத்தாகும்.

"தொகையற்ற உயிர்கள் தொகையற்ற—முடிவில்லாத ஒரு காலத்திலாவது இறைவனை அடைந்து தானே தீரவேண்டும்?" என்று கேட்டிருக்கிறீர்கள்.

"தொகையற்ற - முடிவில்லாத காலம்" என்றால் என்ன பொருள்? எப்பொழுதும் நடைபெற்றுக் கொண்டிருக்கும் ஒன்றைத்தான், முடிவில்லாத தொகையற்ற காலம் நடைபெறும் என்று சொல்கிறோம். "முடிவில்லாத" என்று சொல்லிவிட்டு

அப்புறம் அதற்கு முடிவு கேட்பது பொருந்தாது. "தொகையற்ற - முடிவில்லாத" என்னும் சொற்றொடருக்குப் பொருள் இன்னதென அறிந்து கொண்டோமானால் இக்கேள்விக்கு இடமில்லை. "முடிவற்ற தன்மை" ஒன்று உண்டென்பதை நாம் தெரிந்து கொள்ளவேண்டும். அதற்கு அப்புறம் "முடிவு" கேட்பது பொருத்தமாகாது.

இறைவன் எல்லையற்றவன்; மாயை எல்லையற்றது; உயிர்கள் எண்ணிலி; எனவே இறைவன் தொழில் முடிவின்றி என்றும் நிகழ்ந்து கொண்டேயிருக்கும் என்பது தான் சரியான கருத்தாகும். ஒவ்வோர் உயிரும் வீடுபேறு அடையவே செய்யும். அதற்கு ஒரு தனிக் காலஅளவு இருக்கவே செய்யும்; ஆனால் எல்லா உயிர்களும் வீடுபேறு அடைவதற்கென்று ஒரு தனிக்கால அளவு இருக்க முடியாது. ஏனெனில் அவை எண்ணிலி; ஆகவே வீடுபேறு அடையும் காலமும் எண்ணிலியாகவே அஃதாவது முடிவற்ற தாகவே இருக்கும்; முடிவற்றதென்பதற்குப் பொருள் எத்தனை உயிர்கள் வீடுபேறு எய்தினாலும், வீடுபேறு அடைய வேண்டிய உயிர்கள் எக்காலமும் இருந்து கொண்டே இருக்கும் என்பதாகும்.

"எண்ணிலி காலத்திற்கு முன் இறைவன் படைப்பைத் துவங்கினான்" என்பதை மனத்திற் கொண்டே "இறைவனின் ஐந்தொழில்களும் அநாதி" என்று சொல்கிறோம். ஆனால் தொழிலுக்குத் "துவக்கம்" வேண்டுமே என்பதால்தான் "எண்ணிலி காலத்திற்கு முன்" என்று கூறுகிறோம். காலதத்துவம் இறைவனால் படைக்கப்பட்டதாகும். எனவே படைப்புத் தொழில் காலதத்துவத்திற்கு முற்பட்டதென்பது தானே போதரும். காலம் இருந்தால்தான் "முன்.

பின்," "துவக்கம், இறுதி," "நேற்று, இன்று" முதலிய வழக்குகள் எழும். காலம் இல்லாத நிலையில் இவற்றிற்கு இடமில்லை. இறைவனின் தொழில்கள் காலம் தோன்றுவதற்கு முன் உள்ளவையாதலால், அவற்றை, "அநாதி" என்றோ "எண்ணிலி காலத்திற்கு" முன் உள்ளவை என்றோதான் கூற வேண்டியதிருக்கிறது. அப்பொழுதுதான், "முன், பின்" என்னும் வழக்குகள் எழாமற்போகும். காலம் கடந்தவற்றைச் சொற்களால் இவ்வாறுதான் உணர்த்த முடியும். சொல்லுக்குக் காலம், இடம் ஆகியவற்றைக் கடந்து செயல்படும் ஆற்றல் இல்லை. சொல்லுக்குக் காலத்தை கடக்கும் ஆற்றல் இல்லாமையால் தான் காலம் இல்லாத நிலையில் துவங்கிய படைப்புத் தொழிலைக் காலச் சொல் சேர்த்து "எண்ணிலி காலம்" எனக் கூறவேண்டியிருக்கிறது. காலம் கடந்த ஒன்றை உணர்த்துவதற்கு "அநாதி" அல்லது "எண்ணிலி காலத்திற்கு முன்" என்னும் சொற்களையே கையாள முடியும். எனவே தப்பித்துக் கொள்வதற்காக இச் சொற்களைப் பயன்படுத்துகிறோம் எனக் கருதக்கூடாது. காலம் கடந்த-காலம் இல்லாத ஒரு நிலையைஓரளவு மனக்கண்ணால் சிந்தித்துப் பார்த்தால் இதன் உண்மை புலனாகும்.

"இறைவனின் தொழிலுக்கு முடிவில்லையென்றால் அவன் தன் குறிக்கோளை என்றுமே நிறைவேற்ற முடியாதவனாக மாட்டானா?" என்று கேட்கலாம். குறையுடையார்க்கே குறிக்கோள் உண்டு. வருங்காலத்தை அறியமுடியாததாலும், நினைத்தபடி செயலாற்றக் காலம், இடம், வாய்ப்பு முதலியவை இடையூறாக இருப்பதாலும், ஒன்றைக் குறிக்கோளாகக் கொண்டு நாம் செயலாற்ற வேண்டியதிருக்கிறது. இறைவனோ முக்காலத்தையும் அறியக்கூடியவன்;

அவனே தான் காலம், இடம், வாய்ப்பு முதலியவற்றை உண்டாக்குகிறான். ஆகவே அவனுக்குச் செயல் நிறைவென்றோ, குறிக்கோள் என்றோ ஒன்று இருக்க இடமில்லை. வீடுபேறு நல்குவதற்கு உயிர்கள் தகுதி பெறும் காலம் நோக்கித்தானே இறைவன் நிற்கின்றான்? என்னும் ஐயம் எழலாம். வருங்காலத்தை அறியமுடியாவிட்டால் தான் நோக்குதல் நிகழும். உயிர் எப்பொழுது தகுதிபெறும் என்பதை இறைவன் முன்னமே அறிவானாதலால் அவனுக்கு நோக்குதல் இருக்க இயலாது. இறைவன் உயிர்கள் வீடு பேறு அடைவதற்காகச் செயலாற்றுகின்றானே அன்றி அவை வீடுபேறும் அடையும் காலமோ, தகுதியோ நோக்கிச் செயலாற்றவில்லை. இங்ஙனம் செயலாற்றுவதும் அருள்காரணமாக அவனுக்குள்ள இயல்பே அன்றிக் குறிக்கோள் அன்று. இதனால் ஒவ்வோர் உயிரும் வீடுபேறு அடைவதற்காக அவன் என்றும் செயலாற்றிக் கொண்டே இருப்பான் என்பது புலனாகும். காலம், இடம் கடந்த இறைவன் செயலுக்குக் காலத்தால் முடிவுசொல்வது பொருந்தாது அவன் செயல் என்றும் நிகழும் என்பதே பொருத்தமான கருத்தாகும்.



# விளக்கமும் மேற்கோளும்

## கடவுளால் முடியாத செயல்கள்

உலகிற்கு மூலகாரணமாகப் பல சட ஆற்றல்கள் உண்டெனக் கொண்டாலும், "தோற்றுவித்தல்" "அழிப்பித்தல்" ஆகிய இருவகை முரண்பட்ட செயல்களைச் செய்வதற்கு அவற்றுள் சில ஆக்கும் தன்மையனவாயும் சில அழிக்கும் தன்மையனவாயும் இருத்தல் வேண்டுமாதலால், அப்பொழுதும் இந்நூல் பக்கம் 18ல் எடுத்துக் காட்டிய இடர்ப்பாடு தோன்றவே செய்யும். எனவே அறிவுடைப்பொருள் ஒன்றின் துணையின்றி இவை நடைபெறமுடியாதென்பது தெளிவு.

உயிர்க்கு அறிவே தலையாயதாதலால் அதனை இழந்து, அது காரணமாக நிகழும் இன்ப, துன்பம் அற்ற ஒரு நிலை உயிர் எய்தும் எல்லாத் துன்பங்களினும் பார்க்க மிக்கதொரு துன்ப நிலையாகும் என இந்நூல் பக்கம் 36. வரி 26- இல் எழுதியிருப்பதை விரித்துப் பொருள் கொள்ள வேண்டும்.

மாயை தன்னளவில் மயக்கம் செய்யாது; ஆணவ மலச் சார்பாலேயே மயக்கம் செய்யும். இதனால்தான் தன்னளவில் மயக்கம் செய்யாத மாயை அநாதியே உயிரை ஈர்க்கவில்லை. எனவே தன்னளவில் மயக்கும் தன்மைத் தாய ஆணவமலத்துள் உயிர் அநாதியே அழுந்திற்றென்க. "மலத்தைப் பற்றுதல்" உடனிகழ்ச்சியாகும்.

அறிவிழந்து நிற்றலாகிய மிகப் பெரிய துன்ப நிலையிலிருந்து, உயிர் சிறுகச் சிறுக விடுபடுவதால் மாயையைக் கூட்டுவிப்பதன் மூலம் உயிரின் துன்

பத்தை இறைவன் குறைக்கின்றானே அன்றிக் கூட்ட வில்லை என்பது புலனாகும். உலகியல் துன்பம் அப் பெரிய துன்பத்தை நோக்கச் சிறியதே ஆகும். இத் துன்பமும் மலவிடுதலைக்கே ஆதலால், "வாளால் அறுத்துச் சுடும்" தன்மைத்ததே என்பது தெளிவு.

துன்பமின்மை இன்ப நிலையாகாது. எனினும் பயிற்றுவித்தற் பொருட்டாகக்கூட வாளா கிடக்கும் உயிர்க்கு மிகப்பெரிய துன்பத்தை விளைவிக்கும் ஆணவமலத்தை இறைவன் புதிதாக உண்டாக்குதல் பொருந்தாது; ஆனால் துன்பப் பொருளாகிய அஃது அநாதியே இருக்குமானால், அது காரணமாக நுகர்ச்சி அறிவுபெற வாய்ப்பிருத்தலால், அதனை அழிக்காது விட்டுவைத்தல் பொருந்தும் என்க.

சடத்திற்குச் சித்து மூலமாதல் பொருந்தாது. இதனால்தான் மாயையை இறைவன் உண்டாக்க வில்லை என்றும் அஃதும் என்றும் உள்ள பொருளே என்றும் கொள்கிறோம்.

மாயை இல்லையேல் இறைவன் என் செய்வான்? என்று வினவினால், அவன் அதனை உண்டாக்கிக் கொள்வான் என்றுதான் விடை இறுக்கவேண்டி வரும். ஆனால் அவன் அப்படி உண்டாக்கியிருந் தானால் சடத்திலிருந்து சித்தும், சித்திலிருந்து சடமும் தோன்றும் முறைமை உலகியலிற் காணப் படல் வேண்டும். அங்ஙனம் காணப்படாமையால் அல்லது காணப்படும்படி இறைவன் செய்யாமை யால், அவன் மாயையை உண்டாக்கவில்லை என்றும் அஃதும் அவனைப்போல என்றும் உள்ள பொருளே என்றும், என்றும் உள்ள பொருளாதலால், இல்லாமற் போகும் நிலையே ஏற்படாதென்றும் எனவே அஃது

இல்லையேல் இறைவன் என்செய்வான்? என்னும் வினா எழ இடமில்லை என்றும் கொள்கிறோம். சத்காரிய வாதத்தைச் சைவ சித்தாந்தம் ஏற்றுக் கொள்வதற்குக் காரணம் இஃதே ஆகும்.

"செம்பிற் களிம்புபோல்" என்னும் எடுத்துக் காட்டுப் பொருந்தாதென்பதற்கும், உயிர் அநுபவமின்மை காரணமாகத் தம் எளிய இயல்பால் அநாதியே மலத்தைப் பற்றியதென்பதற்கும் உடனே இறைவன் உயிர்களுக்கு வீடுபேறளிக்க முடியாதென்பதற்கும் மேற்கோள் வருமாறு:-

> "சீருணம் தான் பிறந்த நிலத்தியல்பால் களிம்புற்றதாதலின் அது காரணமின்மைக்கு எடுத்துக் காட்டாமாறென்னை"
>
> — சிவஞான பாடியம் சிறப்புப்பாயிரம்.

> "அநாதியே மலத்தின் நீங்குதல் முதல்வன் வினையாய் அநாதி முத்தத்தன்மை என எண்குணங்களுள் வைத்தெண்ணப் படுவதென்பது. சிவாகமங்களுக்கெல்லாம் ஒப்பமுடிந்தாற் போல அநாதியே மலத்தைப் பற்றுதல் உயிரின் வினையாய் உயிர்க் குற்றங்களுள் வைத்தெண்ணப்படுவதென்பதூஉம் அவற்றிற்கெல்லாம் ஒப்ப முடிந்தது"
>
> — சிவஞான போதச் சிற்றுரை 4-ம் சூத்திரம் 2-ஆம் அதிகரண உரை.

> "ஆன்மா ஆணவமலத்தைப்பிடித்தான் ........... பிடிப்பதற்கு முன் என்னாக இருந்தான் என்று கேட்கவும் வரும் ......... ஆன்மாவின் இலக்கணம் உள்ள வாறுணர மாட்டாமையின் அவ்வாறு கூறினீர்"
>
> —சித்தாந்த மரபுகண்டனகண்டனம்.

"சோபான முறையின் அறிவிக்க அறியும் தன்மைத்தாய உயிர் அநாதியே அறிவித்தால் அறியமாட்டாமையின் அம்மாட்டாமையான் அவ்வறிவை இழந்து அறியாமையாய் அழுந்துதலின் அஃதவ்வுயிர்க்குப் பந்தமாயிற்றெனவும் உணர்க."

— சிவஞான போதச் சிற்றுரை 4-ம் சூத்திரம் 2-ஆம் அதிகரண உரை.

"முதல்வன் வியாபகமாய் நின்றவாறே விளக்கினும் ஆன்மாக்களின் அறிவு சூலவறிவாதலின் அவ்வாறு விளங்கமாட்டாது தத்தமக்கேற்ற சோபான முறையே சிறிது சிறிதாக ஏகதேசமாய் விளங்கி, விளங்கி மேம்பட்டு வந்தே வியாபகமாய் விளங்குவதோரியல்-பிற்று."

— சிவஞான பாடியம் 8-ஆம் சூத்திரம் 1ஆம் அதிகரண உரை.

## நல்வினையும் தீவினையும்

செயலின் விளைவு ஊழால் மாறக்கூடும் எனவே செய்பவனது நோக்கைப் பொறுத்தே அவன் செய்த வினை நல்வினையா? தீவினையா? என்பதைத் தீர்மானிக்க வேண்டும்.

ஊழால் பயன்மாறும் பொழுது, அப்பயன் முன்னைச் செய்தநல்வினையால் வந்ததா? முன்னைச் செய்த தீவினையால் வந்ததா? என்பதை எப்படித் தீர்மானிப்பது? அப்பயன் நமக்கு இன்பத்தைத் தருமாயின் முன்னை நல்வினையால் வந்ததென்றும், துன்பத்தையோ, மயக்கத்தையோ தருமாயின் முன்னைத் தீவினையால் வந்ததென்றும் தெளிய வேண்டும். "எந்த ஒன்றையும் அதுதரும் நுகர்வை வைத்தே முடிவு செய்ய வேண்டும்"

என்பதில், "ஒன்று" என்பது பேற்றைக் குறிக்கிறதே அன்றி நாம் இப்பொழுது செய்யும் செயலைக் குறிக்கவில்லை என்பதை அதற்கு முன்னும் பின்னும் வரும் வரிகளால் உணரலாம்.

ஆணவமல குணத்துள் ஒன்றாகிய மோகம் உயிர்பெறும் நுகர்வாகிய மோகத்திற்கு ஏதுவாக அமையும்.

சாத்துவிக, இராசத தாமத குணங்களைப் புறச்சமயத்தினர் தம் கொள்கைக்கு ஏற்றவாறு வேறுபடுத்திக் கூறுவர். அவர்களை ஒட்டியே, "தானம் தவமே தருமம் பேணல்" முதலியன இராசதகுணம் என்று கூறப்பட்டுள்ளது. சைவ நூலார் தம் கொள்கைக்கு ஏற்றவாறு அக்குணங்களை விவரிப்பர். சைவக் கொள்கையினைப் பின்வரும் சிவ ஞானசித்தியார் உரையால் அறியலாம்:-

> "சாத்துவிக குணமானது பொறுமையையும் மன உறுதியையும் மனதின் சூட்சுமத்தையும் துன்பத்திலும் சந்தோஷமாயிருக்கும் தன்மையையும் மனம், வாக்குக்காயம் மூன்றும் கபடம் இன்றிஒத்தி ருக்கும் தன்மையையும் நல்ல உத்தியோகத்தையும் பெற்றது கொண்டே மகிழும் தன்மையையும் மோட்ச இச்சையையும் இந்திரிய அந்தக் கரணங்களின் அடக்கத்தையும் சகல சீவர்களிடத்தும் இரக்கத்தையும் மிருதுவான உணவை உண்ணுதலையும் உண்டுபண்ணும்.
>
> இராசத குணமானது இலௌகீகப் பிரவிருத்தியையும் கோபம் முதலிய குரூரத் தன்மையையும் "யான்எனது" என்னும் அபிமானத்தையும் வஞ்சனையையும் இரக்க மில்லாமையையும்

போகத்தின் கண் இச்சையும் டம்ப நடையையும் துக்கத்தையும் உண்டு பண்ணும்.

தாமத குணமானது ஒன்றிலும் திருப்தி இல்லாமையையும் உற்சாகம் இன்மையையும் ஈனப் பிரவிருத்தியையும் கோட் சொல்லுகையையும் அசுத்த உணவை உண்பதையும் அதிக நித்திரையையும் கர்வத்தையும் சோம்பலையும் பிறருடைய மதிப்பைக் குறைக்க எண்ணுதலையும் அறிவில்லாமையையும் மோகத்தையும் உண்டுபண்ணும்."

— சிவஞானசித்தியார் 2ஆம் சூத்திரம் 3ஆம் அதிகரணம். செய்யுள் 57. பொ. முத்தைய பிள்ளை உரை. இதே செய்யுள் சிவாக்கிரயோகிகள் உரை பக்கம் 314.

(திருவாவடுதுறை ஆதீன வெளியீடு)

பகவத்கீதை 14-ஆம் அத்தியாயம், 6, 7, 8ஆம் சுலோகங்கள் இவ்வாறு கூறுதல் காண்க.

## இறைவனின் இயல்புகள்

சத்திபிரிணமம் என்பது சத்தியே உலகாக மாறுவதாகும். அதுவேறு; இறைவன் அந்த அந்தப் பொருளாக நிற்பதென்பது வேறு. இறைவன் மாறாமல் அருள் காரணமாகக் கலப்பால் ஒன்றாகி அந்த அந்தப் பொருளாக நிற்கின்றான். உலகுயிர்கள் உண்மையில் இல்லை என்றும் இறைவனே அவையாகத் தோற்றுகிறான் அல்லது வடிவு கொள்கிறான் என்றும் சொல்லுவதைச் சைவ சித்தாந்தம் மறுக்கிறது; "சரீர சரீரி"க் கொள்கையும் அதற்கு உடன்பாடன்று. கலப்பால் அந்தந்தப் பொருளாக நிற்பதே அதன் கொள்கையாகும்.

## மரம் முந்தியா? வித்து முந்தியா?

உயிர்கள் பலவாக இருத்தலை நாம் காண்கின்றோம்; அவை அநாதியே பல என்றும் சொல்கிறோம்.

அநாதியே அவை பலவாக இருத்தற்கு அநாதியே அவை தம்முள் வேற்றுமை இருக்க வேண்டும். இவ்வேற்றுமையே அவற்றிற்குரிய தனி இயல்பாகும். உயிர்களுக்குத் தனி இயல்புகள் உண்டென்பதற்கு மேற்கோள்:-

"ஆன்மாக்களுக்குத் தனித்தனிச் சிறப்பிலக்கணங்கள் உள என்பது பெறப்படும். அற்றாக வினன்றே மலசத்திகள் பலவாயின"

—சிவஞானபாடியம் 6ம் சூத்திரம் 2ம் அதிகரண உரை.

"எண்ணிறந்த ஆன்மாக்களுக்கும் இலக்கணத்தால் தம்முள் தனித்தனியுளவாகிய வேற்றுமை உணரவல்லார்க்கன்றி அறியக்கூடாதென்றறிக"

—சித்தாந்த மரபு கண்டன கண்டனம்.

## வீடுபேற்றில் மலம் உண்டா?

"மலவெப்பம் சிவபோகத்தை மிகுவிக்கும்" என்பது பிழையாகும். சிவபோகம் தனித்த (absolute) இன்பமாகும். உலகியல் இன்பம் போலத் துவந்துவத் (Relative) தன்மையுடையதன்று. எனவே அதனை மிகுவிக்க வேறோர் எதிர்நிலை வேண்டுமென்பது பொருந்தாது. மேலும் மலத்தால் ஏற்பட்ட முன்னைத் துன்பமே முத்தியில் இன்பத்தை மிகுவிக்கலாமாதலால் முத்தியில் மலம் உண்டென்பது இதனால் உறுதியாகாது; உறுதியாகவில்லையேல் அது மாணவர் வினாவிற்கு விடையாகாது. ஆகவே இந்த வகையாலும் இவ்வுரை பொருத்தமற்றதாகிறது.

சிவஞானசித்தியார் "நெல்லினுக்குத்தவிடுமிகள்" என்னும் செய்யுளில் "மலம் விட்டே நீங்கும்" என்பதற்கு மலபந்தம் விட்டே நீங்கும் எனப்பொருள் கொள்க. சிவாக்கிர யோகிகள் இச்செய்யுளுக்கு மலம்

தன்தொழிலை விட்டு நீங்கும் என உரை எழுதியிருப்பதன் திறன் ஓர்க. மலத்தின் தொழில் பந்தித்தல் ஆகும். பந்தம் நீங்கும். நித்தியப் பொருளாகிய மலம் இருக்கும், முத்தியில் சிவம் ஒன்றே காட்சிப்பட மற்றவை யாவும் அதனுள் மறையுமே அன்றி இல்லாமற் போகமாட்டா.

சிவப்பிரகாசத்துள் "அழிந்திடும் சத்தி" என்பதற்குக் குணம் கெட்டுக் குணி இருக்கும் எனக் கொள்ளாமல், மலம் தன் சத்திமடங்கிக் கீழ்ப்படும் என்று பொருள் கொள்க. சிவஞானபாடியம் 11-ம் சூத்திரம் 2-ம் அதிகரணத்தில் "மலம் நசித்தலாவது தனது மறைத்தற் சத்தி மடங்கிக் கீழ்ப்படுதல் மாத்திரையே பிறிதன்று" என எழுதியிருப்பது காண்க. "அழிதல்" "கெடுதல்" என்பதற்கு "மடங்குதல்' என்பதே சித்தாந்தப் பொருளாகும். இம்மடங்குதலும் முத்தான்மாவை நோக்கவே யாதலால், மலம் தன்னளவில் என்றும் போல் இருக்குமெனஅறிக.

சிறந்த சைவ நூலாகிய வடமொழி அட்டப்பிரகணத்துள் அருவசிவசமவாதம் அதிகம் இடம் பெற்றுள்ளது. உயிர் முத்தியில் ஐந்தொழில் ஆற்றுவிட்டாலும் அஃது எல்லாம் வல்ல தாயும் எல்லாம் அறிவதாயும் இருக்கும் என்பது அருவ சிவசமவாதமாகும். "மலம் நித்தியப் பொருளாதலால், உயிர் இறைவனை விடுத்து வேறொன்றினை அறியத்தலைப்படில் அதுபற்றும்; எனவே முத்தியில் அஃது எல்லாம் வல்லதாயும் எல்லாம் அறிவதாயும் இருக்க வராது," என்பது சித்தாந்த சைவக் கருத்தாகும். "இத்தை விளைவித்தல் மலம்" என்பது இதனையே உணர்த்துகிறது. முத்தர்களுக்கு எண் குணத் தோய்வு இறைவனை அறியவே பயன்படுகிறது. வட

மொழிச் சைவ நூற்களில் அருவசிவசமவாதம் பரவி யுள்ள வேகத்தை அறிந்தால்தான் நாம் கூறியுள்ள இவ்வுரையின் பொருத்தமும் அவ்சியமும் புலனாகும்.

முத்தர்களுக்கு மலம் பற்றுமே என்னும் அச்சம் இருக்கமுடியாது. இன்பப்பெருக்கில் திளைப்பதால் அந்த உணர்வே அவர்களுக்கு வராது என்பது சரியே. என்னதான் இன்பத்தில் திளைத்தாலும், பிறவுயிர்க்குத் தாம் பெற்ற இன்பத்தை வழங்க முயலாமல் அவர்கள் இருக்கலாமா? இறைவன் வழங்கட்டும் என்று வாளா இருப்பது தன்னலமாகாதா? "தானென அவனென வேறின்றி" இன்பப்பெருக்கில் திளைக்கும் அவர்களுக்கு அவ்வுணர்வு தோன்றுதென்றாலும்' அது குற்றம்தானே? இதற்கு என்ன விடை? அவர்கள் இறைவனை விடுத்து வேறொன்றினை நோக்கினால் மலம் பற்றும்; மலத்தால் பற்றப்பட்டால் பிறருக்கு இன்பத்தை வழங்க இயலாது. எனவே தம்மால் முடியாத செயலென அவர்கள் உணர்ந்து, அதனை இறைவனிடத்தே விடுத்துச் சிவபோகத் திளைவினையே பயனாகக் கொண்டு அமைகின்றனர் என்று தானே விடை கூறவேண்டும்? இவ்விடையே "இத்தை விளைவித்தல் மலம்" என்பதில் அமைந்திருக்கிறது. சுபக்கக் கருத்துக்களைக் கூறும் இடங்கள் இங்ஙனம் இயல்பாகவே பரபக்கக் கருத்துக்களுக்கு மறுப்பாக அமைவதை மெய்கண்ட நூற்களில் பரக்கக் காணலாம்.

எண்டெடுத்துக் காட்டப் பெற்றுள்ள மேற்கோட்களால் இந்நூற்கட்டுரைகள் முன்னோர் கருத்தினை விரித்து விளக்குகின்றனவே அல்லாமல் புதிதாகப் படைத்துக் கொண்டு எதனையும் கூறவில்லை என்பது இனிது புலனாகும்.

திருஉலகநாதன்



# பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 14 | 6 | அளவற்ற | அறிவற்ற |
| 17 | 14 | படைக்கப்பட்டதுவையே | படைக்கப்பட்ட [வையே |
| 26 | 24 | இத்துன்பத்தை நீக்க | இத்துன்பம் நீங்க |
| 50 | 25 | உரித்தான | உரியவான |
| 59 | 21 | ஏற்படுபடுகிறது | ஏற்படுகிறது |
| 65 | 28 | இந்ருதால் | இருந்தால் |
| 74 | 10 | கலந்து | நிறைந்து |
| 83 | 29 | உரித்தான் | உரியவான |
| 90 | 15 | நிறுத்தி வைத்து | நிறுத்துவைத்துப் |
| 141 | 8 | கழிந்தாலும் | கழித்தாலும் |

See only the good
in everything



